ஓம்

சற்குருவே நம:

# வதாந்தபோதினி

அல்லது

## சமரஸஞானபோதினி.

205
6513
R65




இஃது

PHILOSOPHIC INQUIRER பத்திராதிபராயிருந்த
தத்துவவிசாரிணி

புதுவை-முருகேச முதலியாரால்

எழுதி

சீலசம்பன்னராயும் வித்யாபிமானியாயும் விளங்கிய

கொண்ணூர்-லோகநாத முதலியாரது

ஞாபகச்சின்னமாகச் சமர்ப்பித்து

கோ-செல்வரங்கம் அண்டு கோ

அவர்களால்

சென்னை

மநோன்மணி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

காளயுக்தி௵ வைகாசி௴—May 1918.

COPY-RIGHT REGISTERED.

இதன் விலை அணா-8.

20-5

# ரெஜிஸ்டர் அறிவிப்பு.

இதனுல் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்: வதாந்த போதினி அல்லது சமரஸஞான போதினி ன்னு மிந்நூல் எங்களால் பதிப்பித்து பிரசுரம் சய்து, காபிரைட் ரெஜிஸ்டரும் செய்யப்பட்டுள் ‌ளது. இப்புஸ்தகத்தை யாவராயினும் எங்களது அல்லது எங்களுத்தரவு பெற்றவரது அநுமதி ‌யின்றி அச்சிடுவாராயின், 1867ஆ௵த்திய 25-வது ஆக்ட்டு, 20-வது பிரிவு, 6-வது உட்பிரிவின்படி, நாங்கள் கோரும் நஷ்டத்திற்கும் இந்தியன் பீனல் கோடு சட்டப்படி குற்றத்திற்கும் உள்ளாவார்கள் என்பதைக் கவனிக்கக் கோருகிறேம்.

இப்படிக்கு,

கோ. சேல்வரங்கம் அன்டு கோ.,

மநோன்மணி விலாச அச்சுக்கூடம்,

29-நெ. வைத்தியநாத முதலியார் வீதி,

சென்னை.

# பொருளடக்கம்.



# நூன்முகம்



கடல் சூழ்ந்த இப்பூவுலகத்துள்ளே மதங்கள் பலவுள. அவைகளுள் அதிப் புராதனவேதங்கள், உபநிடதங்கள், ஸ்மிருதிகள்—இவைகளின் மஹிமையும், சித்தாந்த வேதாந்த சாஸ்திரங்களின் பெருக்கமும் உடையது நமது ஆரியமதமே யென்பது பன்மதமாய்ந்துணர்ந்தோர் துணிபாம். இப்பரந்த பூமியிலெழுதப்பட்டதாயுள்ள மதநூல்களெல்லாவற்றிலும் ரிக்வேதமே அதிப்பழமையானது, அதி முதன்மையானது என்பது பெரும் புகழ்பெற்ற பண்டிகர் மாக்ஸ் முல்லர் (Max Muller) கொண்ட அபிப்பிராயம். இதனுலே எல்லாத் தேசங்களிலும் நாகரிகப் பழமைபெற்றது நம்தேசமே யென்பது நன்குவிளங்கும். எந்நாட்டிலும் மதங்களும் மதக்கோட்பாடுகளும் பல்வேறுனவையாயினும், மதநம்பிக்கைமட்டுமே யுடையார் பெரும்பாலராயும், மத ஆராய்ச்சியுடையோர் சிறுபான்மையராயுமேயிருக்கிறுர்கள். இத்தகையோரிலும் தத்துவவிசாரமுடையார் மிகச் சிலரேயாம். ஆதலின், பூர்வ மத விவரங்களும் வரலாறுகளும், நமது நாட்டிற்கேயுரிய வேதாந்த சாஸ்திரக்கொள்கைகளும், ஓரவாரமின்றி யாராய்ந்துணர்தல் அறிவுடையோர் கடனுகும். "எல்லாம் சோதி, நன்மை திடமாய்ப்பிடி" என்பது ஸெயின்ட் பால் (St. Paul) வாக்கியம்.

முன்னேராலும் பின்னேராலும் இக்காலத்தாராலும் வேதாந்த மதங்களைப்பற்றிய நூல்கள் தனித்தனியாக பல செயப்பட்டுளவாயினும், பிரதானமான வேதாந்தங்களின் கருத்துகளை யொருங்கு திரட்டி, பக்ஷபாதம் தரபிமானமின்றி, நியாய கண்டனத்துடன் விளங்கச்செய்யும் தமிழ்நூல் யானிதுகாறுங் கண்டதில்லை. இஞ்ஞாயத்தால் 'வேதாந்தபோதினி' அல்லது 'சமரஸஞானபோதினி' என்னு மிச்சிறுநூல் நூதன நூலென்றே கூறத்தகும். இப்புஸ்தகத்தில் எழுபதுக்குக்கிட்ட அரிய, அதிமுக்கியமான விஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூலெழுதுவதில், யான் சித்தாந்த வேதாந்தங்களைப்பற்றிப் பேசுஞ் சில பிரதானமான நூல்களை யாராய்ந்து, சில விடங்களில் அவற்றுளுள்ளபடியேயாகவும், சில விடங்களில் சூசனமாகவும், வேறு சிலவிடங்களில் எனது ஊகமுங்கூட்டி விரிவாகவுமெழுதினேனன்றி, எல்லா மபூர்வத்துவமாகச் செய்தேனன்று.

மதகண்டனங்கள் செய்த விடங்களில் உள்ளதை வெளிகாட்டி ஞாயகண்டனஞ் செய்தேனல்லது, இல்லதைக்கொண்டு தோஷாரோபணஞ் செய்திலன். ஆதலின், அந்யாயவாதங்களைத் தூஷணங்களாகக்கொள்ளாமை அறிவுளோர்கடனும். தர்க்கித்த அவ்வவ்விடங்களிலெல்லாம் தவறாது தக்க பிரமாணங்களும், பெரியோர் மொழிகளாய மேற்கோள்களும் காட்டியுள்ளேன். உலகத்துள்ள பல மதஸ்தரும் தத்தம் மதங்கள் கடவுளாலேயே யளிக்கப்பட்டனவென்னும் நம்பிக்கையுடையராயிருக்கிறார்கள். இது சுத்தத் தப்பானவெண்ணமேயாம். கடவுளாலேற்பட்ட மதமொன்றுமேயில்லை. எம்மதமும் பெருமதியுள்ள மனிதனாலாக்கப்பட்டதேயாம். கடவுள் தம்மைத் துதித்துத் தொழும்படி தாமேயறிவிப்பாரா? ஒரு மதத்தைத் தழுவவும்,பிறிதொருமதத்தையிகழவும்போதிப்பாரா? தோஷமிலா மதமேயில்லை. குற்றமிலாக் கோட்பாடில்லை. தவறிலாத் தத்துவநூலில்லை. ஸர்வஸம்மதமான மதமுமில்லை நீதிநிரம்பிய புத்தமதம் பிரமத்தில் லயிப்பதே முக்தியெனக்கூறாது, அலையுமனதிற்கோராறுதலுஞ் செய்யாது, அறுதியே கோரி அதுவே முக்தியெனவறைதலால் அதனை, ஆழ்ந்த கருத்துள்ளவோர் ஐரோப்பிய பண்டிதர்—'எலும்பிலா - எலும்புக்கூடு' (boneless - skeleton) எனவழைத்தார்! இப்புஸ்தகமெழுதவெனது வர்த்தனைசொற்பமே. கைம்மாறோ கிடையாது. இந்நூலை யெப்படியாவது முடிக்கப் பன்முறையென்னை யூக்கிவிட்டவெனது பழையநண்பர் சிலரெண்ணப்படி யிதனை யின்னும் விரிவாக வெழுதாமைக்குக் காரணம், இக்காலத்து அச்சிடற்குத் தேவையான காகிதமுதலிய உபகரணங்களின் மிதமிஞ்சிய விலையேற்றமேயாம்.

இத்தகைய நூலை யெழுதி பிழைபார்ப்போர்(proof-readers) இல்லாத அச்சுச்சாலையில் ஒருவருதவியுமின்றி யச்சிடமேற்கொண்டால் அச்சுப்பிழைகளிராமலிரா. ஆதலின் பிழைகாணின் பொறுத்தல் நல்லோர்க்கழகாகும். பணிவுள்ள விந்நூலையியற்ற யான்கொண்ட சோதனைபிரயாசத்தை விவேகிகள் நன்கு மதிப்பாராயின், அதுவே யெனக்குப்போதிய கைம்மாறாகக் கணிப்பேன்.

சென்னை
காளயுக்தி௵
வைகாசி௴ ௧௬௳
29th May 1918.

முக்தர்பிரியன்
மதமிலி
புதுவை-முருகேசன்.

ஓம்

பரப்பிரஹ்மணேநமः

# வேதாந்தபோதினி

அல்லது

## சமரஸஞானபோதினி,

---

### மதவிசாரணை.

---

திருஸ்யமாயுள்ள பிரபஞ்சம் உண்டானதெப்படி? அது தானு உண்டானதா, அல்லது அதைச் சிருஷ்டித்த கர்த்தா ஒருவன் உளனு? அவன் தன்மையாது? பிரபஞ்சத்துக்கும் நமக்கும் உள்ள சம்பந்தம் யாது? பிறப்பிறப்பென்பது யாது? உலகத்தில் நாம் உள்ளவரையில் உணரவேண்டியவிஷயங்கள் யாவை? நாம் இறந்தபின் நமக்குவரும் கதியாது? இன்னும் இவைபோன்ற கேள்விகட்கெல்லாம் தக்க சமாதானஞ்சொல்லவும், அலையுமனதுக்கு ஆறுதல்செய்யவுமே எக்கண்டத்திலும், எத்தேசத்திலுமுள்ள அறிவிற்சிறந்த பெரியோர்கள் பல வேறு மதங்களை ஸ்தாபித்தார்கள். ஆயின், எந்நாட்டிலும் கல்வியும் நாகரிகமுமற்ற மனுஷர்கள் கட்டிவைத்திருக்கும் மதங்களுக்கும் அவைகளைக் கொண்டாடும் மனிதருக்கும் கணக்கேயில்லை! அவ்வாபாச மதங்களைப்பற்றி இங்கெழுதுவது நமது கடமையுமல்ல, அவசியமுமில்லை. மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்தானே! கல்லாத மூடனுக்கு கூடை செங்கல்லும் பிடாரிதானே! என்றாலும் இப்பரந்த பூமியிலுள்ள ஐந்துகண்டங்களிலும் நாகரிகமான மனிதர்கள் அநுசரிக்கும் மதங்கள் சிலவேயாம். அவை ஹிந்துமதம், பௌத்தமதம், அருகமதம், பாரசிகமதம், கன்பியூஷஸ் மதம் (Confucianism), யூதர்மதம், கிறிஸ்துமதம், மகம்மதுமதம் என்பனவாம்.இவைகளில் நமது இந்துமதமே யாவற்றிற்கும் புராதனமானது. அது ஸநாதன (நித்திய

மான) மதமென்றும் சொல்லப்படும். இம்மதமானது ரிக் யஜுர் ஸாம அதர்வ என்னும் நான்கு வேதங்களையும் நன்குணர்ந்த ப்ரம்மஞானிகளாய், பரிசுத்த புருஷர்களாயிருந்த மஹரிஷிகளால் வெளியிடப்பட்டதெனப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். மேற்சொன்ன மற்ற மதங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நமது ஹிந்துமதத்தினின்றே ஜநித்தவையென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. மதங்கள் பலவாயினும், அவைகளின் கொள்கைகள் வெவ்வேறாயினும், ஜகம், ஜீவன், பரம்—உலகம், ஜீவன், ஈஸ்வரன்—பாசம், பசு, பதி—என்பவைகளைப்பற்றி விசாரிக்கப் புகுந்தவைகளேயல்லாமல் வேறல்ல. 'ஏகமேவ அத்விதீயம்'—இரண்டற்ற ஒருவரே அவர்,—கடவுள், பிர்மம், பரப்பிர்மம்—என்பது வேதவாக்யம். இதுவே சத்யம். உண்மை யிப்படியிருக்க, நமது ஹிந்துமதமே இருகூறாகி, அவற்றில் சைவர், வைஷ்ணவர், என இருபிரிவினர் தோன்றி, நாமரூபமற்ற பிர்ம்மத்துக்கு, நாமமும், ரூபமும் உண்டாக்கி, பிரபஞ்சசிருஷ்டி, திதி (ரக்ஷணை), லயம் (ஐக்கியம்), என்னும் முத்தொழில்களையும் நடாத்த அக்கடவுளே பிரமா, விஷ்ணு, ருத்ரன் என மூன்று முக்கிய நாமங்களாற் சொல்லப்படுகிறாரென்று கூறுகிறார்கள். கர்த்தா ஒருவரேயன்றிப் பலரல்லராயினும், சைவர்கள் சிவனே கர்த்தா, மற்றிருவரும் கர்த்தாவல்லரென்றும்; வைஷ்ணவர்கள் விஷ்ணுவே கர்த்தா, மற்றிருவரும் கர்த்தாவல்லரென்றும், நெடுங்காலமாய் போராடிக்கொண்டு, இன்றுவரையில் பெரும்பாலும் இவ்விருவரில் ஒருவர்மேல் மற்றொருவர் தீராப்பகைகொண்டேயிருக்கிறார்கள். இதுபற்றியே, "சமயவாதிகள் தத்தம் மதங்களில் அமைவதாக அரற்றி மலைந்தனர்" என்றார் மாணிக்கவாசகர்.

"அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
    யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
    யகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
    தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
    தந்தெய்வ மென்றெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது
    வெங்கணும் பெருவழக்காய்

யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
யென்றைக்குமுள்ள தெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவது
கருத்திற்கிசைந்த ததுவே
கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலிசெய்குவாம்.''—தாயுமானவர்.

தெள்ளமுதுக்கொப்பான இத்திருப்பாடலின் கருத்தை உள்ளபடியுணர்ந்தவர், ஒருமதத்தை இழிவாகவும் மற்றோர்மதத்தை உயர்வாகவும் கொள்ளார். தம்மதச்சார்பின்றி பிறமதத்தைத் தழுவிநிற்பவரை நிந்தியார். சைவ வைணவத்வேஷத்தைப்பற்றற நீக்கிநிற்பார். சமயத்துக்காக யாவராகிலும் ஒருவரை வெறுக்கார். வடகலை தென்கலைப் பித்தமொழித்திருப்பார். சைவத்துரபிமானத்தடிப்பைவிட்டு விலகியேயிருப்பார். எச்சமயத்தோரையும் தூஷியார். இதுவே நல்வழி, சன்மார்க்கம். இதுவே அறிவுடையோர் கொள்கை. இதுவே பெரியோர்கடைப்பிடி. இதுவே ஞானிகள் துணிபு:

"எல்லாச்சமயத்தியல்பு மறிந்தவர்
நில்லாரவற்றூ டென்றுந் தீபற
நீங்கிற்பழியாதென்றுந் தீபற.''

"ஆதலான் மேலாநெறியடைந்தோர்க்கொரு
சாதிசமயமேதுந் தீபற
சங்கற்பநாசரென்றுந் தீபற.''—அவிரோதவுந்தியார்.

மேற்சொன்ன ஹிந்துமதமானது ஷண்மதங்களாகப் பகுக்கப்பட்டிருக்கின்றது. அவை சாங்கியம், நியாயம், வைசேஷிகம், மீமாம்சம், யோகம், வேதாந்தம் என்னும் அறுசமயங்களாம். இவைகட்கு ஷட்தரிசனங்களெனவும் பெயருண்டு.

---

## சாங்கியம்.

இம்மதம் கபிலமுனிவராலே ஆக்கப்பட்டது. பிரபஞ்சத்திற்குக் காரணமாய், அருவாய், அழிவில்லாததாய், எங்கும் வியாபகமாய், ஜடரூபமாயிருக்கும் மாயை உண்டென்றும்; அருவாய், வியாபகமாய், பலபேதமாய் அறிவுமயமாயிருக்கும் ஆத்மா உண்டென்றும்; இவ்வாத்மாவுக்கு அநாதியாக அறிவொடுகலந்த அஞ்ஞானவசத்தால் சுகதுக்கஞானம் உண்டென்றும்; மாயையையும் ஆத்மாவையும் பிரித்தறியும் ஞானத்தாலே அஞ்ஞானம்

போய்ஆத்மா முத்தியடையுமென்றும்; ஆத்மாக்களுக்கு வேறே ஈஸ்வரனொருவனில்லையென்றும் இம்மதம் கூறுகின்றது. இது ஒருயோகமார்க்கமதமே. இது சேஸ்வரசாங்கியம், நிரீஸ்வரசாங்கியம் என இருவகைப்படும். அத்வைதத்தை ஒட்டியிருப்பது சேஸ்வரசாங்கியமெனவும், கபிலமதசாங்கியம் நிரீஸ்வரசாங்கியமெனவும் சொல்லப்படுகின்றது. சாங்கியத்துக்கும் வேதாந்தத்துக்கும் உள்ள பேதம் என்னையெனின் சாங்கியம் ஆத்மாவேறு, மற்றைத் தத்துவங்கள் வேறென்பது; வேதாந்தம் பரமாத்மாவைத்தவிர மற்றொன்றுமேயில்லையெனச் சாதிப்பது.

---

## நியாயம்.

இம்மதம் கௌதமரிஷியாற் செய்யப்பட்டது. உத்தேசம், அநுமானம், பிரத்யக்ஷம் என்னும் மூன்று பிரமாணங்களிலும் பிரத்யக்ஷமே சிறந்ததெனக்கொண்டு பொருள்களை நிச்சயிக்கக் கூறும் மதம். இது கணாதர்செய்த வைசேஷிகம்போலவே தர்க்க நூலெனப்படும்.

---

## வைசேஷிகம்.

இது கணாதமதமெனச் சொல்லப்படும். கௌதம-நியாயம் திரவியம் பதினாறென, இஃது ஏழெனக்கூறும். தரிசனங்கள் ஆறனுள் ஒன்றாகிய இது, ஆத்மாநித்தியமாய், அருவாய் எங்கும் வியாபித்திருக்கிறதென்றும்; அது ஜீவாத்மா பரமாத்மாவென இருவகையாகுமென்றும்; பரமாத்மா ஈஸ்வரனென்றும், ஜீவாத்மா தேகந்தோறும் வேறுபட்டுப்பலவாயிருக்கு மென்றும்; ஒவ்வோர்ஆத்மாவுக்கும் ஞானத்துக்கான மனமுண்டென்றும், ஆத்மாவுக்கு மனத்தோடு கலப்பால் ஞானம் ஜனிக்கிறதென்றும், அதனால் புண்ணிய பாவத்துக்கேற்ற கர்மங்களுண்டாகு மென்றும்; எல்லாம்வல்ல ஈஸ்வரனுக்கே மனச்சையோகத்தாலே உண்டாகும் ஞானமேயன்றி இயற்கைஞானமில்லையென்றும்; இவ்வாறே திரவியங்களின் தன்மையை அறியும் ஞானத்தால் ஆத்மாக்களுக்குக்கர்மம் நசிக்குமென்றும்; கர்மம் நசிக்கவே மேற்சொன்னபடிதோன்றும் ஞானமும் தாண்டியிருப்பதே முக்தியெனவும் கூறுகின்றது. இது பதார்த்த நிச்சயம் பண்ண அதிமுக்கியமாதலின் ஒவ்வொருவரும் ஓதற்குரியதாம். நியாயசாஸ்திரம் போல,மதநூலாராய்ச்சிக்கு வைசேஷிகம் இன்றியமையாதது.

## மீமாம்ஸம்.

மேற்சொன்ன வேதங்கள் நான்கில் ஒவ்வொன்றிலும் கர்ம காண்டம், பக்திகாண்டம், ஞானகாண்டம் எனும் மூன்றும் அடங்கியிருக்கின்றன. கர்மகாண்டம் ஸ்வர்க்கத்தை அபேக்ஷிப் பவராலே செய்யப்படும் ஜோதிஷ்டோமம் முதலிய புண்ணியகர் மங்களைக் கூறுவது. பக்திகாண்டம் கடவுளிடத்தே பக்திசெய்வ தைக்கூறுவது. ஞானகாண்டம் தேக அநித்தியத்தை பிரத்திய க்ஷமாகக்கண்டு, நானென்னும் அகங்காரத்தை ஒழித்து, எவ்வ கைப்பற்றுமற்று, முக்தியடைதற் கேதுவான மெய்ஞ்ஞானத் தைக்கூறுவது. இம் முக்காண்டங்களில் கர்மகாண்டமே வேதா ர்த்தத்தைத் தருவதென்றும், சத்கர்மங்களே ஸ்வர்க்காதி பதவி களைத் தருமென்றும் சாதித்து, ஜைமினிமுனிவர் மீமாம்ஸை யென்று ஓர்சாஸ்திரம் செய்தார். இது கிரியாகாண்டத்தைப் பற் றியே வியவகரிப்பது: இதற்குப் பூர்வ மீமாம்ஸை யென்று பெயர். இம்மீமாம்ஸையின் கருத்து என்னையெனின்,—வேதம் யாராலும் செயப்பட்டதன்று, எப்போதும் உள்ளது; பிரபஞ்சம் நித்தியமானது; நல்வினையேசெய்யவேண்டும்; தேகத்துக்கு வே ருக ஆத்மாஉளது; ஆத்மாவோ ஒன்றல்ல, பலவாகும். ஆயினும் ஆத்மாக்களுக்கு வேருக ஈஸ்வரனொருவனில்லை யெனலாகும்.*

---

## பாதஞ்சலம்.

இம்மதம் பதஞ்சலிமுனிவராலே உண்டாக்கப்பட்டது. இது, பிரபஞ்சம் மாயாகாரியமென்றும், மாயையும் ஞானமய மான ஆத்மாவும்உண்டென்றும்; எல்லாவற்றையும் த்ருஷ்டித்து நிற்கும் கடவுளொருவர் ஆத்மாக்களுக்கு வேருயிருக்கின்ரு ரென்றும் கூறுகின்றது. இப்பதஞ்சலிமுனிவரே யோகசூத்தி ரம்செய்தவர். யோகம் ஹடயோகம், கர்மயோகம், ராஜயோகம் என மூவகையாம். யோகமென்ருல் ஜீவாத்மாவை பரமாத்மா

---

* இச்சென்னையில் பெருந்தமிழ்ப்பண்டித ரெனப் பெயர்பெற்று, பிரெஸிடென்ஸி காலேஜில் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய இயற் றமிழாசிரியர் - திருத்தணிகை விசாகப்பெருமாளையர், (கஅசுஎ - ல்) தாமெழுதிய 'சமயத்தோத்தி' என்னும்நேர்த்தியான மிகச்சிறு புஸ்தகத் தில், இம் 'மீமாம்ச-சாங்கிய மதஸ்தரை நிரீஸ்வரவாதிகளென்று சொல் லவேண்டும்' என்கிருர்.

விடத்து ஐக்கியம் பண்ணல் என்பது பொருள். பஞ்சேந்திரியங்களையும் தன்வசமாக்கி மனதைப் பிரமத்தின்பால் நிறுத்துதல் எனலும்; சித்தத்தை பிரமத்தினிடத்து லயப்படுத்தல் எனலும் ஆகும். பிராணயாமத்தை பத்மாசனமுதலியவை மேற்பயிற்சிசெய்தல் ஹதயோகம். பிராணயாமம் என்பது சுவாஸமடக்கல் முதலியன. பலாபேக்ஷையின்றி (பயன் கருதாமல்) கர்மஞ்செய்துகொண்டே பிரமத்தியானஞ்செய்தல் கர்மயோகம். உலகவாஞ்சையை முற்றத்துறந்து மனதைப் பிரமத்தினிடத்தே நிறுத்துதல் ராஜயோகம்.

---

## ராஜயோகம்.

இம்மூன்றனுள் ராஜயோகமே சிறந்தது. ராஜயோகத்தில் எட்டு அநுஷ்டானப்படிகளுள. அவைகள் அஷ்டாங்கயோகமெனப்படும்: இயமம், நியமம், ஆஸனம், பிராணயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி.

---

## இயமம்.

இயமம் என்பது கொல்லாமை (அஹிம்சை), பொய்சொல்லாமை, திருடாமை, பிறனில்விழையாமை (பிறர்மனைவியின்மீது காதல்கொள்ளாமை), கள்ளுண்ணாமை, பிச்சையெடுக்காமை, தானம்வாங்காமை முதலியனவாம். பஞ்சமாபாதகங்களை நிவர்த்திசெய்யப் பழகுதலாம். மனிதனுக்கு இயற்கையிலேயே உண்டாயிருக்கும் துக்கத்தை நீக்கி சுகத்தைத்தருவதே ராஜயோகத்தின் அபிப்பிராயம். மனம் பற்பல வியாபாரங்களிற் செல்லுதலால் துக்கமுண்டாகிறது. அவ்வியாபாரங்களைக்குறைத்துக்கொண்டே வருகை தான் சுகமடைய நல்லயுக்தி. அதெப்படியெனில், முதலாகவே துர்வியாபாரங்களையெல்லாம் ஒரேதடைவையிலல்லாமல், சிறிதுசிறிதாக ஒழித்தல்வேண்டும். பின்பு சற்காரியங்களிலே மனதை நாடும்படிச் செய்யவேண்டும். தர்மங்களை மேற்கொண்டொழுகுதலால், செய்பவனுக்குத் திருப்தியுண்டாகும்; மனமும் சற்றே விஸ்ராந்தியடையும். மனோவிஸ்ராந்தியே யாவரும் தேடவேண்டியகாரியம். இயமாதிகளை அநுஷ்டித்துவரும் மனிதனை சிங்கம், புலி முதலிய துஷ்டமிருகங்கள் எவ்வித தொந்தரவுஞ்செய்யா எனக்கூறலாம். இளம்

பருவத்திலேயே காட்டுமிருகங்களை அன்புடன் பழக்கிவரும் (Circus players) விநோத சாலைக்காரர் முன்னே, சிங்கமும் யானையும், புலியும் மறியும் ஓர் விகற்பமின்றி விளையாடவும், ஒருங்கேயே ஜலபானஞ் செய்யவும் நாம் பார்க்கின்றோமல்லவா? களவுசெய்யாமை-பிறர்பொருளைத் தம்பொருள்போல் பாவித்து, மனசாக்ஷிக்கு ஒப்படங்கும் நடத்தை. என்ன துன்பம்வந்தாலும், எவ்வித நஷ்டமடைந்தாலும், எக்கஷ்டம்வந்தாலும், எவர் பகை நேரிட்டாலும், பொய்சொல்லாமையை விரதமாகக்கொண்டு, சத்தியத்தையே கடைப்பிடித்து ஒழுகும் புருஷன்யாது சொல்லினும் அது மெய்யே ஆகும். அப்புருஷனுக்கு உலகத்தில் எல்லா மேன்மையும் கிடைக்கும். இதற்குத் திர்ஷ்டாந்தம்: இங்கிலாண்டுதேசத்தில், இருபத்தைந்து வருஷத்துக்கு முன் காலஞ்சென்ற சத்தியரூபியாகிய Charles Bradlaugh என்னும் பேர்கொண்ட நாஸ்திகமன்னன், தனது வாழ்நாள் முழுதும் மெய்யே பேசி, வாக்குங் காயமுமொத்து மெய்யாகவே நடந்து, உயர்வானவனென்றும் தாழ்வானவனென்றும் சற்றேனும் பேதம்பாராட்டாமல், யாவர்க்குமே பொதுநன்மைசெய்து, அரும் பெருங்காரியங்கள் முடித்துவந்ததினால் அவர்க்கு ஐரோப்பாகண்டத்தில் நடந்த பெருஞ்சிறப்பும், அவரிறந்தபோது (British Parliament Members) இங்கிலாந்து மஹா மந்திராலோசனை சபையார் எல்லாக்கக்ஷியாரும் ஒன்றுகூடி துக்கித்ததும், மற்றெத்தேசத்தாரும், எந்நாட்டாரும், நாகரிகமுள்ள உலக முழுதும் துக்கங்கொண்டாடியதும் யாவர்க்கும் தெரிந்தவிஷயமே! இப்பெரும்புகழ்பெற்றப் பெரியோனை Annie Besant அம்மையார் நினையாதநாளும் பேசாதநாளும் இல்லை!

> "எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
> பொய்யாவிளக்கே விளக்கு."—திருக்குறள்.

யோகியாகவிரும்புவோன் ஸ்திரீசம்போகத்தில் ஆசைவைத்தலே கூடாது. ஸ்திரீசம்போகம் தேகவன்மையைக்குறைக்கும். தேகவலி குறையவே மனோதிடமும் குறையும். புத்திகூர்மையும் தெளிவும் மழுங்கும். மனோசுத்தியும் நீங்கும். யோகியாக ஆசைகொள்வோனுக்கு தேகவலிவும், மனோதைரியமும், புத்திதெளிவும், காயசுத்தியும் அவசியம்வேண்டும். ஸ்திரீசம்போகம் இவையாவற்றையும் கெடுக்கும். ஆகையால் யோகத்திலிழிபவ

னுக்கு ஸ்திரீசம்போகம் அடாதகாரியம். அது ஆயுளை அறுக்கும் வாளாகும்.

கள் முதலிய லாகிரிவஸ்துக்களைப் பானம்பண்ணல் கிரகஸ்தர்கட்கே தகாதகாரியமென்று ஆன்றோர் கூறியிருக்க, அதை யோகாப்பியாசி கனவிலும் நினைக்கக்கூடாதென்பது சொல்லவும் வேண்டுமோ? மதுபானஞ்செய்தல் தேகாரோக்கியத்தைக் கெடுப்பதன்றி மனத்தூய்மையும் அழிக்கும்; ஆயுளையும் வெகு சீக்கிரத்தில் குறைக்கும். கள்ளுண்பான், அறிவு மயங்கிக்கிடத்தலால் நஞ்சுண்பானுக்குச் சமானமென நாயனார் கூறியுள்ளார். ஐயம்புகாமை, தானம் பெறாமை—இவை நற்காரியங்களேனெனின், பிச்சை அல்லது தானம் பெறுபவன் தன் சுதந்தரத்தையிழந்து, ஈவோனுக்குக்கடமைப்பட்டவனாகி ஒருவித அடிமையாகிறானாதலின். மேலும் ஸ்வதந்திரமும் மனப்பரிசுத்தமும் யோகிகளுக்கு அவசியம் வேண்டுமாதலால், ஐயம்புகாமை, தானம்வாங்காமை எனும் தர்மங்களை அவர்கள் அனுஷ்டித்தல் வேண்டும்.

---

## நியமம்.

நியமமாவது சௌசம் (தேகசுத்தி), உள்ளவரையில் திருப்தி, சந்தோஷம், ஜபதபங்கள், வேதாத்தியயனம் செய்தல், சகல கர்மங்களையும் ஈஸ்வரார்ப்பணம் பண்ணல் முதலியவாம். இயமம் பலித்தவனுக்குத்தான் நியமம் எளிது. இயமாப்பியாஸத்தில் மனமானது துர்வியாபாரங்கள் யாவும் ஒழித்துவிட்டபடியால், நியமத்தில் ஆசார அநுஷ்டானம், ஜபதபங்கள் செய்தல், பிரமத்தியான முதலானவை சுலபமாகவே நடந்தேறிவரும். நியமஞ்செய்வோனுக்கு தேகசுத்தமும் மனோசுத்தமும் முக்கியமானவை. அப்படிச்சுத்தமானவனுக்கு அஞ்ஞானம் சீக்கிரத்திலே நீங்கிவிடும். ஆசையடக்கல், மனோதிருப்திகொள்ளல் முக்கியதர்மங்களாதலின்,மனம் சாந்தியடையாவிடில் யோகம் கைகூடாது. அத்தியயனம் என்பது கற்கை. சாஸ்திர ஆராய்ச்சியும், (Scientific research) அபிமானமற்ற மதவிசாரணையும், யோகிக்கு அவசியம்வேண்டியிருப்பதால் நியமானுஷ்டானங்களில் ஒன்றாக அத்தியயனத்தைக் கூறியிருக்கின்றது. சாஸ்திர ஆராய்ச்சி என்பது புராணக்குப்பைகளை மெய்யென மேற்கொளலல்ல. 'கட்டிவைத்தபுத்தகக்கதைக்குள புரட்டெலாம், பெட்டதாய் முடிந்த

தே பிராணையானறிந்தபின்' என்றார் சிவவாக்கியர். உலகெங்கும் பிரசித்திபெற்ற ஸ்வாமிவிவேகானந்தர் ராஜயோகத்தைப்பற்றிச் செய்த பிரசங்கங்கள் உண்மையான சாஸ்திர ஆராய்ச்சியின் பலனைவிருப்பது போதுமான சாக்ஷியாகும். ஜபதபங்களால் மனவானது சுத்தமாகி ஒருவழியில் நிற்கும். யோகி அபிமானமற்றேயிருத்தல் வேண்டும். ஈஸ்வரார்ப்பணம் பண்ணல் என்பது, யோகாப்பியாசி எக்காரியம் செய்யினும், எதவஸ்தைப்படினும் பிரமஸ்மரணை செய்து, தானெனுமபிமானமொழித்து, எல்லாவற்றையும் ஈஸ்வரார்ப்பணம் செய்தலாம்.

---

## ஆஸனம்.

யோகத்திற்கு மூன்றும் அங்கமாகிய ஆஸனம் என்பது இருக்கை. யோகிதான் உத்தேசித்திருக்கும் ஓர் உன்னதநிலையை அடையுமட்டும் தனக்கேற்ற ஆஸனத்திருந்து பிரதிதினமும் யோகாப்பியாசம் செய்துவரல்வேண்டும். எவ்வித அசௌகரியமுமின்றி எவ்வாசனத்தில் தன் சரீரம் நீண்டகாலம் நீடித்திருக்குமோ அவ்வாசனத்தை யோகி கண்டுபிடிப்பது அத்தியாவசியமாகும். அதி சுலபமாகக் காணும் ஆஸனம் எதுவோ அதையே யோகாப்பியாசிகள் உபயோகித்தல் வேண்டும். யோகம் பயின்றுகொண்டிருக்கையில் தேகத்தில் பல மாறுதல்கள் உண்டாவதை நாம் முறையேகாணலாம். இயம நியமங்கள் கைகூடினபின்பு, ஓரிடத்தில் தனியே சிரசும், மார்பும், கழுத்தும் நிமிர்ந்திருக்க உட்கார்ந்து மனதையடக்க முயலவேண்டும். உட்காருவதில் திடமாய் நேரே உட்காருவதுதான் உத்தமம். ஸ்திரமாகவும் நேராகவும் உட்காரப் பழகிய பின்னர், நாடிசோதனை என்னும் ஓர் அப்பியாசம் செய்து வரவேண்டியதென்பது சில யோகிகள் அபிப்பிராயம். இவ்வப்பியாசம் ஹடயோகத்திற்கேயன்றி ராஜயோகத்திற் கன்று எனச் சிலர் கொள்ளினும், மஹாயோகியாகிய ஸ்ரீசங்கராசாரியஸ்வாமிகள் சுவேதாசுவதர உபநிஷத்திற்கு தாம்செய்த மஹா பாஷியத்தில் வற்புறுத்திக் கூறுவதை இங்கே எடுத்துக்காட்டுகிறோம்:

"பிராணயாம பரிசிலனத்தால் நிர்மலமாக்கப்பட்ட மனது பிரஹ்மத்தின்கண் ஸ்திரமடைகிறது. அக்காரணத்தால் பிராணயாமம் நிர்த்தேசிக்கப்படுகின்றது. முதலில் நாடிகளைச் சுத்தஞ்செய்யவேண்டும்; அதன்

பின்னர் பிராணாயாமஞ் செய்வதற்குரிய சக்தியுண்டாகும். வலது மூக்கின் துவாரத்தைப் பெருவிரலாலடைத்து, இடது மூக்கின் துவாரவழியாய் சக்தியாநுசாரம் வாயுவையுள்ளிழுத்துப்பின்னர் சற்றும் விளம்பமின்றி அவ்வாயுவை இடது மூக்கின் துவாரத்தையடைத்து வலது மூக்கின் துவாரவழி வெளியேவிடுக; மீண்டும் வலது மூக்கின் து[illegible] வழி வாயுவையுள்ளிழுத்து யதாசக்தி வெளியே விடவும். இங்ஙனம் மூன்று அல்லது ஐந்துமுறை சூரியோதயத்திற்கு முன்னரும், மத்தியானத்திலும், மாலையிலும் அர்த்தராத்திரியிலுமாகப்பிரதிதினம் நான்கு முறை அப்பியாசம் செய்து வந்தால், ௧ரு-நாள் அல்லது ஒருமாசத்திற்குள் நாடிசுத்தியுண்டாம். பின்னர் பிராணாயாமம் ஆரம்பமாகின்றது." *

ராஜயோகிக்கு சித்தாஸனம் பத்மாஸனம், இவ்விரண்டும் முக்கியமாம். சித்தாஸனமாவது இடது குதிக்காலை உள்ளடக்கி வலது குதிக்காலை எதிரேவைத்து புருவமத்தியில் நாட்டம்வைத்திருத்தலாம். பத்மாஸனமாவது இடதுபாதத்தை வலது தொடையின்மேலும் வலதுபாதத்தை இடதுதொடையின்மேலும் வைத்து உட்கார்ந்து, வலக்கையால் வலது பெருவிரலையும் இடக்கையால் இடது பெருவிரலையும் முதுகுமேல் கைமாற்றிப் பிடித்துக்கொண்டு முகக்கட்டையை மார்புமேலூன்றி, நாசிநுனியின்மீது நாட்டம்வைத்திருத்தலாம். † இது மிகவும் கஷ்ட அப்யாசமாதலின் ஹடயோகிக்கே அடுத்ததெனவும், ராஜயோகிக்கு சித்தாஸனமே உரியதென்றும் தெள்ளிதின் விளங்குகின்றது. இங்கே ஹடயோகத்தைப்பற்றி சிலவிஷயங்கள் சொல்வது யுக்தமாயும் அவசியமாயுமிருத்தலால் அவைகளைச் சொல்வாம். ஹடயோகத்தின் நாட்டம் ஸ்தூலதேகத்தை மிக்க வலி

---

* ஸ்வாமி விவேகாநந்தர் ராஜயோகம்—தமிழ்மொழி பெயர்ப்பு.

† தலையுங்கழுத்துமுடம்புமிவை செவ்வேதளராதேயிருக்கு
நிலையிலிருந்து கண்களைத்தன் மூக்கினுனிமே லேகிறுத்தி
அலையுங்கடல்போற் காமமுமெய்ப் பயமுந்தன்னைவிட்டகல
உலையுமனமுள் ளடங்கவென்னை யுணர்ந்தேயிருக்கு மதுயோகம்.—
பகவத்கீதை.

தக்கஞானத்தைத் தான்பெறற்பொருட்டுத் தனியிடந்தனையடைந்திதய, துக்கமேவாமற்சுகாசனத்திருந்து தோடலைகழுத்துடம்பிவைநேரொக்குமாறிருத்திப் பூதிகொண்டிந்த வுடம்பையுத்தூளனம் பண்ணி, மிக்கவாய் வருமிந் தியங்களை யெல்லாம் விடயமேலெழாவகைமீட்டு.—பிரமகீதை.

வுடையதாகச் செய்வதேயாம். அதன் உத்தேசம் காயிகமே யல்லது மானசிகமன்று. 'ஹடயோகி தன் ஆக்ஞையால் ஹ்ருதயம் சலிக்கவோ சலியாதிருக்கவோ செய்தல் சாத்தியமாம்'. ஹடயோகப்பயிற்சியின் பலன் நீண்ட ஆயுளைச்சம்பாதித்தலாம். ஹடயோகியின் முக்கிய நோக்கமும் லக்ஷியமும் தேகாரோக்யத்தைப்பற்றியேயாம். ஹடயோகிகள் தமக்கு ரோகமணுகாதென்றே நிச்சயித்திருக்கின்றார்கள். அது அவர்கட்கு வெகுசாய் வருவது மில்லையெனச் சொல்லலாம். தமது அப்யாசத்தின் பயனாக அவர்கள் நெடுங்காலம் ஜீவித்திருக்கின்றனர். பிரமனளித்த நூறுவருஷம் அவர்க்கு லக்ஷியமேயல்ல! நூறுவயசுக்கு மேலும் தாம் நரையும், திரையும், பிணியும், மூப்பும் ஜயித்து யௌவனமாயிருக்கக்காணுவர். ஹடயோகத்தின் முடிவு அவ்வளவேதான். எத்தனைவருஷம் ஜீவித்திருந்தாலும் மாமிசதேகம் மாண்டேபோகும். இதற்கோர் ஐயமில்லை!

ஹடயோகத்தைப்பற்றி ஒருவாறாகச் சுருக்கிச்சொன்னோம். இனி ராஜயோகத்திற்குரிய ஆஸனத்தைப்பற்றியே பேசுவோம். ராஜயோகி தனக்கேற்ற ஆஸனத்தில் உட்கார்ந்து, ஓர் சுத்தமான அறையிலிருந்து, காலையிலும் மாலையிலும், குடும்பவியவகாரங்களினின்றும் நீங்கி மனம் சற்றே சாந்தியடைந்திருக்கும் சமயங்களாதலால், யோகாப்பியாசம் செய்தல் நலமாகும். மனம் எப்போது சாந்திபெற்றிருக்கிறதோ அச்சமயத்தில் யோகாப்பியாசம்செய்துவரல் வேண்டும். இவ்வப்பியாசத்திற்காகவே ஓர் அறை பிரத்யேகமாய் வைத்திருத்தல் வேண்டும். அவ்வறையை மிகு சுத்தமாய் வைத்திருக்கவேண்டும். ஸ்நானம் செய்யாமுன் அதில் போகலாகாது. அதிலே நித்திரைசெய்யக்கூடாது. நல்லமணமுள்ள புஷ்பங்களையாவது, சாம்பிராணிவர்த்திமுதலிய வாசனை வஸ்துக்களையாவது அதில் வைத்திருப்பது நலம்; யோகாப்பியாச சமயங்களில் அத்திரவியங்களைக் கொளுத்தி வைத்தல் அநுகூலம் செய்யும். அவ்வறையில் நுழைந்தவுடனே கெட்ட எண்ணங்கள் யாவும் அறவே விட்டுவிடவேண்டும். யோகியின் மனோபாவமுள்ளவர்கள் தவிர மற்றவர்கள் அவ்வறையில் பிரவேசிக்கக்கூடாது. யோகாப்பியாசம் செய்தபிறகுதான் போஜனம் பண்ணவேண்டும். எச்சமயம் மனம் சஞ்சலமடையுதோ அச்சமயம் அவ்வறைக்குள்போய் சிலநிமிஷங்களி

ருந்தால், மனம் சஞ்சலநீங்கித் தேறுதலடையும். மேற்கூறிய படி தனியே ஓர் அறை வைத்திருக்க முடியாதார் தங்கட்கு இஷ்டமான ஸ்தானத்தில் அப்யாசம் பண்ணலாம். இவ்வெண்ணத்தைக்கொண்டே நம் முன்னோர்கள் கோயில்கள் ஏற்படுத்தினார்களெனச் சொல்லலாம். சுத்தமான மனதுடன் கோயில்களிற் சென்றால், சத்துக்கள் தரிசனமும் நேசமும் கிடைக்குமென்றும், அங்குவரும் மற்றையரும் பரிசுத்தமடைவரென்றும் கருத்துகொண்டே நம்முன்னோர்கள் தேவஸ்தலங்களை ஸ்தாபித்தார்கள். இக்காலத்திலோ அவர்கள் நல்லெண்ணங்களுக்கு மாறாக கோயில்கள், வேசிகள் ஆடல்பாடல் சாலைகளாயும், துர் எண்ணங்களுக்கும், துர்மார்க்கங்களுக்கும் ஆஸ்தானங்களாயும், ப்ரசாதமடங்களாயும் ஆய்விட்டன!

---

## பிராணயாமம்.

மேற்கூறியவண்ணம் யோகாப்பியாசி சித்தாஸனத்திருந்தாவது பத்மாஸனத்திருந்தாவது, புருவமத்தியிலேனும் நாசி நுனியிலேனும் நாட்டம்வைத்திருக்கப்பழகியபின், நாடி நரம்புகள் சுத்தமாம்படி ரேசக பூரககும்பகங்களை அநுஷ்டித்தல் வேண்டும். இடது நாசியால் ஸ்வாசத்தை உள்ளுக்கிழுத்தல் பூரகம். அப்படி உள்ளுக்கிழுத்த ஸ்வாசத்தை உந்தியில் நிறுத்தப் பழகுதல் கும்பகம். அப்படி நிறுத்திய ஸ்வாசத்தை வலது நாசியால் வெளிவிடல் ரேசகம். இவ்வண்ணமாக, மேல் ஆசாரிய ஸ்வாமிகள் விதித்தபடி, தினந்தோறும் நாலுவேளையாக ஒரு மாசம் செய்து பழகியபின்னரே பிராணயாமம் ஆரம்பிக்கவேண்டும். இடைவிடா அப்யாசத்தாலேயே யோகம் பலிக்கும். யோகமென்பது புராணேதிகாசப் பெரும் பொய்களைப்படித்துப்படித்துப் பிரசங்கித்தலன்று! அருவருக்கத்தக்க ஆபாஸக் கதைகளை ஆரவாரித்தலன்று! யோகமென்பது மனதையடக்கும் அரும் பெரும் வித்தை. இவ்வித்தையும் ஹேமவித்தையும் இத்தேசத்திற்கே உரியன. யோகவித்தையால் ஞானமடைதலும், வாதவித்தையால் காயசித்திபெறலும் ஆகும். மேற்சொன்ன முறையை அநுசரித்து மனம் அசைவற நிலைக்க சிறிது காலம் பழகினால், அதன் பயனாக பிறர் எண்ணங்களை சுலபமாகவே அறியக்கூடும். தந்தியில்லாமின் தபாலுக்கும் அதிவேக

மாக தூரத்தில் நடக்கும்விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் சக்தியுமுண்டாகும். இவ்வற்புதசக்திகளை, யோகி தன் அநுபவத்திலே காணலாம். இடைவிடாப்பழக்கத்தால், மேலுமேலும் பழக ஆசையும் ஆர்வமுமுண்டாகும்.

மனமடக்கும் பெரும் வித்தை மிகக்கஷ்டமானதாதலாலும், எல்லாருமே சாதிக்கமுடியாதாதலாலும், அது தூய்மையும் வாய்மையும் தேகதாருட்டியமும் மனோதிடமும் பொறையும் உள்ள சத்புருஷர்க்கே இயலுமாதலாலும், நமது தாயுமானார்- 'சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிது' என்றும்; 'சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலு மனமிறக்கக் கல்லார்க்குவாயேன் பராபரமே' என்றும் கூறினர். மேற்சொன்ன யோகசித்தியினாலும், அணிமாதி அஷ்டசித்திகளாலும், காயகற்பங்களாலும் நெடுங்காலம் ஜீவித்திருந்தவர் சித்தர்களாம். இவர் வல்லபத்தைச் சொல்ல யாவராலும் தரமல்ல. மஹிமையுள்ள இம்மஹாபுருஷரை மனமொழி மெய் மூன்றுங் குவியத் துதித்து,

> 'ஓட்டினையெடுத்தாயிரத்தெட்டுமாற்றாக
> ஒளிவிடும் பொன்னாக்குவீர்'

என அப் பெரியாரே பணித்தார்.

அஷ்டமாசித்திகளாவன: அணிமா—மிகச்சிறிய உயிர்கள் தோறும் அவைகளினும் மிக நுண்ணிய அணுவளவாய்ச் சென்றிருக்கை. மஹிமா—பிரிதிவி முதலிய சகலதத்துவங்களும் உள்ளும் புறமும் வியாபித்து நீங்காதிருக்கும் பெருந்தகைமை. லஹிமா—மலைபோலப் பாரமாயிருப்பினும் பரமாணுக்கள் போல எடுத்தற்கெளிதாயிருக்கை. கரிமா—பரமாணுபோன்ற வடிவுடைத்தாயினும் மஹா பர்வதத்தினும் கனத்தல். பிராப்தி-விரும்பியன பெறல். பிராகாமியம்—பரகாயப்பிரவேசஞ்செய்தல்; அபேக்ஷித்த போகம் யாவும் எண்ணபடியெல்லாம் இருக்குமிடத்தேயே வருவித்து அநுபவித்தல் முதலியவல்லமை. ஈஸத்வம் — கடவுள்தன்மையடைதல். வஸித்வம்—மானிடர், மிருகம், ஊர்வன, பறப்பன முதலிய எல்லாச்சீவன்களையும் தன்வசமாக்கிக்கொள்ளும் சக்தி.

பிராணயாமத்தொடர்ச்சி—பிராணயாமம் என்பது சுவாஸநியமமாம்; பிராணனையடக்கியாளுகையாம். பிராணயாமத்தின்

முக்கிய திருஷ்டி பிராணனை எவ்வாறு நியமனஞ்செய்வதென் பதேயாம். இவ்வுலகம் இரண்டு வஸ்துக்களினின்றும் உண் டானதென்றும், அவ்விரண்டில் ஆகாசம் ஒன்றெனவும், எல்லா வஸ்துக்களும் இவ்வாகாச தத்துவத்திலிருந்தே உண்டான வைகளென்றும் இந்திய தத்துவசாஸ்திரிகள் கொள்கிறார்கள். "பாவமோ, அபாவமோ இல்லாதிருந்தகாலத்தும், அந்தகாரம் அந்தகாரத்தை மறைத்திருந்தகாலத்தும், நிச்சலமாகிய ஆகாச மொன்றேயிருந்தது"* இவ்வாகாசமே காற்றாகவும், நெருப்பாக வும், ஜலமாகவும், மற்றுக் கடினவஸ்துக்களாகவு மாகின்றன. ஆயின், ஆகாச தத்துவம் அதி சூக்ஷ்மமாயிருப்பதால் நாம தைத் தனியே காணமுடியாது. ஆகாசம் தடித்து ஓர் ரூபம் பெற்றாலே நாம் அறிகிறோம். ஆதியிலே ஆகாசம் ஒன்றே உள்ளதென்றும், இறுதியிலே நெருப்பு, காற்று, ஜல முதலிய எல்லா வஸ்துக்களும் ஆகாசமாகவே மாறிவிடுகின் றனவென்றும் கொள்ளப்படுகின்றது. ஆகாசமென்னும் ஜட தத்துவம் எச்சக்தியால் உலகரூப மடைகிறதோ அச்சக்திக்குத் தான் பிராணன் என்றுபெயர். அதுதான் இரண்டாம் வஸ்து. எப்படி ஆகாசமானது எங்கும் வியாபிக்கும் ஜடதத்துவமாகிற தோ அதுபோல, பிராணன் எங்கும் நிறைந்து அகண்டமாய் பல ரூபங்களோடு யாவற்றையும் தோற்றுவிக்கும் ஓர் சக்தி யாகிறது. இறுதிக்காலத்தில் எல்லா ஜடவஸ்துக்களும் எப்படி ஆகாசமாக மாறிவிடுகின்றனவோ, அப்படியே உலகத்தின்கண் ணுள்ள எல்லாச் சக்திகளும் பிராணனாக மாறிவிடுகின்றன. சூக்ஷ்மமாயுள்ள ஆகாசமென்னும் ஜடதத்துவத்தை யசைத்து, ஸ்தூலமாக அநேகவஸ்துக்களை அநேகரூபங்களாக உண்டாக்கி, அவைகளை ஆட்டிவைப்பது இப்பிராணனே யாம். இப்பிரா ணனை யடக்கியாள வல்லவன் உளனேல் அவனுக்கு எதுதான் ஐக்கியமாகாது? இப்பிராணனை அடக்கி ஆளுவதெப்படியெ னில் அது பிராணாயாமத்தால் முடியும். ஆரம்பத்திலே யோகி தன்னருகேயிருக்கும் வஸ்துக்களை அடக்க முயலவேண்டும். எவர்க்கும் மிக்க சமீபத்திலுள்ளது தேகமும், அதனினும் சமீ பத்துள்ளது மனமுமாம். இவ்விரண்டையும் இயக்கும் பிராண னே யாவற்றிற்கும் அதிக சமீபமாயுள்ளதாம். எந்த ஜீவனுக் கும், எந்த ஜந்துவுக்கும் ஜீவாதாரமாயிருப்பது இப்பிராண

* ஸ்வாமி விவேகானந்தர் ராஜயோகம்.

னே. அதை மனிதன் அறியவேயில்லை. அதன் காரியத்தை மாத்திரமே அறிகிறான். அது செய்யும்வகையும் திறமும் மனிதனுக்குப் புலப்படவில்லை. இப்பிராணன் மனிதன் அறிந்தும் அறியாமலும் வியவகாரங்களைச் செய்துவர உதவுகிறது. நமக்குப் பசிவந்தபோது ஆகாரம் கொள்ளுகிறோம். அவ்வாகாரத்தின் ருசியும் ருசியின்மையும் நாம் அதை விழுங்குகிறவரையில் தான் தெரியும். அவ்வாகாரம் வயிற்றில் சென்றபிறகு என்னவாகிறதோ அது உண்டவனுக்குத் தெரியாது. வயிற்றிற்சென்ற ஆகாரம் ஜீரணித்து சத்தானபாகம் ரத்தமாகவும், அசத்தான பாகம் மலமாகவும் செய்வித்தது எது? அப்பிராணனே. இது மனிதன் அறியா வியவகாரம். நாம் ஒருவிஷயத்தை அறியவும், அறிந்து அதைப்பற்றி வாதிக்கவும் செய்யும் அப்பிராணனுக்கு மனம் எனவும் புத்தி எனவும் நாமங்களுண்டாகின்றன. இவ்வாறாகத் தொழில் நடாத்தும் பிராணனையடக்கி வசமாக்கும் வல்லமைபெறின்,நாம் உண்மையாகவே மனதுக்கும் புத்திக்கும் எட்டாத ஓர் உன்னதநிலையிலிருக்கலாம். அந்நிலைக்குத் தான் சமாதியென்று பெயர். தேகத்தில் பிராணன் சுவாஸரூபமாயிருக்கின்றது. சுவாஸம் நின்றால் தேகம் அசைவற்றுவிடுகிறது; பின்னும் பிணமாகியும் கிடக்கும். சகல பிராணிகளிலும் இது சுபாவமாயிருக்க, சுவாஸபந்தனஞ்செய்து பல யோகிகளும், ரிஷிகளும், சித்தர்களும் அநேகவருஷங்கள் ஜீவித்திருந்ததாக நாம் பல நூல்களிற் பார்க்கிறோம். யோகிகள் பூமியிலிறங்கி புதைக்கச்செய்து தாம் குறித்த மாதப்பரியந்தம் சுவாஸத்தையடக்கி உயிருடன் கிளம்பி வெளிகாண்கிறார்கள். இத்தகைய பெரும் வல்லபத்தைப்பெற்றவர்கள் யோகிகளாதலால், ஸ்தூலமான சுவாஸங்கள் அடங்கியிருந்தாலும், பிராணனின் சூக்ஷ்ம சக்திகள் அவர்களிடம் தத்தம் தொழில்களை நடத்திக்கொண்டேயிருப்பதாகக் கொள்ளல்வேண்டும். அதனாலேயே சுவாஸம் நின்றாலும் அவர்கள் ஜீவித்தேயிருப்பார்கள். பிராணன் சுவாஸப்பையை அசைவிக்கிறது; அவ்வசைவினால் உள்காற்று வெளியே செல்லவும் வெளிக்காற்று உள்ளேவரவும் ஆகின்றது. இக்காற்றுக்குத்தான் சுவாஸமென்றுபெயர். ஆனால் சுவாஸத்தை விடுவதும், அல்லது அடக்குவதுமே பிராணாயாமம் என்று ஒருக்காலும் எண்ணக்கூடாது. சுவாஸத்தை உண்டாக்கும் ஆதி சக்தியாகிய பிராணனை அடக்குவதுதான் பிராணாயாமம் என்று

நன்றாய் மனதிற் பதியவேண்டும். சர்வாதாரமான இப்பிராணனை கைவசப் படுத்திக்கொண்டால் நமது தேகமுழுதும் சுவாதீனமாகும். ஒருநாளும் தேகத்திலே வியாதியணுகாது; அதனால் தேகம் உரமடையும். மேலும் இதரமனிதர்களின் தேகத்தையும் மனதையும்கூட சுவாதீனமாக்கமுடியும். இவ்வற்புத சக்திபெற்ற பெரியோர்வாக்கு எங்கும் எக்காலத்தும் செல்லும். அது பொய்க்காது. முயற்சி திருவினையாக்கும் என்றபடி, யோகி காலம் போதாதென்று முயற்சியைவிடாமல், தினந்தோறும் அதி சிரத்தையுடன் அப்பியாசம் செய்துவந்தால் கூடிய சீக்கிரத்திலே மேற்சொன்ன சக்திகளைப் பெறக்கூடுமென்றும், ஒரு ஜன்மத்திலேயே பவசாகரத்தை நீந்தி பிரமத்தில் லயமாகக் கூடுமென்றும் பழுத்தயோகிகள் உறுதியாகச்சொல்லுகிறார்கள். யோகியாவோன் ஏககாலத்திலே சுவாஸத்தை உள்ளுக்கிழுத்து வெளிவிடப் பழகுதல் அவசியமானது. இதில் சற்றுப் பழகிய பின், ஓம் என்னும் பிரணவாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டே சுவாஸத்தைக் கிரமமாகவிடப் பழகல் மேலானது. வலக்கால் பெருவிரலினின்று அசைந்திளகி ஏறி இடது நாசியைப்பற்றி நிற்கும் நாடிக்கு இடைகலை என்றும்; இடக்கால் பெருவிரலினின்று அசைந்திளகி ஏறி வலது நாசியைப்பற்றி நிற்கும் நாடிக்கு பிங்கலை யென்றும் பெயர். இவ்விரு நாடிகளுக்கிடையில் நடுமுதுகெலும்பின் மத்தியில் அடியிடுப்பிலிருந்து ஓடுகிற கால்வாய்க்கு சுஷும்னாவென்று பெயர். சாமானிய மனிதருக்கு இடைகலை பிங்கலை நாடிகள் மாத்திரமே திறக்கப் பட்டிருக்கின்றன. யோகிகளுக்கே சுஷும்னாநாடி திறக்கப்பட்டிருக்கிறது. இச்சுஷும்னாநாடியைத் திறந்துவிடல்தான் யோகிகளின் முதற்பிரயத்தனம். அது பிராணாயாமத்தால்தான் முடியும். இச்சுஷும்னாநாடியில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. இவைகளுக்கு ஷடாதாரங்களென்று பெயர். அவையாவன:

(1) மூலாதாரம்; (2) சுவாதிஷ்டானம்; (3) மணிபூரகம்; (4) அநாகதம்; (5) விசுத்தி; (6) ஆக்ஞை. மேற்சொன்ன சுஷும்னா நாடியின் கீழேயுள்ள மூலாதாரம் திறக்கப்பட்டு குண்டலி சக்தியும் கிளப்பப்பட்டால், மனிதன் எண்ணம் அந்நாடியின்வழியே மேலேறவாரம்பிக்கும். அப்படி மேல் ஏற ஏற மனமானது இந்திரிய விஷய சம்பந்தமற்று சமாதிநிலையை

அடையும். மூலாதாரத்தில் அடங்கியிருக்கும் சக்தியை அதி லிருந்து ஆக்ஞை அல்லது மூளைக்குக் கொண்டுவரல்வேண்டும். மனிதனிடத்துள்ள எல்லாச் சக்திகளிலும் மேலானது ஓஜஸ். இந்த ஓஜஸ் மூளையிலிருக்கிறது. இந்த ஓஜஸ் என்னும் சக்தி ஒருவனிடத்து எவ்வளவு அதிகரித்திருக்கிறதோ அவ்வளவு அதிக புத்தி கூர்மையுடையவனுயும் ஞானியாயுமிருப்பன். இச்சக்தி விசேஷமாயுள்ளவனுக்கு அதிக மனோதைரியமு மிருக்கும். இங்கே முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய விஷயம் யாதெனில்,—எந்த சக்தி ஸ்திரீசம்போகத்திற்குக் காரணமா யிருக்கிறதோ அந்த சக்தியை அவ்விஷயத்திற் செல்லவொட்டா மல் அடக்கிவிட்டால் அது ஓஜஸ்ஸாக மாறிவிடுகிறது. ஆகை யால் தான் யோகியாக விரும்புவோன் ஸ்திரீ சம்போகத்தை அறவே நீக்கிவிடவேண்டுமென்றும், அதைச் சற்றும் நினையா மலே யிருக்கவேண்டுமென்றும் அநுபவயோகிகள் திர்மான மாய்ச் சொல்லுகிறூர்கள். பிராணுயாம அப்பியாசி அதி முக்கி யமாய்க் கவனிக்கவேண்டிய விஷயம் எதுவெனில்,—தான் பனை ஏட்டிற்படித்ததும் அச்சிற்பார்த்ததும் போதுமானதென்றும், அதனாலே தான் பிராணுயாமமென்பதைப் பூரணமாயறிந்து விட்டதாகவும் எண்ணி, வழிகாட்டும் தக்க குருவின்றியே அவ் வப்பியாசம் செய்துவருவது பிசகாகும். ஏனெனில், பிராணுயா மம் பிராணனையொட்டியவித்தை யாதலால், அநுபவ ஆசான் தன்னை நடத்திப் பக்குவியாக்காமல் தான்தோணித் தம்பிரா னுய், அப்பெரும் வித்தையை அப்பியசித்துவந்தால் 'தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வாராது' என்ற வாக் கியப்படி, அவ்வித்தை பெரும்பாலும் பலியாமற் போவதுடன் சில சமயம் அபாயமும், துர்மரணமும், அகாலமரணமும் சம் பவிக்கும். இவ்வாறுகப் பலர் மாண்டதை யாம் கண்டதுண்டு. எச்சரிக்கை! எச்சரிக்கை!

---

## பிரத்யாஹாரம்.

ராஜயோகத்தின் ஐந்தாம் அங்கமாகிய பிரத்தியாகாரம்— மனதை நியமனஞ்செய்தல், அடக்கியாளுதல் என்ப் பொருள் படும். பிரத்யாஹாரம் என்பது மனதைத் தன்னிடம் திரும்ப அடக்குகை: அதாவது 'மனதின் பகிர்முக சக்திகளை நிரோ தித்து, அதனை இந்திரியங்களின் அடிமைஸ்தானத்திருந்து விடு

வித்தல்' என்பது பொருளாம். அச்சக்தியை ஒருவன் அடைந்தால் மாத்திரமே முக்தியடைதற்குரிய ஓர் பெரும்படியைக் கடப்பான். மனதை நியமனப்படுத்துவது எவ்வளவு கஷ்டமென்பது ஒவ்வொருவரும் யூகித்துக்கொள்ளலாம். மனதைப் பைத்தியம்பிடித்த குரங்குக்கு உவமைப்படுத்தியிருப்பது பொய்யல்லவே. மனமானது ஒரு க்ஷணமேனும் நிலைப்பட்டு நிர்மதியடையும் தன்மையுளதல்லவாதலால்,

'பாதரசமாய் மனது சஞ்சலப்படுமலாற்
பரமசுகநிஷ்டைபெறுமோ'—என்றார் தாயுமானவர்.

'வெறிகொண்ட மர்க்கடம் கள்ளுண்டு, பேயுண்டு, காஞ்சிரங்காய் தின்ன', என்றபடி, இயல்பாகவே சேஷ்டையும் சபலமுமுள்ள ஓர் குரங்குக்குப் பயித்தியம்பிடித்தது. அதற்கு யாரோ கொஞ்சம்கள்ளைப்புகட்டினார்கள். பயித்தியத்தோடு கள்மயக்கமும் சேர்ந்தபோது அக்குரங்கின் மனம் என்ன அலைந்திருக்கும்? பேய்க் கூத்தாடியிராதா? அக்குரங்கு இவ்வவஸ்தையிலிருக்க அதனை ஒரு தேள் கொட்டியது. அப்போது அக்குரங்கு முன்னிலு மதிக சாபல்யமடைந்தது. பைத்தியமும், தேள்பாதையும், கள்போதையும், போதாதெனவே அக்குரங்கைப் பேயும் பிடித்துக்கொண்டது. இத்தறுவாயில் அக்குரங்கு பட்ட அளவிலாத்துன்பத்தை அளக்க யாராலாகும்? சஹிக்கமுடியாத அதன் சஞ்சலத்தை எப்பாஷையில்தான் வர்ணிக்கக்கூடும்? அதன் மனத்துடி துடிப்பைச் சொல்ல நாவேது? அதை நினைக்கவு நம்மன நடுங்குதே! மனிதன் மனம் அக்குரங்கைப்போல் வதேயாம். இயல்பாகவே அது ஓயாது சலித்துக்கொண்டேயிருக்கிறது. ஸ்வபாவமாகவே சலிப்புள்ள மனதுடைய மனிதன் 'பின்னர் ராகமாகிய கள்ளைக்குடித்துத் தனது சாபல்யத்தை வளரும்படி செய்கிறான். ராகத்தின் வசமானவுடன் எவரது ராகம் பூர்த்தியாகின்றதோ அவரைக்குறித்து உண்டாம் அஸூயை என்கிற தேள் கொட்டுகின்றது; முடிவில் அபிமானமென்னும் பிசாசினால் விழுங்கப்படவும் செய்கின்றது; அதனால் அது, தானே பெருமையுடையதென இறுமாப்படைகின்றது.'—ஸ்வாமி விவேகானந்தர். பிரத்தியாகார அப்பியாசி முன்னர் செய்யவேண்டுவது என்னவெனின், சொற்பநேரம் மனதை ஓடும்படி விட்டு—ஓர்குதிரையை வசப்படுத்தவேண்டுமெனின் முன்னர் கடிவாளத்தைத் தளர்த்திவிட்டுப் பின்னர்

அதை வசப்படுத்துவதுபோல—பின்னர் மனதின் எண்ணமும், அதன் வியாபாரமும் அதிகமாய்ப் பெருகாமல் நாளடைவில் குறைத்துக்கொண்டே வரவேண்டும். அதெப்படியாகுமெனின், மனம் உலகவியவகாரங்களிற் சென்றிருக்கையில், யோகி தான் வேறாக சாக்ஷிபோல் நின்று, இச்சமயம் தன்மனம் என்னவிஷயங்களிற் பிரவேசித்திருக்கிறதென்று பார்க்கும் உபாயத்தால் உண்டாகும். அவ்வாறு தான் பிரிந்து பார்க்கின் மனோசாந்தியுண்டாகும். இதை நாம் ஒவ்வொருவரும் அநுபவத்தே கண்டிருக்கலாம். முன்சொன்னபடி மனதைத் தான் சாக்ஷியாக நின்று நோக்க ஆரம்பித்து சிலநாள் பழகியபின், ஒருநாளைக்குப் பலவேறு எண்ணங்களை எண்ணியமனம் தன் ஓட்டம் அடங்கிக்கொண்டேவரும். எண்ணங்கள் குறைந்துவரவே, மனது யோகி சொன்னவண்ணம் நடக்க சாத்தியப்படும். இந்திரிய சம்பந்தமான விஷயாந்தரங்களைக் கண்ட க்ஷணமே அவைகளின் பின் ஓடித்தாவும் மனதை அவ்வண்ணம் ஓடாது நிலைப்படுத்தி ஆளுவது தான் பிரத்தியாகாரம்.

---

## தாரணை.

இனி ராஜயோகத்தின் ஆறும் அங்கமாகிய தாரணையைப் பற்றிச் சொல்வாம். மேற்சொன்னபடி மனதை அடக்கியாளு மனிதன், அம்மனதை யாதானுமோர் விஷயத்தையே பற்றி நாடியிருக்க ஏவினால், அம்மனம் வேறோர் விஷயத்திற் செல்லாமல் அம்மனிதன் ஏவிய விஷயத்திலேயே நிற்கை, தாரணை எனப்படும். மனோவிருத்தி ஓரிடத்தில் கட்டுப்பட்டிருக்கும்போது அது தாரணை யெனப்படும். தாரணை பலபடியாக விருக்கின்றது. மனதை ஏவப்படுத்துவது எப்படி யெனின்:—

'திருஷ்டாந்தமாக மனதை இருதயத்தின் ஓர் ஸ்தானத்தை மட்டுமே சிந்திக்குமாறு செய்தல் வேண்டும். இது மிகவும் கஷ்டமாதலின், எளிதாகிய மார்க்கமாக அவ்விடத்தில் ஓர் பத்மத்தைச் சங்கற்பித்தலாம். அப்பதுமம் பிரகாச பூரணமாயிருக்கின்றது. அங்கே மனதை நிறுத்துக. அல்லது அப்பத்மத்தைப் பிரகாச பூர்ணமாகவே மூளையின் கண்ணோ, சுழிமுனையிலுள்ள பல ஸ்தானங்களிலோ சங்கற்பிக்குக'—ஸ்வாமி விவேகானந்தர்.

பிரதமத்தில் ஒருவன் தன்மனதை தன் இருதயத்தைப் பளபளவெனப் பிரகாசிக்கும் தாமரை போன்றதாக நினைக்கச் செய்து, அதை அதில் நிறுத்தலாம். பிறகு ஆறுதாரங்களில் யாதாமொன்றில் மனதை நிறுத்தலாம். இவ்வப்பியாசங்கள் யாதுக்கெனின், மனிதன் பகிர்திருஷ்டியை யொழித்து அந்தர் திருஷ்டியாக ஆத்மாவைத் தரிசிக்கவேயாம்.

'முகத்துக்கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக்கண்கொண்டு பார்ப்பதேயானந்தம்'—என்றார் திருமூலர்.

யோகியாவோன் மனோசாந்தி பெறு நிமித்தம் சந்தடியற்ற தனியிடத்திலிருந்து மனதைக் குறித்த விடத்தில் நிலைக்கச் செய்யும்போதுதான், ஓர் சிறிய செற்றை கீழே வீழ்ந்தாலும் கேட்பான். தினமும் யோகாப்பியாசம் செய்த பிறகு அநுபவயோகிகளை யடுத்துக் கேட்டல் நன்று. யோகியாவோன் சித்தி பெறும் வரையில் வேறோர் நாட்டம் வையாது தனக்குப் பிரதிகூலமான ஸ்தானங்களில் வசிக்காமல், தன் நோக்கத்திற்கு மாறுபாடான நேசரையும் நீக்கவேண்டும்.

இந்தப்படி இடை விடாது நாள்தோறும் அப்பியாசம் செய்துவரின், ஒருவன் அதி சீக்கிரத்தில் நல்ல யோகியாகக் கூடுமென பழுத்தயோகிகள் கூறுகிறார்கள். யோகத்தாலடையும் ஞானமே உசிதமானது. ஞானமே பிரதானமானது. 'உரைசெயிற் பரம ஞானமொன்றுமே முத்திக்கேது'—என்பது பிரபுலிங்கலீலை.

சித்தியுண்டாகவேண்டுமென அபேக்ஷித்தால் விடாமுயற்சி, திடமுயற்சி வேண்டும். பாரமான மனோ சக்தியும் வேண்டும். யோகமென்பது வாய்ப்பேச்சல்ல! சுளுவாகக் கோயிலுக்குப் போய், தனை யொப்பாரைப்போல், கல்லுருவம் செம்புருவம் கண்டு கடவுளெனப்பாவித்து, மனோபிராந்திகொண்டு, கடவுளைக்கண்டோம் கண்டோமென்று களிப்பதல்ல! 'கல்லிலும் செம்பிலுமோவிருப்பன் என்தன் கண்ணுதலே'—என்றார் பட்டினத்தார்.

---

## தியானம்.

யோகத்தின் ஏழாம் அங்கமாகிய தியானம் என்பது, மேற்சொன்ன தாரணையில் எவ்வஸ்துவில் மனது நிலைத்து நின்றதோ அவ்வஸ்துவிலேயே நீடித்தகாலம் மனதை நிலைத்திருக்கச்செய்தல் எனப் பொருளாகும். யோகநூலில் தாரணை, தியானம்

சமாதி இம்மூன்றிற்கும் ஸம்யமம் என்று பெயரிடப்பட்டிருக்கிறது. ஸம்யமம் என்பது மனதை ஓர் வஸ்துவில் நாட்டி, அவ்வஸ்துவை நீண்டநேரம் தியானித்து, பிறகு அத்தியானத்துக்கு விஷயமாய் நின்ற வஸ்துவின் நாமரூபத்தை மனதினின்றும் கழற்றி, அச்சைதன்ய மாத்திரமாய் நிற்கப் பழகுதலாம். பிரதமத்திலே மன நிலைக்க, தியானம் ஸ்தூலவஸ்துக்களிலே ஆரம்பிக்கவேண்டுமென்று பெரியோர் விதித்திருக்கிறார்கள். இதற்கு இங்கிலீஷில் Concentration of Mind என்றுபேர். அப்படி பழகிய பின் சூக்ஷ்ம வஸ்துக்களைத் தியானித்தலாகும். அதன்பிறகே தான் தியானத்துக்கு விஷயமாய் நின்றவஸ்துவின் ஸ்வரூபத்தை மறந்து, சைதன்ய மாத்திரமாகவே நிற்கும் சமாதி கைகூடும்.

'உள்ளமுரைசெயலுள்ள விம்மூன்றும்
உள்ளிக்கெடுத்திறையுள்ளி லொடுங்கே.'—திருவாய்மொழி.
'மோனமென்பது ஞானவரம்பு.'—ஔவையார்.

உலக வஸ்துக்களை நாம் பஞ்சேந்திரியங்களா லறிகிறோம். நமக்குள் நடக்கும் பல விஷயங்களை அறியாமலு மிருக்கிறோம். நாம் புசிக்கும்போது உணவை ருசிபார்த்து உண்கிறோம். ஆனாலுண்ட பின் அது ஜீரணிக்கும் வகையை நாமறியாமலே யிருக்கிறோம். ஜீரணமான பின் சத்தான பாகம் ரத்தமாகவும் மிகுதி மல மூத்திரங்களாகக் கழிவதும் நாமறியோம். நாமறியா விடினும், இத்தொழில்களை நமக்குள்ளிருக்கும் உறுப்புகள் நடத்துவதே யல்லாது வேறொருவரிருந்து நடத்துவாரில்லை. ஆகவே நமக்குள் நாமறியாமலே நடக்கும் வியவகாரங்கள் உண்டு; நாமறிந்தே நடக்கும் வியவகாரங்களும் பலவுள. முன் சொன்ன ஸ்திதியில் நாம் செய்கிறோமென்னும் கர்த்திருத்துவாபிமானமில்லை; பின்னையதில் நாம் பார்க்கிறோம், நாம் கேட்கிறோம், நாம் செய்கிறோம் என்னும் அபிமானம் கொள்கிறோம்; அகங்காரமுங்கூட ஜனிக்கின்றது. இது யாவருமே ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. சாதாரணமாகவுள்ள விம்மனோ நிலைக்கு மேலாகவும், மனம் புத்திக்கு எட்டாததாகவும் ஓர் நிலையுண்டு: அது யோகாப்பியாசத்தால் அடையத்தக்க மூன்றும் ஸ்திதியென்று யோகிகள் கூறுகிறார்கள். இந்த ஸ்திதியில், நான் எனது என்னும் அகங்காரம் அறவே நீங்கிவிடும். தன்னையறிந்து தனக்கன்னியமா யொன்றுமில்லை யெனத்தெளிந்து தானாகவே தனித்து நிற்பதுதான் சமாதி.

"தன்னையறிவதறிவாமஃதன்றிப்
பின்னையறிவதுபேயறிவாமே."

"மனமாயைமாயைமாயைமயக்க
மனமாயைதான்மாயமற்றொன்றுமில்லை
பினைமாயவேண்டாபிதற்றவும்வேண்டா
தனையாய்ந்திருப்பது தத்துவர்தானே."—திருமந்திரம்.

"நீர்நுமதென்றிவை வேர்முதன்மாய்த்திறை
சேர்மினுயிர்க்கது நேர்நிறையில்லே."—திருவாய்மொழி.

---

## யோகத்தின் பலன்.

திக்கெங்கும் புகழ்பெற்று, பின்னர் திக்கெல்லாம் துக்கிக்க அகால மரணமடைந்த ஸ்வாமி விவேகானந்தர், தமது ராஜ யோகப் பிரசங்கத்தில், யோகத்தின் பலனை இவ்வாறு நிரூபிக்கின்றார்:—

யோகி, மானசப்பிரதிகரணத்தைத்தானே சாக்ஷாத்கரிக்கச் சக்தனாகும்போது அவனுக்குச் சர்வக்ஞத்தன்மையுண்டாகின்றது. யோகிக்குப்பலவிதமான சித்திகள் உண்டாகும். ஆனால் அவற்றுள் யாதாயினுமொன்றன் ஆகர்ஷணத்திற்கு அவன் வசப்படுவானாயின், அவனது மேல்கதிக்குரிய மார்க்கம் தடைபடும். போகங்களை நாடி ஓடுவதினாலுண்டாங்கேடு அவ்வளவு பெரிதாம். ஆனால், இவ்வற்புத சித்திகளை உபேக்ஷிக்கத்தக்க அத்துணைச் சக்திமானாவானாயின், அவனுக்கு ஆத்மாவின் மஹாத்மியம், மனோவியாபாரங்களாலும் சரீர சலனங்களாலும் மறைப்பின்றி, அதன் பூர்ணப் பிரகாசத்துடன் விளங்கும்.........மேற்சொன்ன சமாதியை அடைவதற்குரிய படிகளுள் ஒவ்வொன்றும் யுக்திபூர்வம் நிர்ணயித்து, தக்கபடி சமப்படுத்தி, சாஸ்திரீயமாய் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. சிரத்தையோடு அப்யாசஞ் செய்தால், அது நம்மை விரும்பிய லக்ஷியத்தில் நிச்சயமாக அடைவிக்கும். அப்பொழுது எல்லா வருத்தங்களும் நீங்கும்; துக்கங்கள் நாசமாம்; கர்மபீஜங்கள் தகிக்கப்பட்டுப்போம்; ஆத்மா நித்ய முக்தமாகும்."

---

## சமாதி.

அஷ்டாங்க யோகத்தின் கடைசி அங்கமாகிய சமாதி, ஸம்பிரக்ஞாத சமாதி, அஸம்பிரக்ஞாத சமாதி என இருவகையாம். முன்னைய சமாதியால் பஞ்ச பூதங்களையும் தன்மாத்திரைகளையும், அந்தக்கரணங்களையும் அடக்கியாளும் சக்தியுண்டாகும். பின்னைய சமாதியால், தேகம் நாமல்ல, தேக சம்பந்தமான மனமும் புத்தியும் நாமல்ல; நாம் எங்கும் வியாபகமாயிரு

க்கும் ஆத்மாவே யென்றறிந்து பந்த நீங்கி மோக்ஷமடையலாகும். ஸம்பிரக்ஞாத சமாதி நான்கு பிரிவாம்: ஸவிதர்க்கம், நிர்விதர்க்கம், ஸவிசாரம், நிர்விசாரம் என்பவைகளே. யோகியானவன் ஐம்பூதங்களின் ஸ்வரூபத்தையும், அவைகளுண்டாகி, இருந்து, அழியுமிடத்தை அறியும் வண்ணம், அவைகளிடத்தே தன் மனதை ஏகாக்கிரமமாய் நிறுத்தி ஆராய்ச்சி செய்வதுதான் ஸவிதர்க்க சமாதி. ஸ்தூல பூதங்களின் ஆராய்ச்சி முடிந்து அவைகளின் நிஜஸ்வரூபத்தை அறிந்த பின்னர், காலம், இடம், காரணம், இவைகளைக் கடந்து, அப்பூதங்களிடத்தே மனம்பற்றி, தியானஞ் செய்திருப்பதே நிர்விதர்க்க சமாதி. ஸவிதர்க்க சமாதியில் தர்க்கம் (வியவகரித்தல்) உண்டு; நிர்விதர்க்கசமாதியில் அது இல்லை. முதிர்ந்த தியானத்தால் சூக்ஷ்மமான தன்மாத்திரைகளை ஆராய்ந்தறிதல் ஸவிசாரசமாதி. காலம், இடம், காரணமும் தாண்டி தன் மாத்திரைகளின் நிஜஸ்வரூபத்தை அறிந்து, அதில் ஏகாக்கிரமமாய் மனதை நிறுத்துதலே நிர்விசார சமாதி. ஸம்பிரக்ஞாத சமாதியால் என்ன சக்திகள் கிடைத்தாலும் பந்தம் நீங்காது; அஸம் பிரக்ஞாத சமாதியாலேயே முக்தி கிடைக்கும். சங்கற்பமே மனதிற்கு சொரூபமானதால், சங்கற்பங்கள் உண்டாகாமலே யிருந்தால் மன நாசமானதென யோகிகள் கூறுகிறார்கள். மனமிறந்த சமாதியே அஸம்பிரக்ஞாத சமாதி; பூரணசமாதி. அச்சமாதியில் ஆத்மா தான் தனியே நிற்கும். ஸம்பிரக்ஞாத சமாதியில் சித்த விருத்திகளடங்கியிருந்தாலும், சமாதியிலிருக்கிறோம், தத்துவங்களை அறிவோம் என்னும் மனோ சங்கற்பமிருப்பதால், அடங்கிய சித்தவிருத்திகள் மனதைக் கவரக் கூடிய சுக விஷய சம்பந்தம் நேரிடின், யோகத்திலுட்கார்ந்தமனிதனை உலக வியாபாரத்தில் இழுக்கும். அஸம்பிரக்ஞாத சமாதியிலோ மனமிறந்து ஆத்மாதான் மாத்திரமே நிற்றலால், மனோ சங்கற்பங்களுண்டாக ஏதுவில்லை. ஆதலால் இச்சமாதியே மேலானதெனக் கொள்க. இங்கே சுஷுப்திக்கும் சமாதிக்குமுள்ள பேதம் சொல்வோம். இருளாகிய சுஷுப்தியில் மனநசித்ததால் ஒன்றும்தெரியவில்லை. சமாதியிலும் நினைப்பு மறப்பு அற்றிருப்பதால் ஒன்றும் தெரியவில்லை. இப்படி யொத்திருத்தலால் சுஷுப்தியும் சமாதியும் சமமாகுமா வெனின் ஆகாது. எப்படியெனின்:—அற்ப ஞானமுள்ள வொருவன் அஷ்டாங்க யோகஞ் சாதித்து அஸம்பிரக்ஞாத சமாதியில் அடிக்கடிப்பழகி

வரின் அவன் மஹா ஞானியாகிறுன். 'ஒருமனிதன் சமா தியிற் பிரவேசிப்பானுயின், அவன் மூடனுக அதிற்சென்று முனி யாகவெளியில்வருகின்றுன்'.* சுஷுப்தியிற் சென்றவனே, சொப்பனந்தாண்டி சுஷுப்தியில் எத்தனை நாளிருப்பினும், அவன் உறங்குவதற்கு முன் எவ்வளவு ஞானமுடைத்தாயி ருந்தானே, அவ்வளவே தான் அவனுறங்கி விழித்தபின்னும் உடைத்தாயிருப்பன். அவன் ஞானம் அம்மட்டே. சமாதி நிஷ்டைகூடும் யோகிகளோ அநேக அற்புதங்கள் பலவிடங் களில் வெகுஜனங்கள் முன்னே காண்பித்திருக்கிறுர்கள். சமாதி யிற் சிறந்த யோகிகள் தம்மை அடைந்தவர்க்கு உபதேசம் செய்து நற்கதியைக் காட்டக்கூடியவர்கள். இவ்வளவு வித்தியாச மிருப்பதால் சுஷுப்தியின் தன்மை வேறு, சமாதியின் மஹிமை வேறு. சமாதி சுகம் எத்தன்மைத்து எனக்கேட்கின், அச்சுகம் பெற்ற மஹான்களுக்கே தெரியுமெனச் சொல்லல் வேண்டும். ஸ்திரீ புருஷர்கள் ஒன்றுகூடி மனங்கலந்து அநு பவிக்கும் சிற்றின்பத்தை அவரொருவர்க்கொருவரே நாவினுல் சொல்லிக்கொள்ள முடியாதிருக்க, இந்திரியங்களீர்த்து, மன மடிந்து, தான் மாத்திரமாய் சமாதியிலடைந்த பேரின்பத்தைச் சொல்ல சாத்தியமாகுமா ? ஆகாது.

"மகட்குத்தாய்தன்மணுளனேடாடிய
சுகத்தைச்சொல்லென்றுற்சொல்லுமாறெங்ஙனே."—திருமந்திரம்.

ஒருவன் நித்திரை செய்யுங்காலத்து பல விஷயங்களிலிழுக் கும் இந்திரியங்களும் மனமும் சூக்ஷ்மமாயடங்கி அஞ்ஞானத் தால் ஆத்மா மூடப்பட்டு தனியே நிற்றலால், சுஷுப்தி சுகம் தருகின்றது. இவ்வஞ்ஞானம் நீங்கி, பல விஷயாதி வியவகாரங்க ளொழிந்து, நினைப்பு மறப்பற்று, ஆத்மா சுயமாய் நிற்கையில் ஜனிக்கும் சுகத்தை அளவிட யாவரால் முடியும்? இக சுக துக்கங் களடைவதற்குக் காரணமாயுள்ள மனே சங்கற்பங்களே ஜனன மரணங்களுக்கு வித்தாம். ஜனன மரண நீக்கமே மோக்ஷமாம். இதுவே ஞான நூல்களின் துணிபு.

"அவாவென்பவெல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றும்
தவாஅப்பிறப்பீனும்வித்து."—திருக்குறள்.

---

* ஸ்வாமி விவேகானந்தர்.

"ஞானநூல்கற்றுலு நற்றுறவுபூண்டாலு
மோனசமாதிமுயன்றுலுந்—தானகி
எல்லாக்கவலேயுமற்றின்புற்றிருப்பதுவே
சொல்லாருமுத்திச்சுகம்."—சொரூபசாரம்.

இம்மட்டும் ராஜயோகத்தின் முக்கியமான அம்சங்களை ஒருவாறு சுருக்கிச் சொன்னேம். இனி கர்மயோகத்தைப்பற்றிப் பேசுவாம்.

---

## கர்மயோகம்.

கர்மம் என்றுல், கிரியை அல்லது தொழில். யோகம், சுகதுக்கங்களைச் சமமாக வெண்ணி அநுபவித்தல் எனப்பொருளாகும். ஆகவே கர்மயோகமெனின் சுகதுக்கங்கள், சத்துருமித்திரர்களைப் பேதமின்றிக் கருதி கர்மஞ் செய்தல் என அர்த்தமாகின்றது.

ஒரு ஜன்மத்தில் மனிதன் அநுபவிக்கும் சுகதுக்கங்களுக்கு அதற்கு முன் ஜன்மத்தில் செய்த கர்மங்கள் (தர்மங்கள் உள்பட) காரணமாகும். வேதத்தின் கர்மகாண்டத்தில் அனேக கர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. கர்மங்கள் நிமித்தமாகவே மகரிஷிகள் பலஸ்மிருதிகள் செய்திருக்கிருர்கள்; அவைகளில் முக்கியமாய் இக்கலியுகத்தில் நடக்கும் தர்மங்களையும் மனிதன் செய்ய வேண்டிய கர்மங்களையும் பேசுவது பராசரஸ்மிருதிதான். அதன்படி மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரையில் செய்ய வேண்டிய கர்மங்களுக்கு அளவில்லை. மனிதர்கள் பலவேறுன குணங்கட்கும், அவர்கள் செய்யும் தொழில்களுக்கும் ஏற்றபடியே, ஆதியில் பிரஹ்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வர்ண பேதங்களுண்டாயினவென்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவத்கீதையில் கூறுகிருர். இவ்வருண பேதங்களுண்டாயினபிறகே பிரம்மசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், ஸந்நியாசம், எனும் நான்கு ஆஸ்ரமங்களும், அவ்வாஸ்ரமங்களில் அனுஷ்டிக்க வேண்டிய கர்மங்களும் உண்டாயின. நாமகரணம், வித்தியாரம்பம் முதலாய்த் தாய் தந்தையர் செய்யும்கர்மங்கள் முடிந்தபின், பிரம்மசாரி தண்டம், கமண்டல முதலிய தரித்து, வேதாத்தியனம் செய்தல், குருவின் வீட்டிலேயே வசித்து அவர்க்கு சிஸ்ருஷை செய்தல், உபதேசம் பெறல் முதலான விரதங்களை அனுஷ்டித்து வரவேண்டும். பின்பு கிரகஸ்தாஸ்ரமத்தை

யடைந்து, நித்திய நைமித்திக கர்மங்களை சாஸ்த்ரோக்தமாய் நடத்திவரவேண்டும். அப்படிச் சில வருஷங்களானபின், குடும்ப வியாபாரத்தில் விரக்தியடைந்து கிரகஸ்தாஸ்ரமத்தை விட்டு நீங்கி, ஜடைதரித்து, மரவுரிமான்தோல் உடுத்து, கிழங்கு பழவர்க்கங்களைப் புசித்து, தான் யாதொன்றையும் யாசியாமல் எப்போதும் இடுபவனாகி, தேவ ரிஷி, பிதிர்க்கள் முதலியோரை ஆராதிப்பதாகிய பஞ்சம காயக்கியங்களைச் செய்துகொண்டு, வானப்பிரஸ்தனாகி யிருக்கவேண்டும். அதன் பின்பு சகல பற்றுக்களையு மொழித்து காஷாயம், தண்டம், கமண்டலம் தரித்து, ஏகாங்கியாயிருத்தலை யினிதாகக் கொண்டு, சந்நியாசியாகி சுகதுக்கங்களில் விழாமல் அந்தக்கரண புறக்கரணங்களை யடக்கி, மனக்கலக்கமற்று, சாந்தம் தயை முதலிய சத்குணங்களை வகித்து, பலாபேக்ஷையின்றிக் கர்மஞ் செய்து, பரம் பொருளைத்தியானித்து ஞானாராய்ச்சிசெய்து, பிக்ஷை யெடுத்துண்ணல் முதலான தர்மங்களை மேற்கொண்டொழுகவேண்டும். இவ்வாறாக ஒவ்வொரு ஆஸ்ரமத்துக்கும் உரித்தான ஒழுக்கங்கள் சிறிதேனும் வழுவாமல் நடத்தினால் மிகு நன்மையுண்டாகும்; மேலானபதவியடையத்தடையுமிராது. மேலும் அவ்வவ் வருணத்துக்குரிய கர்மங்களைப்பற்றின்றிச் செய்தால் ஞானமுண்டாகும். ராஜ யோகம் ஞானமடைய எப்படியோர் நற்சாதனமோ, அப்படியே கர்மயோகமும் ஓர் சாதனமாம். 'சாதனமின்றி யொன்றைச் சாதிப்பாருலகிலில்லை' என்றபடி. ஆனால் ஒவ்வொருவனும் விதித்த கர்மஞ்செய்து வருவதில் பலனை உத்தேசித்துச் செய்யக்கூடாது. இதுதான் கீதையின் முக்கிய கருத்து. மனமென்னும் ஏரியில் சங்கற்பங்களுண்டாகி, உடனே மறைந்து பின்னும் தோற்றிக்கொண்டேயிருக்கும். அலைகளையொத்த சங்கற்பங்கள் மறைந்ததுபோற்றோன்றினும் வாஸ்தவத்திலே அவைகள் மறையவில்லை. அவைகளின் அடையாளம் மனதிற்குடிகொண்டே யிருக்கும். இவ்வடையாளங்கட்குத்தான் ஸம்ஸ்காரங்களென்று பெரியோர் பெயரிட்டார்கள். ஸம்ஸ்காரங்கள்—'ஜீவன் சரீரத்தோடிருக்கையில், அது ஜீவனுக்கு உபயோகமாகும்படி, குறித்தகாலங்களில் செய்யும் கர்மங்களாம்.' நாம் செய்யும் ஒவ்வொருகாரியமும் நம்மெண்ணங்களொவ்வொன்றும் மனதில் படிந்திருக்கும் ஸம்ஸ்காரத்தின் காரியமே. நல்ல ஸம்ஸ்காரங்களை யுடையவன் நல்லவனாகிறான்; கெட்ட ஸம்ஸ்காரங்களை

புடையவன்கெட்டவனுகிருன். ஸம்ஸ்காரங்களின் வன்மைஅதிக மாதலின் அதைமாற்ற யாவராலுமாகாது. அதனுற்ருன் துஷ்ட னுக்கு என்ன நீதி போதித்தாலும் அவனதைக்கேளாது துஷ்ட னுகவே யிருக்கிருன். நல்ல ஸம்ஸ்காரங்களேயுடைய நற்குணன் எத்தனே துஷ்டர்கள் சேர்ந்து போதித்தாலும் துஷ்டனுகான். நம் கையிலகப்பட்ட ஸ்வாதீனமற்ற யந்திரத்தை நாமெப்படி சுற் றுகிருேமோ, அதுபோலவே நாம் முன்செய்த கர்மங்கள் நம்மை யந்திரங்கள்போலாட்டிவைக்கின்றன. நம் செயலொன்றுமில்லே.

கர்மமென்பது நம்மனேவாக்குக்காயங்களாற் செய்யப்படு வது. அது சஞ்சிதம், பிராரர்த்தம், ஆகாமியம் என மூவ்வகை யாம். முன் அநேக ஜன்மங்களிற் செய்த கர்மங்களே சஞ்சிதம். சஞ்சித கர்மங்களில் யாதேனுமொன்று பரியக்குவமாகி இப் போதெடுத்த தேகாரம்பத்திற்குக் காரணமாயிருப்பது பிராரர்த் தம். இச்சென்மத்தில் மரணபரியந்தம் செய்யும் கர்மம் ஆகாமிய மாம். ஆகாமியத்தால் சஞ்சிதமுண்டாகி, அதினின்றும் பிராரர்த் தம் ஜனிக்கின்றது. * கர்மத்திற்கு வித்து சங்கற்பமே யெனக் கொள்க. ஒருவன் யாதேனுமோர்பலனே யடைய மனதிற் சங்கற் பம் கொள்ளுதல் ஆகாமியம்; அத்தகைய சங்கற்பங்கள் சேர்ந்த மொத்தமே சஞ்சிதம்; சங்கற்பித்தபடி பலனே யனுபவித்தல், பிராரர்த்தம். 'தாம் நாமுன்செய்த வினைதாமே யனுபவிப்பர்' என்னும் பழமொழிப்படி, உலகத்தில் பிரஜைகளெல்லோரும் அநுபவிக்கும் சுகதுக்கங்கட்குக் காரணம் அவரவர் பூர்வஞ்

* ஞானிகளேயும் கர்மம் விடாதென நாம் ஞானநூல்களிற் படித் தோம். 'ஸர்வமும் நானே'; 'நானேபிரஹ்மம்' என்று கீதையிற் சொல் லிக்கொண்ட ஸ்ரீ கிருஷ்ணரையும் பிராரர்த்தகர்மம் விடவில்லே யென வே நாம்சொல்லக்கூடும். பலசித்திகள் கைகூடி, பல அற்புதங்கள் நடாத்திய ஸ்ரீ கிருஷ்ணருக்கு, முற்பிறவியில் வாலியிட்ட சாபத்தா லோ, அல்லது துர்வாசமகரிஷி சாபத்தாலோ, அகஸ்மாத்தாய் ஒரு வேடன் வேருேர்குறியிட்டு விட்ட அம்பு தப்பி, அவர் காற்பெருவிரலி லுருவிச்செல்லவே, அதனுல் ரணங்கண்டு ஆருமற்போக அவர்க்கு மரணம் நேரிட்டு, (அவர் பரமபதம் சேர்ந்தபின்) அவர் பிரேதம் வெந் ததும் வேகாததுமாயிருந்ததருணம், கங்கையில் வெள்ளம் வந்து அதை அடித்துக்கொண்டுபோய் ஜகந்நாதத்துக்கரையிற் சேர்த்துவிட் டதாம்! இப்பிரம்மத்துக்குங் கர்மம்விடாதது என்னபரிதாபம்!

"ஊழிற்பெருவலியாவுளமற்ருென்று
சூழினுந்தான் முந்துறும்."—திருக்குறள்.

செய்த கர்மங்களேயாம். ஆயின் கர்மம் எப்படி, எப்போது ஜனித்தது. தேகமின்றிக் கர்மமில்லையே; கர்மமின்றித் தேகமில்லையே. கர்மம் அநாதியா? தேகம் அநாதியா? எனின், இக் கேள்விகளுக்கு தக்க, திருப்திகரமான சமாதானம் சொல்வார் யாவருமில்லை! சகல சாஸ்திரங்களையும் (all sciences) நன்குணர்ந்து, ஐரோப்பா கண்டத்தின் தத்துவஞான சரித்திர மெழுதிய G. H. Lewes என்னும் பேர்கொண்ட தத்துவஞானி, மரம் முந்தியதா விதை முந்தியதா எனும் இது போன்ற கேள்வியை விடுவிக்க தன்னாலியலாதென்றே கூறிவிட்டார். மற்றெப்படித் தான் கர்மத்தைக்கொள்ளலாமெனின், கர்மம் அநாதி யென்றே கொள்ளல்வேண்டுமென நமது பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அச்சித்தாந்தம் யாதெனின்—கர்மம் அநாதியே. ஆதியில்லாக் கர்மத்திற்கு அந்தமுமில்லை: அதாவது கர்மம் எப்போது முளது என்பதாம். ஜீவர்கள் உள்ள வரையில் கர்மம் உள்ளது. ஜீவர்களும் நித்தியமல்ல; கர்மமும் நித்தியமல்ல. நித்தியமாய் உள்ளது பரவஸ்துவொன்றே; மற்றவையெல்லாம் கானல் நீர், கயிற்றரவு, சிப்பியில் வெள்ளிபோல் தோற்றமே. அநாதியாயுள்ளதும் பிரமமே. பிரமத்தைத் தவிர வேறேயொருவஸ்து நித்தியமல்ல. எல்லா வஸ்துக்களிலும் பகவான் அந்தரியாமியாய்ப் பிரவேசித்திருப்பதால் அவ்வஸ்துக்களெல்லாம் நித்தியம்போல் தோன்றுகின்றன. உண்மையிலே அவ்வஸ்துக்களுக்கு நித்தியத்துவமில்லை. கடவுளொருவரே நித்தியர், ஆதியற்றவர், அந்தமற்றவர், சர்வக்ஞர், சர்வவல்லபர்; மற்றவையெல்லாம் அவரிடத்தே தோன்றியடங்குவனவாம். கர்மம் அநாதிபோலத்தோன்றினும், அல்லது அநாதியென்றே நாம் கொள்ளினும், கர்மங்களைப்பற்றின்றிச்செய்து உண்மை ஞானமடைந்தால், கர்மம் நசித்தேபோகுமென ஞானநூல்கள் கூறுகின்றன. அதாவது ஜனனத்திற்கு வித்தாகிய அவித்தை, அஞ்ஞானம் அதாவது கர்மம், ஞானக்கினியால் வறுக்கப்பட்டால் ஜன்மம் அறவே ஒழிந்துபோம்.

மேற்சொன்ன கர்மங்கள் மூன்றனுள் பிராரர்த்தத்தை மட்டும் அநுபவித்தே தீர்க்கவேண்டும். ஒருவன் நிகழ் ஜன்மத்தில் ஞானமடைந்து ஜீவன் முக்தனானாலும், பிராரர்த்தகர்மத்தின் காரியமா யெடுத்திருக்கும் அந்த ஜன்மத்திலடையவேண்டிய சுகதுக்கங்களை யநுபவித்த பின்னரே ஜனனபந்தம் நீங்கும். ஆகாமியம், மனிதன் தனக்குரிய சற்கர்மங்களை பலப் பிராப்தியி

லாசைவைக்காமல் 'பகவதார்ப்பணமாகச்' செய்யின் நாசமடையும். அஞ்ஞானம் இடைவிடா விசாரணையால் கிடைத்த ஞானத்தால் நிவர்த்தியாகும். அஞ்ஞானத்தின் அம்சமாகிய அந்தகாரம் நீங்கவே, அவ்வந்தகாரத்தை ஆசிரயித்துள்ள சஞ்சிதம், ஞானத்தீயால் தகிக்கப்படும்.

"ஞானத்தின் மிக்க தவநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமுநன்றன்று
ஞானத்தின்மிக்கவை நன்முத்திநல்காவான்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக்காரே."—திருமந்திரம்.

---

## பகவத்கீதை.

ஜாதிபேதங்கள் அவரவர்மனோவிருத்திக்கும் தொழிலுக்கும் தக்கபடியே ஏற்பட்டதை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கீதையில் கூறியிருப்பதாக மேற்சொன்னோம். ஆனால் அப்படிக் கூறியவர் மனுஸ்மிருதியை யொட்டியே கூறியிருக்கவேண்டும்: ஆகவே மனுஸ்மிருதி கீதைக்கு முந்தியதாகும். கீதையோ, ஸ்ரீ கிருஷ்ணன், மஹா பாரதப் பெரும்போருக்கு அர்ச்சுனன் ஆயத்தமாயிருந்த சமயத்தில் அவனுக்குப் போதித்ததாக நம்பப்பட்டிருக்கிறது. பாரதயுத்தமோ துவாபரயுகத்தின் இறுதியில் நடந்ததாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. புராண ஹிதிகாசங்களோ வியாஸராதிமுனிவரால் கலியுகத்திலே செயப்பட்டனவேயன்றி, அதற்கு முந்தி செயப்பட்டனவல்லவென்பதற்குப் பல ஞாயங்களுண்டு. இதுவல்லாமல், கௌரவரும் பாண்டவரும், உம்பிராணனுக்கோ எம் பிராணனுக்கோவென்று சர்வாயுத பாணிகளாய் யுத்தமுகத்திலிருக்க, அவ்வாபத்தான சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அவகாசம் கிடைத்து கீதையை அர்ச்சுனனுக்கு உபதேசித்தாரென்றும், அதை அம்மஹாவீரன் சாந்தமுடனே கேட்டானென்றும் சொல்லப்படும் கதையை நம்ப, நமது இயற்கை அறிவே யிடந்தரவில்லை. ஆகலின், துரபிமானமும் குருட்டு நம்பிக்கையுமற்ற அறிவாளிகள் பலர் யூகித்துத் தீர்மானித்தபடி, பகவத்கீதை பாரதயுத்த சமுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசித்ததல்ல; ஸ்ரீ வேதவியாஸர் தாமியற்றிய பாரதமென்னும் பெருமிதிகாசத்திற்கு மத்தியில் ஓர் விலையற்ற ரத்னம் போல் ஜ்வலிக்க எழுதிவைத்ததே யல்லது வேறல்லவெனக் கொள்வதே சரியாம்.

## வர்ணாஸ்ரமகர்மங்கள்.

இது நிற்க, கீதையிற் கூறியிருக்கும் வர்ணாஸ்ரம தர்மங்கள் கிரேதாகாலத்தில் நடத்தப்பட்டிருக்கலாம். பிரஹ்மம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர ஜாதிகள் தத்தம் வரம்பு கடவாதிருந்திருக்கலாம். பிராம்மணர்கள் வேதமோதல் ஓதுவித்தல் முதலிய அறு தொழில்களும்; க்ஷத்திரியர் நீதிநெறி தவறாத அரசும் பிரஜாபரிபாலனமும்; வைசியர்-பூவைசியர், கோவைசியர், தனவைசியர்-வேளாண்மை, பசுக்காத்தல், ரத்ன வியாபாரஞ் செய்தல், பண்டம் விற்றல் முதலியவும்; சூத்திரர் முந்தின வர்ணத்தாருக்கு (தமக்கேற்பட்ட) பணிவிடைகளும் நடத்தியிருப்பார்கள். விவாஹவிஷயத்திலும் மேற்சொன்ன ஜாதியார் தத்தம் குருமாரிடத்தோ, அல்லது தத்தம் குலத்துக்கதிபதிகளிடத்தோ அநுமதிபெற்று, தத்தம் குலாசாரத்திற்கடுத்த கன்னிகையை மணஞ்செய்து இல்லறமொழுகியிருப்பார்கள். இக்காலத்தோ! ஜாதிமுறை நாளுக்குநாள் தவறிக்கொண்டே வருகிறது; அவ்வவ் வருணத்தாரும் தத்தமக்கேற்ற கிரியைகளை முன்னோர் வகுத்தபடி பெரும் பான்மை நடத்தி வருவதுமில்லை; அவ்வவ் வருணத்துக்குரிய மரியாதைகளும்நாளடைவிலே அற்றுப்போகின்றன; உயர்குல இழிகுல பேதம் மறைந்து கொண்டே வருகிறது; விவாஹ விஷயத்திலோ ஜாதி சம்பிரதாயம், குலாசாரம்—இவைகளைச்சற்றேனும் சட்டைபண்ணாமலும், தமக்கு முதியோர் சம்மதம் பெறாமலுமே, தத்தமனோபீஷ்டப்படி அநேகர் பெண்களைக் கலியாணஞ் செய்துக்கொண்டு வருகிறார்கள். பெண்ணைக் கொள்ளும் முறைமை யிப்படியாயின், பெண்ணுக்குப் பிள்ளை தேடும் முறைமையோ—கல்வியற்றவனாயும், குரூபியாயினுமிருக்கினும், பொருள் மாத்திரம் உடையனாயின், அவனுக்கு நல்ல ரூபமும், கல்வியும் குணமுமுள்ள கன்னிகையை தத்தம் செய்து விடுகிறார்கள். போஜன காரியமும் "ஸர்வம் ஜகந்நாதம்" என்னும்படி நடந்தேறி வருகின்றது. உயர்குலத்தோர், சம்பிரதாயஸ்தர், இவர்களுக்குப் பரம்பரையாயுள்ள பட்டங்களை, அசம்பிரதாயஸ்தரும் அநுலோம விநுலோமரும் வஹித்துக்கொண்டுவருகிறார்கள். இதுமட்டோ! இன்னும் விரிக்கிலிடந்தராது. ஜாதி, குலம், கல்வி, பிறப்பு, யோக்கியம், நடை, முக்கியமானவையாயில்லை. பொருளே பிரதானமாக நாட்டம்வைக்கப்பட்டு வருகின்றது! இவ்வக்கிரமங்களைச் செழிப்பிக்க, ஜாதியேன், குலமேன், ஆதி

யிற் சாதிபேதமேயில்லை ; ஜாதிபேதத்தாற்றான் நமது தேசத்து முன்பிருந்த ஒற்றுமை ஒழிந்து போயிற்று ; பிராம்மணருக்கும் மற்று வருணத்தோருக்கும் என்ன பேதம்? ; பஞ்சமனைப் படிப்பித்தால் பிராம்மணனாகானோ? என்று இவ்வாறாக இந்து தேசவியல்பிற்கும் உலக சரித்திரத்திற்கும் விரோதமாகவும், சாஸ்திரமாறாகவும், பாஷா பேதங்களால் தொன்று தொட்டு வரும் பல வேறான மனுஷ நடைகளை யோசிக்காமலும், பரம்பரை ஒழுக்கம், வல்லமை (Hereditary virtue and capacity) முதலானவைகளைச் சற்றேனும் சிந்திக்காமலும், நமது முன்னோர் கோட்பாடுகளைக் குப்புறக் கவிழ்க்க சீர்திருத்தக்காரர் (Social Reformers) என்னும் பேரறிவாளர் கிளம்பி விட்டார்கள்! ஆதலால், கீதையிற் கூறியிருக்கும் வர்ணாஸ்ரம தர்மங்களை இக்காலத்தில் வற்புறுத்துவதும், பிரசங்கிப்பதும் பயன்படாவென்பது எமதபிப்பிராயம். ஆகிலும், எவ்வருணத்தாரும் தர்மமே செய்ய வேண்டும் : அது செய்யுங்கால் எவரும் அதன் பலன் மேலாசை வைத்தல் கூடாது ; அத்தர்மம் யாவும் ஈஸ்வரார்ப்பணஞ் செய்தல் வேண்டும் ; அப்படிச்செய்தாலே கர்மம் நசிக்கும் ; ஜன்மமுண்டாகாது ;—எனும் கர்மயோகத்துக் கீதாபோதம் உத்தமமானது ; எக்காலத்தும் பயனளிக்கும். இது திண்ணம்.

---

## கர்மயோகம்—தொடர்ச்சி.

கர்மங்கள் விகித கர்மங்கள், நிஷித்த கர்மங்கள் என இரு வகையாம். சாஸ்திரத்தில் மனிதன் செய்யும்படியாகக் கூறப்பட்டவை விகித கர்மங்கள் ; சாஸ்திரத்தில் விலக்கப்பட்டவை நிஷித்த கர்மங்கள். விகித கர்மங்களால் புண்ணியமுண்டாகும் ; நிஷித்த கர்மங்கள் பாபத்தை அதிகரிக்கும். இவையன்றி, கர்மங்கள் ஸகாமகர்மங்களென்றும், நிஷ்காம கர்மங்களென்றும், இரு விதமாய்ப் பிரிந்திருக்கின்றன. ஸகாம கர்மமென்பது காமிய கர்மம் (ஓர் பலனை யடையக் கோரிச்செய்வது) குடும்ப விர்த்தி, தன தான்யவிர்த்தி, ஸ்வர்க்கலோகப் பிராப்தி—இவைகளைப் பெறச் செய்வது. நிஷ்காம கர்மமென்பது ஓர் பலனையும் இச்சியாது, 'அவனன்றி யோரணுவு மசையாது' என்ற மெய்ஞ்ஞானி வாக்கியப்படி,—எல்லாம் பகவான் செயல், நம்மாலொன்றுமில்லை. நமக்கோர் அதிகாரமுமில்லையென உள்ளபடி எண்ணி, சற்கர்மங்

களை பகவத் பிரீதியாகச் செய்தலாம், இதுதான் நித்தியமான மோக்ஷ சாம்பிராஜ்ஜியத்தைத் தரும் உத்தமமான கர்மம்.

கர்மஞ்செய்கையில் ஞானத்தையும், ஞானத்தில் கர்மத்தையும் பார்ப்பவனே புத்திமானென்றும், அவனே மோக்ஷத்திற்குரியவனென்றும் கீதையிற் கூறியிருக்கிறது. ஆதலால், ஒருவன் தான் செய்யுங் கர்மங்களெல்லாம் இந்திரிய வியாபாரங்களென்று நினைத்து, ஆத்மாவைப் பிணியினின்று நீக்குவதற்காக பலாபேக்ஷையின்றி, கர்மத்தைச் செய்யக்கடவனென்று பொருளாயிற்று. கர்மயோகத்தின் முக்கிய கருத்து என்னவெனின், மனிதன் கர்மத்தையும் விடாமல் செய்யவேண்டும்; பந்தத்தையும் ஒழிக்கவேண்டும். மனிதன் ஒரு கருமமும் செய்யாதிருக்கக் கூடாதாகலின், சற்கருமங்களைச் செய்தே காலங் கழிக்கவேண்டும். பந்தம் உண்டாகாமற் செய்ய யுக்தியாகவே, கர்மபலத்தில் ஆசை வைக்காது செய்யும்படி நமது பெரியோர்களும், மகரிஷிகளும் போதிக்கிறார்கள். பலனைக் கோரினால் உடனே மனதில் மேற்கூறிய ஸம்ஸ்காரம் தோன்றி விடுகிறது; அப்பலனை யநுபவிக்க ஜன்மங்கள் எடுக்கும்படியாகும். ஸம்ஸ்காரம் சேர்தலே கர்மம் உண்டாவதற்குக் காரணம். இதுதான் கர்மயோகத்தின் ரகஸ்யம்.

"இக்காயநீக்கி யினியொருகாயத்திற்
புக்குப்பிறவாமற் போம்வழிதேடுமின்,
எக்காலத்திவ்வுடல்வந் தெமக்கானதென்
றக்காலையுன்னவருள் பெறலாமே."—திருமந்திரம்.

---

## வேதமதம்.

நமது இந்து தேசத்தில் நெடுங்காலமாய் வழங்கி வரும் மதம் வேதத்தினின்றும் பிறந்ததாகலின் வேதமதம் எனப் பெயரிட்டாம். வேதத்தால் போதிக்கப்பட்ட மதம் வைதிகம் எனவும் பெயர்பெறும். வேதம் எனின் 'தத்துவங்களை அறிவிப்பது என்பது பொருள்.' ஆகவே தத்துவங்களைப் போதிக்கும் நாலுக்குப்பெயராயிற்று. இவ்வேதம் கடவுளால் செய்யப்பட்டதென்று சொல்லுகிறார்கள். சிலர் இவ்வேதம் யாவராலும் செய்யப்படாமல் அநாதியாயிருந்து கடவுளால் பிரமாவுக்கு உபதேசிக்கப்பட்டு, வழிவழியாய் உலகத்திற் பரவினதென்றும் சொல்லுகிறார்கள். இதற்குச் சுருதி என்றும் பெயருமுண்டு: அதாவது

'தொன்றுதொட்டுக்கேட்கப்பட்டுவருவது'; இவ்வேதமே இந்து மதத்துக்கு முக்கிய ஆதாரமானது. இது ருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என நான்கு பிரிவாயிருப்பதால், நான்கு வேதங்களென்றும் நான்மறை யென்றும் சொல்லப்படும். ருக்கு பெரும்பான்மையும் மந்திர பாகமாயுள்ளது; யஜுர் பெரும்பாலும் விதிமுறைகளை யுணர்த்துவது; சாமம் பெரும்பாலும் தோத்திர ரூபமாயுள்ளது; அதர்வணம் அரசர்க்கு வேண்டிய சாந்தி முதலியவைகளைக் கொண்டது. இந்த அதர்வண வேதம் முன் மூன்று வேதங்களினின்றும் எடுத்ததே யாதலால், அதனைக் கூட்டாமல் வேதம் மூன்றே என்பதும் உண்டு. அதனால் வேதத்துக்கு 'த்ரையீ' என்று ஒரு பெயர் வழங்கும். அன்றியும் வேதமெல்லாம் மந்திரம், பிராமணம் என இருபிரிவாயிருக்கும். மந்திரம் அந்தந்த தேவதையைப் பணியும் வாக்கியம். பிராமணம், மந்திரத்தை உபயோகித்துச் செய்யவேண்டிய முறைகளைத் தெரிவிப்பது. இதுவன்றி வேதம் கர்மகாண்டம் பிரமகாண்டம் என இருபிரிவுள்ளதாகும். கர்ம காண்டம் யாகாதி கிரியைகளைச் சொல்வது; பிரம காண்டம் கடவுளைப்பற்றிப் பேசுவது. இப் பிரம காண்டத்துக்கு உபநிஷத்து என்று பெயர். இதுதான் வேதாந்தம். "அந்தம்=சித்தாந்தம்=தேறிய கருத்து என்கிற படி, வேதத்தின் அந்தம்=வேதாந்தம்."

வேதத்தின் பொருளை அறிய மீமாம்சை, நியாயம், தர்ம சாஸ்திரம் முதலான சாஸ்திரங்களுண்டு. மீமாம்சையால் வேதத்தின் பொருள் இதுவெனக்கொள்ள நியாயங்களை யறியலாம். இம்மீமாம்சையின் கர்மபாகம் கர்மமீமாம்சை யென்றும், பிரம பாகம் பிரம மீமாம்சையென்றும் இருவகையாம். நியாய சாஸ்திரம், உத்தேச அநுமான பிரத்தியக்ஷ பிரமாணங்களின் லக்ஷணங்கள் கூறுவதாம். இதுதான் தர்க்கசாஸ்திரம். தர்மசாஸ்திரத்தால் பிராமணர்முதலிய நான்கு வருணத்தோரும் அநுஷ்டிக்கவேண்டும் ஒழுக்கங்களை அறியலாம். இதற்கு "ஸ்மிருதி" என்றுபெயர். வேதப்பொருளை எண்ணிச் செய்யப்பட்டது என்பது இதன் பொருள். மேற்சொன்ன சாஸ்திரங்கள்யாவும் ருஷிகளாற் செய்யப்பட்டவை. வேதங்களும் சாஸ்திரங்களும் சம்ஸ்கிருதபாஷையிலேயே யிருப்பதால் இப்பாஷை மேன்மையைப்பற்றி தேவபாஷை யெனப்படுகின்றது.

வேதத்தின் பொதுக் கோட்பாடு என்னவெனில் : பிரபஞ்சத்துக்காரணமாய், ஆதியந்த மற்றதாய், நித்தியமாய், சுயம்புவாய், ஞானாநந்தமயமாய், இன்னதென நிரூபிக்கக்கூடாததாய், சர்வவியாகமாய், சர்வக்ஞத்துவம், சர்வவல்லபத்துடன் ஒரு வஸ்துவுண்டு. அதுதான் கடவுள் என்றும், பிரமம் என்றும், பரமாத்மா என்றும், பகவான் என்றும், சர்வேஸ்வரன் என்றும் சொல்லப்படும். அக்கடவுளின் சங்கற்பத்தால் அவரிடத்து லயமாயிருக்கும் பிரகிருதியில் விகாரமுண்டாகி, 'மஹத்து' எனும் தத்வம் ஜனிக்கின்றது. அப்பிரகிருதியை விதைபோலும், அம்மஹத்தை முளைபோலும் கொள்ளவேண்டும். இப்பிரகிருதிதான் மாயை. அது சத்வம், ரஜசு, தமசு, என்னும் முக்குண மயமாயிருப்பது. இம்முக்குணங்களும் முறையே ஞானம், சாந்தம் முதலான உத்தமகுணங்கட்கும்; டம்பமுதலான மத்திம குணங்கட்கும்; கொலை, களவு, பொய்முதலிய அதம குணங்கட்கும் காரணமெனஒருவாறு யூகிக்கலாம். மனுஷன், மிருகம், பக்ஷி முதலான பூதவிகாரமெல்லாம் ஆத்மாக்களின் கர்மத்தாலுண்டானவை. ஆத்மாக்கள் அணுரூபங்களாய், நித்தியங்களாய், ஞானசொரூபிகளாயிருக்கும். அவைகட்குக் கணக்கில்லை. அவைகள் அநாதியாய் கர்மத்தினாலே மாயையிலகப்பட்டு ஜனன மரணாதி அவஸ்தைகளை அடைந்துகொண்டிருக்கின்றன. ஆத்மாக்கள் நல்வினை தீவினை யென்னும் கர்மவசத்தால் நற்கதியையும் துர்க்கதியையும், மாறி மாறி அநுபவித்து வந்து, ஞானத்தால் மோக்ஷமடைந்து நித்தியானந்தத்தைப் பெறுவார்கள். பாவ புண்ணியம் இரண்டும் பற்றற்று ஆத்மஞானங் கைகூடினபோது, மோக்ஷம் கிடைக்கும் என்பது சாஸ்திர சம்மதம். முன் சொன்ன ஸ்மிருதியில், நித்தியம், நைமித்திகம், காமியம் எனக் கர்மங்கள் மூன்றுவகையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. நித்யம் என்பவை பிராமணர் முதலிய நான்கு வர்ணத்தாரும் தினம் ஆசரிக்கவேண்டிய ஸ்நானம், சந்திய வந்தன முதலியவையாம். நைமித்திகம் என்பவை அமாவாசை சங்கிராந்தி முதலிய விசேஷநாட்களில் செய்யவேண்டிய கர்மங்களாம். காமியம் என்பவை சந்தான சம்பத்து முதலான பிரயோஜனங்களைக் குறித்துச் செய்யுங் கர்மங்களாம். இவையெல்லாம் தெரிவிப்பது மனுமுதலிய பதினெண்மர் செய்த அஷ்டாதசஸ்மிருதிகளென்னும் தருமசாஸ்திரங்கள். அவையாவன :

*"மனுஸ்மிருதி, தக்ஷஸ்மிருதி, யமஸ்மிருதி, பிருகஸ்பதிஸ்மிருதி, சங்கலிதஸ்மிருதி, பிரசேத ஸ்மிருதி, பராசரஸ்மிருதி, யாக்கிய வல்க்கியஸ்மிருதி, விஷ்ணுஸ்மிருதி, அத்திரிஸ்மிருதி, ஆங்கீரச ஸ்மிருதி, சம்வர்த்த ஸ்மிருதி, சாதாதபஸ்மிருதி, ஹாரீதஸ்மிருதி, ஆபஸ்தம்பஸ்மிருதி, கௌதமஸ்மிருதி, உசனஸ்மிருதி, வசிஷ்டஸ்மிருதி என்பவைகளே. அன்றியும், இவைகளை அனுசரித்தவைகளாய் உபஸ்மிருதிகளெனப் பதினெட்டுண்டு; அவையும் அவற்றைச் செய்தவர்கள் பேராலேயே வழங்கும். அவர்கள் யாரெனின்: சனத்குமாரர், ஜாபாலி, லோகாக்ஷி, காசிபர், காத்தியாயனர், ஸ்கந்தர், வியாக்கிரர், நாசிகேதர், வியாஸர், சந்தனு, கபிஞ்சலர், ஜாதுகர்ணர், விஸ்வாமித்திரர், போதாயனர், ஜனகர், பைடீனசி, கோபிலர், கணாதர், என்பவர்களேயாம்.

இந்த ஸ்மிருதிகளெல்லாவற்றிலும் மனுஸ்மிருதி சிறந்தது. அதனோடு மாறுபட்டால் எந்த ஸ்மிருதியும் ப்ரமாணமாக மாட்டாது."

மேற்சொன்ன மனுஸ்மிருதிமுதலிய பதினெட்டு ஸ்மிருதிகளும், அவைகளை யனுசரித்த பதினெட்டு உபஸ்மிருதிகளும், கருணையே உருக்கொண்டு அவதரித்த கௌதம சாக்கிய புத்தர்காலத்துக்கு முன்னரே செய்யப்பட்டிருக்கவேண்டும். அவை யுண்டானகாலத்து நமது தேசத்தார் இந்து மதம் தவிர வேறொரு மதமும், அதன் கோட்பாடுகளும் நீதிகளும் அறியாமலே யிருந்தார்கள். அதுபற்றியே அக்காலத்து மனுநீதி அதி மேன்மை பெற்றிருந்தது. மனுநீதி முதலியவைகளும் உபநீதிகளும் செய்தவர்கள் பெரும்பாலும் பிராமணர்களே யாகவும் பிராமண விசுவாசிகளேயாகவு மிருந்தார்கள். அதனாற்றான், மனு நீதியில் வேதம் ஓதல், ஓதுவித்தல், யாகஞ் செய்தல், செய்வித்தல், பிறருக்குக் கொடுத்தல், பிறர் கொடுக்க வாங்கல் ஆகிய இவ்வாறு தொழில்களும் பிராமணருக்கே யென்றும்; இவர் போன்று உபநயனம்பெற்ற, தமக்குத் தாழ்ந்த, க்ஷத்திரியருக்கும் வைசியருக்கும், வேதம் ஓதுவித்தல், யாகஞ்செய்வித்தல், பிறர் தர வாங்கல், இவை தவிர மற்ற மூன்றும் உண்டென்றும்; சூத்திரரோ தமக்குமேல் வருணத்தாருக்குப் பணிவிடைசெய்தல் தவிர மேலான

* இந்துமதசித்தாந்தம்—K. R. Press, Madras, 1st Edition, 1889.

எக்காரியங்களுக்கும் அருகரல்லவென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. உபநயனச் சடங்கு (முப்புரிநூல் தரிக்கும் சடங்கு) பெருமையால் சூத்திரர்கதியை நினைக்கவும் மிகு வியசனகரமேயாம். எப்படியெனில்,—சூத்திரர் தம் நாவினால் வேதத்தை உச்சரிக்கவே கூடாதெனவும், அதைப் பிறர் ஓதக்கேட்கவும் கூடாதெனவும்; அப்படிச்செய்யின் அவர் நாவைச் சுட்டு, அவர் காதில் ஈயத்தைக் காய்ச்சி விடவேண்டுமென்றும்; அவர் வேதமோதும் பிராமணர் ஆசனத்தில் உட்காருவராயின், அவர் புட்டத்தை அறுத்தல் வேண்டுமென்றும்; பிராமணர் முதலிய மூவரும், தம் தம் வருணங்களில் தவிர தமக்குக்கீழான வருணங்களிலும் பெண்களை மணஞ் செய்துக்கொள்ளலாமென்றும், அம்மனோபீஷ்டமும் சுதந்தரமும் சூத்திரர்க்குக் கிடையாதென்றும்; பிராமணப் பெண் ருதுவாகா முன்னமே விவாஹம் செய்யத் தக்கவளென்றும்; ருதுவான பின் விவாஹமாயின் அவள் சூத்திரப்பெண்ணுக்குச் சமானமென்றும்; சிரார்த்ததினத்தில் பிதுர்க்கள் உண்ட சேஷத்தை சூத்திரனுக்குக் கொடுக்கவும் கூடாதென்றும் மனுநீதியில் கூறப்பட்டிருக்கின்றது. இவை போன்ற கொடிய நிபந்தனைகள் மனுநீதியில் இன்னும் பலவுள. அவைகளை விரிக்கிற் பெருகும்.

---

## பிரமசரியம்.

மேற்சொன்ன உபநயனம் நடத்தப் பெற்றவனுக்கு பிரமசாரி என்று பெயர். பிரமம் என்றால் வேதத்துக்கும் பொருளாதலின், அதை ஓதத்தக்கவன் பிரமசாரி. பிரமசாரி யஞ்ஞோபவிதமல்லாமல் முஞ்சம்புல் அரை நாணும், மான்தோல் முதலிய உத்திரீயமும் தரித்திருக்கவேண்டும். பிரமசாரி குருவிடத்திலே பயபக்தியோடிருந்து, பாத வந்தனஞ் செய்து, கைகளைக் கட்டிக்கொண்டு, நல்ல மனதுடன் சுத்தனாய வேதாத்தியயனஞ் செய்யவேண்டும். வேத மோதாமல் மற்றொன்றை ஓதல் தக்கதல்லவென்பது சம்பிரதாயம். வேதம் ஓதாதவன் சூத்திரனுக்கு ஒப்பாக எண்ணப்படுவான் * எனச் சொல்லப்பட்டிருப்பதால், பிராமணகுலத்தில் மாத்திரம் பிறந்து, சம்ஸ்கிருத பாஷையே கற்காமல், ஜீவனார்த்தத்துக்காக இங்கிலீஷ் முத

* இர்துமத சித்தாந்தம்.

லான ஐரோப்பிய பாஷைகள் நன்கு கற்று, M. A., M. L., M. D., M. E., M. Sc., முதலான பல பெரும் பரீக்ஷைகளிற் றேறி, உயர்ந்த உத்தியோகங்கள் வகித்திருப்பதினாலேயே பிராமணரெனப்படார் எனச் சொல்லாதே அமையும். மேலும் பிறப்பினாலேயே ஒருவன் பிராமணனாகான், என ஸ்ரீகிருஷ்ண பகவான் பகவத் கீதையிற் கூறியிருக்கிறார். பிரமசாரி என்பான் சந்தனம், புஷ்பமாலை, தாம்பூலம் முதலிய போக வஸ்துக்கள் அநுபவிக்கலாகாது. பெண்கள் சமீபத்திருப்பதும், அவரோடு சம்பாஷிப்பதும், சங்கீதம் கேட்பதும் ஆகாது. "என்றுமே பிரமசாரியாயிருக்க இஷ்டமுள்ளவனுக்கு, நைஷ்டிகப் பிரமசாரி என்று பெயர். அப்படி யல்லாதவனுக்கு உபகுர்வாணன்—உபகாரஞ் செய்பவன் என்று பெயர்."

---

## கிரகஸ்தம்.

இந்த உபகுர்வாணன் கிரகஸ்தாஸ்ரமத்திற்புக இஷ்டங்கொள்ளும்போது, குருவுக் கறிவித்து அவரநுமதி பெற்று கலியாணஞ் செய்துக்கொள்ளவேண்டும். கலியாணம் செய்யப்படும் கன்னிகை, [சிற்றப்பன் மகளை மணஞ்செய்யும் துருக்கர் போலல்லாது] மகள் தங்கை முதலிய முறையிற் சேராதவளாயும், தனக்கிளையவளாயும், நல்லொழுக்கமுள்ள குலத்திற் பிறந்தவளாயும், அவலக்ஷணமில்லாதவளாயும், பெண்ணே பெறும் குலத்திலும், குஷ்ட முதலான கொடுநோயுள்ள குலத்திலும் பிறவாதவளாயு மிருக்கவேண்டும். 'விவாகம் சிறந்ததாயின் பிறக்கும் பிள்ளைகளும் சிறந்தவையாம். அது இழிந்ததாயின் பிள்ளைகளும் அப்படியே யிருக்கும்.'

"பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
மக்கட்பேறல்லபிற."—திருக்குறள்.

இப்படி தக்க பெண்ணைத் தக்க விவாகத்தாற் கொண்டு; நல்லபடி இல்லற நடத்திவந்தால் சகல சுகிர்தமுமுண்டாகும். பெண்ணைக் கொடுப்பவரும் பாத்திரமறிந்தே கொடுக்கவேண்டும். குலப்பிரஷ்டனுக்கும், நன்னடக்கையில்லாதவனுக்கும், தீராப் பிணியனுக்கும், விகார ரூபமுள்ளவனுக்கும், அங்கஹீனனுக்கும், ஏலாவுருவத்தானுக்கும், வீரிய மற்றவனுக்கும், திறமையில்லானுக்கும் கன்னிகையைத் தரலாகாது. பெண், கணவ

னுக்கும் மாமனார் முதலிய பெரியோர்க்குமடங்கி, தக்க உபசாரஞ் செய்துகொண்டு சமுசாரத்தை நடத்தி வரவேண்டும்.

"தற்காத்துத்தற்கொண்டாற் பேணித்தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள்பெண்."

"பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னும்
திண்மையுண்டாகப் பெறின்."—திருக்குறள்.

பெண் கொண்டாரும் தங்கள் வளத்துக் கேற்க ஆடையணி முதலியவைகளால் மருமகளை உற்சாகப்படுத்தி வைத்திருக்கவேண்டும். அப்படியன்றி—நம்மவர்களில் கல்வியறிவில்லாக் கணவர் குடும்பங்களில் சகஜமாக நடந்து வருவதுபோல—அப்பெண்ணைத் துன்பப்படுத்தினல், அல்லது ஆதரியாது விட்டால், அது மனநொந்து கண்ணீர் உகுக்க, 'அதைக்கொண்ட குடி தீப்பற்றி எரிந்தாற்போல் அழியும்'!

இல்லறத்தான் அல்லது கிரகஸ்தன், மற்றெல்லா ஆஸ்ரமத்தாருக்கும் ஆதாரமானவனுதலால், தரும நிலைக்கும் உலக நிலைக்கும் அவனே காரணனுயிருக்கிறுன். அவன் அதிதி என வருபவனை முந்தி உண்பிக்கவேண்டும். 'அதிதிக்குத் தன்னுற் கூடுமளவு உபசாரஞ் செய்யாதவன் பாவியாவான்.'—இந்துமத சித்தாந்தம்.

"துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கும்
இல்வாழ்வானென்பான் துணை."

"அறத்தாற்றினில்வாழ்க்கையாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவதெவன்."—திருக்குறள்.

"அதிதி என்ருல் வழிப்போக்கனுய் அன்ன முதலிய உதவி பெறும் பொருட்டு வருபவன். அவன் ஒருநாளிருந்தாலே அதிதி எனச்சொல்லப்படுவான். ஊரிலிருப்பவனையும் வேறொரு நிமித்தத்தால் வருபவனையும் அதிதி யென்று சொல்லக்கூடாது. சோற்றுக்காகவே ஊரூராய்த் திரிகிறவனும் அதிதியல்லன். பிராமணனுக்கு பிராமணனே அதிதி. க்ஷத்திரியனுக்கு க்ஷத்திரியனும் பிராமணனும் அதிதி யாவார்கள். வைசியனுக்கு பிராமணன் முதலிய மூவருமே அதிதியாவார். ஒருக்கால் (வைசியன் இல்லத்துக்கு) க்ஷத்திரியனும் வைசியனும் சூத்திரனும் அதிதி முறையில் வந்தால், பிராமணர்கள் உண்டபின் க்ஷத்திரியனையும்,

பின்பு வைசியனையும், தன் வேலைக்காரரோடு கூடச் சூத்திரனை யும் உண்பிக்கலாம்.'' *

"விருந்துபுறத்ததாத் தானுண்டல்சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று.''—திருக்குறள்.

எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் தமது திருக்குற ளில் சாதித்தார். உலகத்துள்ள நீதி நூல்களில் திருக்குறளுக்குச் சமானமான நூல் கிடையாது. எப்பாஷையில் தான் குறள் போன்ற நூலுண்டு? இதன் ஒப்பற்ற சிறப்பும் மாசிலாப் பொது நீதியும் கண்டே ஐரோப்பிய பண்டிதரிற் பலர், தத்தம் பாஷைகளில் செய்யுள் ரூபமாகவே மொழி பெயர்த்தார்கள். இதற்காக கிறிஸ்துவ குருபட்டம்பெற்ற Mr. Drew, Dr. Pope முதலியோர் பட்ட பிரயாசை சிறிதல்ல. இவ்விந்து தேசத்து நீதியைக்குறிக்க, திருக்குறள் ஒன்றே சான்றாம். தமிழ்ப்பாஷை யின் அருமையும் ஒப்பிலாப் பெருமையும் பேச, திருக்குறள் ஒன்றே போதும்!

சகல பிராணிகள் விஷயத்திலும் கருணை பாராட்டல் அவ சியமென்பது யாவருமே ஒப்புக்கொள்வார்கள். அதிலும், கருணை என்பது மனிதனுக்கிருக்க வேண்டிய முக்கிய குண மாகையால், பசி தாபம் பொறுக்க முடியாமல் வருகின்றவரில், ஜாதிபேதம் பாராமல் தன்னாலியன்றமட்டும் அத்தாபத்தைத் தணிக்க வேண்டுவது கிரகஸ்தனுக்குக் கடமையாம்.

"ஆற்றுவாராற்றல் பசியாற்றலப்பசியை
மாற்றுவாராற்றலிற்பின்.''—திருக்குறள்.

அப்படிக்கிருக்க பிராமணர் சுயநன்மைக்காகவே ஏற்பட்ட மநுஸ்மிருதியில், வருணபேதங்களும், அவற்றின் உயர்வு தாழ்வு களும் பேசியிருப்பதுபோல, எல்லோருக்கும், எவ்வருணத்தா

---

* இச்சங்கிரகம் சுமார் 40 வருஷத்துக்கு முன் ஜீவித்திருந்தவரும், வடமொழி தென்மொழி இரண்டிலும் நிபுணத்துவம் பெற்றவரும், பிரெஸிடென்ஸி காலேஜில் தமிழ்த்தலைமைப்பண்டிதராயிருந்தவரும், யாம் அங்கு வாசிக்கையில் எமக்குங் குருபீடமாயிருந்தவருமாகிய தி. ஈ. ஸ்ரீநிவாசராகவாசாரியார் இயற்றிய 'இந்துமத சித்தாந்தம்' என் னும் அரிய சிறு புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டது. இச்சங்கிரகத்தி லடங்கிய விஷயம், பேர்பெற்ற ஸ்மிருதியின் கோட்பாடேயன்றி, அப் பண்டிதர் சொந்த அபிப்பிராயமல்லவெனக் கொள்ளலாம்.

ருக்கும் பொதுத் துன்பமாகிய பசிக்கும் பேதம் கற்பித்து இன்னருக்கு இன்னர்தான் அதிதிகளென்றும், இன்னர் உண்டபின் தான் இன்னரை உண்பிக்கவேண்டும் என்றும் விதித்திருப்பது எவ்வாற்ருலும் தருமமாகாது. உயர்குலத்திற் பிறந்தோரென்பார், தம் வீட்டுக்குத் தமக்கிழிவான குலத்தார் ஒருவேளை அதிதி முறையில் வந்தால், அவரைத் தம்பக்கலி விருத்தி உண்பிக்கச்' சம்மதமில்லாவிடினும், ஏககாலத்திலே தாம் புசிக்கு நேரத்திலே, பிரத்தியேக ஸ்தானத்திலே வைத்தாவது புசிப்பித்தால் என்ன தோஷம், என்னகுறைவு உண்டாகும்? கீழ்க்குலத்தான் பசிபாதை மேற்குலத்தான் பசிபாதைதீருமளவில் பொறுத்துக் கொண்டிருக்குமோ அறியேம்! இக்கொடுமை கருணையாகுமா? இவ்விருமாப்பு சகோதரத்துவம் உண்டாக்குமா?

கிரகஸ்தனனவன் தன் வீட்டிலுள்ள பிணியாளரையும் கர்ப்பஸ்திரீகளையும், மூப்புடைய தாய்தந்தை முதலிய பெரியோரையும், அதிதிகளுக்கு முன் உண்பிக்கவேண்டும். சந்நியாசி பிக்ஷைக்கு வந்தால் உடனே பிக்ஷை யிடவேண்டும். இவ்வாறு ஆதரிக்க வேண்டியவர்களை ஆதரித்துத் தான் புசிக்கவேண்டும். இரவில் வந்த அதிதி முதலானோர்க்கும் கூடிய உபசாரஞ்செய்யவே வேண்டும். இது தருமமே. இக்காலத்தில், செல்வச் செருக்கினலும், வீண் கல்விக் கொழுப்பினலும் பெரும்பாலும் பிணியாளரை அசட்டை செய்தும், கிழத் தாய்தந்தையரை உபேக்ஷித்தும், போலிச் சந்நியாசிகள் பெருத்துப் போயிருக்கவே— உண்மைச் சந்நியாசி பிக்ஷைக்கு வரினும் நீர் வேலையற்று வந்தீர் எனச் சொல்லித் துரத்தியும் வருகிருர்கள்! மேற்கூறியவாறு "ஆதரிக்கவேண்டியவர்களை ஆதரியாமல் விட்டுத்தானே உண்டு களிப்பவன் பாவத்தையே நிரப்பிக்கொண்டவனுகிருன்."—

இந்துமத சித்தாந்தம்.

---

## வானப் பிரஸ்தம்.

மேற்சொன்ன வண்ணம் கிரகஸ்தனனவன் சர்வ ஜீவர்களிடத்தும் தயை யுள்ளவனுய் தரும மார்க்கத்தில் ஜீவித்துக் கொண்டு காலங் கழித்துவர, தனக்கு மூப்புவரும் தருணத்தில், வனத்திற் போய்த் தவஞ் செய்யவேண்டும். இதுதான் வானப் பிரஸ்தாஸ்ரமம். வானப் பிரஸ்தன் எனில், வனத்திற் சென்ற

வன் என்பது பொருள். இவன் கட்டில் மெத்தை தலையணை முதலிய சகல உபதானத்தையும் அறவேவிட்டு, ஜடையும் தாடியும் மயிரும் நகமும் வளர்த்துக்கொண்டு, தழைகளாலிட்ட குடிசையில் வசிக்கவேண்டும். இவன் கிரகஸ்தாச்சிரமத்திருக்கையில் உண்ட உணவுகளை யொழித்து, காட்டிலுள்ள கனி கிழங்கு முதலியவைகளையே புசிக்கவேண்டும். இவன் மனைவியை தன் மக்களிடத்து விட்டாவது, தன்னோடு கூட்டிக்கொண்டாவது செல்லலாம். மரவுரி மான்தோல் முதலியவைகளை உடுத்திக்கொள்ள வேண்டும். ஓமம் ஓதலை விடக்கூடாது. உண்ணும் உணவுகளை நெருப்பினாற் பக்குவஞ்செய்து உண்ணலாம்; அல்லது தனக்கு எப்படி பக்குவமோ அப்படிச் செய்யலாம். கிருச்சிரம் என்னும் மூச்சைக் கட்டுப்படுத்துவதாகிய விரதமும், சாந்திராயணம் என்னும் கவளங்களை வளர்த்தும் குறைத்தும் உண்பதாகிய விரதமும், காலக்கிரமப்படி அநுஷ்டித்து வரவேண்டும். வெய்யிற் காலத்தில் நெருப்பண்டையிலும், மழைக்காலத்தில் தண்ணீரிலும், பனிக்காலத்தில் வெட்டவெளியிலும் இருந்துகொண்டு தவஞ்செய்து வரவேண்டும்.

"இப்படியாக முறை முறையாய் வானப் பிரஸ்தர் தம் முடம்பை உலர்த்தி, அக்கினியையும் ஆத்துமாவில் ஏற்றிக்கொண்டு, ஓரிடமும் ஓர் பற்றும் இல்லாதவராய், காட்டிலேயே நினைத்த விடத்தில் திரிந்துகொண்டு, முனிவரிடத்திலேயே பிக்ஷை பெற்றுக்கொண்டு, சில சமயம் கஷ்டகாலமானால், அண்டை ஊர்களிலிருந்தாவது உணவு அழைப்பித்து எட்டுக் கவளங்கட்கு மேற்படாமல் உண்டுகொண்டு, ஆத்தும சித்திக்காக உபநிஷத்துகளையே பாராயணம் பண்ணிக்கொண்டு, யோக நிஷ்டையினாலேயே உயிர்விடவேண்டும். இப்படிப்பட்டவர்கள் தாம் இருஷிகள் என்றும், முனிகள் என்றும், தபசிகள் என்றும் சொல்லப்படுவார்கள். இவர்கள் சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கும் பல விரதங்களை அநுஷ்டிப்பதனால் பலவகைப்பட்டிருப்பார்கள். இவர்களில் மௌனவிரதிகளும் சிலருண்டு. ஒரு பக்ஷம் உபவாஸமிருந்து கடைசியில் உண்கிற பக்ஷோபவாஸிகளும், அப்படியே மாசோபவாஸிகளும், எப்போதாவது கொதி கஞ்சியையுண்டு சும்மா இருப்பவர்களும், இன்னும் பல நியமத்தார்களும் உண்டு."—இந்துமத சித்தாந்தம்.

## சந்நியாஸம்.

இவ்வாறாக வானப்பிரஸ்தாஸ்ரமத்திலிருந்து மிக்க வைராக்கியமடைந்து சந்நியாசாஸ்ரமத்தில் புகவேண்டும். இது மோக்ஷத்திற்கே உரிய ஆஸ்ரமமாகலின் மோக்ஷாஸ்ரமம் என்றும் பெயர் பெறும். மற்ற ஆச்சிரமங்களில் மோக்ஷத்திற்கான ஞானம் பெறுவதுபோல் அறம் பொருளின்பங்களைப் பெறலாமாதலால், அவை மோக்ஷத்திற்கே உரியவைகளல்ல. சந்நியாசம் என்னும் பதத்திற்கு முற்றத்துறத்தல் என்பது பொருள்.

"யாதனின்யாதனின் நீங்கியானோத
லதனிலதனி னிலன்"

"அடல்வேண்டுமைந்தன் புலத்தைவிடல்வேண்டும்
வேண்டியவெல்லா மொருங்கு"

"பற்றிவிடா அவிடும்பைகள்பற்றினைப்
பற்றிவிடா அதவர்க்கு"

"பற்றற்றகண்ணே பிறப்பறுக்குமற்று
நிலையாமை காணப்படும்"

"பற்றுகபற்றற்றான் பற்றினையப்பற்றைப்
பற்றுகபற்று விடற்கு"—திருக்குறள்.

சந்நியாசியானோன் காஷாய வஸ்திரமே கட்டவேண்டும். அதுவும் கிருகஸ்தர் தரித்த பழைய வஸ்திரமாயிருக்கவேண்டுமே யல்லது புதியதாயிருக்கக்கூடாது. உத்தரீயமுதலானது தக்கதன்று. சந்நியாசிகட்கு தண்டகமண்டலங்களிருக்கவேண்டும். அத்தண்டம் ஒரு வகை மூங்கிற்கொம்பாயிருக்கவேண்டும். அக்கமண்டலம் மண்ணாலாவது மரத்தாலாவது மூங்கிலாலாவது செய்யப்பட்டிருக்கவேண்டும். பிராமண சந்நியாசிகளில் குடுமியையும் பூணூலையும் துறந்தவருமுண்டு; தரித்தவருமுண்டு. சந்நியாசஞ் செய்தவன் ஒருவரையும் பகையாமல், ஒருவரையும் பரிவசிக்காமல், ஒருவர்மேலும் பொறாமைகொள்ளாமல், ஒருவரையும் தூஷிக்காமல், எவ்வித அகங்காரமும் கொள்ளாமல், ஒருவர்மேலும் புறங்கூறாமல், யாதுக்கும் பொய்பேசாமல், காமாதிகளை உள்ளபடி துறந்து, மனத்தில் வஞ்சமொழித்து,

"வேட்டியுர்தாழ்வடமும் வெண்ணீறும் வெண்பல்லுங்
காட்டுவது ஞானக்களவுகாண்."

என் ஒழிவிலொடுக்கத் திருவெண்பாவிற் கூறியபடி, வீண் வேஷம் போட்டு உலகத்தை வஞ்சித்துத் திரியாமல்; ஏகாங்கி, ஏகாங்கிஸ்வாமி, யதி, யதீந்திரன், யதீஸ்வரன், பிரம்மம், வேதாந்த சிங்கம், சித்தாந்த சிம்புள், சைவச்சண்டமாருதம், பரசமயக் கோளரி எனப் பல்வகைப்பயனிலாப்பட்டங்கள் தாங்கிக் கர்விக்காமல்; மூடப்பிரஜைகள் மயங்கி மருண்டு தம்மடிபணிந்து பூஜிக்க விருப்பங்கொள்ளாமல்; 'கல்வி கரையில, கற்பவர் நாள் சில'; 'கற்றது கைம்மண்ணளவு, கல்லாதுலகளவு';—எனும் ஞான நீதிவாக்கியங்களை எக்காலுமறவாமல், அடக்கம்பூண்டு சர்வ பூதங்கள்மேலும் அன்புவைத்து, சர்வபூதங்கட்கும் அபயங்கொடுத்திருக்கவேண்டும்.

"வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம்பூதங்க
ளைந்து மகத்தேநகும்"

"பயனில்சொல் பாராட்டுவானை மகனெனல்
மக்கட்பதடியெனல்"

"செறிவறிந்துசீர்மை பயக்குமறிவறிந்
தாற்றினடங்கப்பெறின்"—திருக்குறள்.

சந்நியாசி தற்செயலாய் வரும் போகங்களையும் ஏற்கலாகாது. வைதீகாக்கினியை ஆத்துமாவில் ஆரோபித்துக் கொண்டு லௌகிகாக்கினிப்பற்றேயில்லாமல், கிருகஸ்தர் இல்லங்களில், அவர்கள் புசித்தான சமயத்திற்சென்று பிக்ஷையேற்றுப் புசிக்கவேண்டும். தரித்திரரிடஞ் செல்லலாகாது? யாரையும் நெருக்கலாகாது. பிக்ஷ கிடைத்தால் சந்தோஷமும் கிடையாவிட்டால் துக்கமும் கொள்ளலாகாது. ஓரிடமென்னும் நியமமின்றி, மரமுதலாக நேரிட்டவிடத்தில் வசிக்கவேண்டும். வெய்யில், பனி, மழைக்காற்று, குளிர்காற்று முதலானவைகளால் தேகத்துக்கு நேருந் துன்பங்களுக்கு அஞ்சாமல் சகித்துக் கொண்டு, மனம் மாறுமல் களிப்புடனேயே யிருக்கவேண்டும். தம்மவரென அன்பும், பிறரென வெறுப்பும் அற்றேயிருக்க வேண்டும். 'பிழைத்திருப்பதையும் மரணத்தையும், சமானமாகவே எண்ணவேண்டும்'! நடக்கும்போது தரையில் ஒரு ஜந்துவும் இல்லாதிருக்கப்பார்த்து அடி வைக்கவேண்டும். தண்ணீரை நன்றாய் வடிகட்டி சுத்தித்துச் சாப்பிடவேண்டும். மனதிற் களங்கமற மெய்யான சங்கற்பமே செய்யவேண்டும். தன்னை யொருவன் வைதாலும், எத்துன்பஞ்செய்தாலும், அவன்மேல்

கோபியாமல் அவனை வெறுக்காமல், அவனிடம் நற்பேச்சே பேசவேண்டும்.

"ஒறுத்தார்க்கொருநாளையின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும் புகழ்"—திருக்குறள்.

யதியானவன் குறி சொல்லல், ஜோதிஷ பலன் சொல்லல், வாதஞ்செய்தல் முதலான காரணங்களைக்கொண்டு பொருள் வாங்க முயலக்கூடாது. வேதாந்தவிசாரணையே செய்துகொண்டும், தக்கவர்க்கு அதன் பொருளைப் போதித்துக்கொண்டும், பிரமத்தியானமே செய்துகொண்டும் அதிலேயே பற்றுள்ளவனாயிருக்கவேண்டும். ஒருவனைத் திரிவதையே விரும்பியிருக்க வேண்டும். முனிவர் சூழ்ந்திருக்கும் இடத்தில் பிக்ஷைக்குச் செல்லலாகாது. யதியானவன் எவ்விதத்திலாவது மனங் கலங்கி நிஷ்டை குலையும்படியான வழியில் நின்றாலும், கீர்த்தி லாபங்கட்குக் கிஞ்சித்து ஆசைவைத்தாலும், உடனே அவன் கெட்டு மறுபடியும் பிறப்புக்கே உரியனாவான். ஆதலால், பிக்ஷைக்குக்கூட ஓரிடத்திலும் பற்று வைக்கலாகாது. வேதாந்தசாஸ்திரமன்றி மற்றெச்சாஸ்திரமும் பயிலலாகாது. யோகநிஷ்டனாய், மோக்ஷத்திற்குரிய வழியைக் கைவிடாதே யிருக்கவேண்டும்.

"வாணாளைவீண்கழிக்கு மானிடரைப்போன்மயக்கம்
பூணார்பொய்கண்டு துறப்போர்"—ஒழிவிலொடுக்கம்.

சந்நியாசி தன் ஆஸ்ரமத்திற்குரிய ஆசாரங்களிற் சிறிது தவிர்ந்தாலும் பிரமத்தியானத்தைக் கிஞ்சித்தும் மறத்தலாகாது. இவ்விதமாய்ச் சந்நியாசி பிரமநிஷ்டையிலேயே யிருப்பனாகில், இம்மையிலும் பேரானந்தத்தோடிருந்து, இவ்வுடலையாதொரு வருத்தமின்றி விட்டு, நித்தியானந்தமாகிய பிரமத்தை அடைவான். முயற்சி கைவிடாமலேயிருந்தால் ஞானம் கைகூடாமற்போகாது. இகத்தில் விரக்தியுண்டானபோது சந்நியாசங் கொள்ளலாமாயினும், ஆச்சிரம முறைப்படியே வருவது தக்கதென்று இவ்வாறு கூறப்பட்டது.

வானப்பிரஸ்தாஸ்ரமமும் சந்நியாசாஸ்ரமமும் சூத்திரர் அநுஷ்டிக்கத்தக்கவையல்லவென்பது ஸ்மிருதிகளின் துணிபு.

"யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்தவுலகம்புகும்"—திருக்குறள்.

பிராமணர்கள் ஏற்படுத்திய தர்ம சாஸ்திரங்களின் துணிபு இவ்வாறிருக்க, எக்கண்டத்தாரும், எத்தேசத்தாரும், எவ்வருணத்தாரும் யாதொரு ஆக்ஷேபமும் செய்யாது ஒப்பத்தக்க நீதி நூலாகும் திருக்குறள் பாடிய தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் மோக்ஷசாம்பிராஜ்யமடையவிரும்பும் ஜீவர்களுக்குள் வருணபேதம் காட்டவில்லையே? மோக்ஷமென்பது பிரம்ம க்ஷத்திரிய வைசியருக்கே உரியது, சூத்திரருக்குரியதல்லவென்று எங்கும் சொல்லவில்லையே? மோக்ஷம் என்பது யாவர்க்கும் பொதுவான பதவியாயிருக்க அது சூத்திரர்க்காகாது எனச் சொல்லியிருப்பது அப்பிராமண தருமநூலுக்கு எவ்வாற்றானும் தகாது. சூத்திரரில் சந்நியாசிகள், ஞானவான்களில்லையா? துருக்கரில் மகத்துக்களில்லையா? பஞ்சமரில் பக்தர்கள் முக்தர்களில்லையா? எத்தேசத்தும் முத்தர்களுண்டு; எவ்வருணத்திலும் ஞானிகளுண்டு.

> "எவனுகிலுமிந்தத் துரியாதீதத்தி லேலழாம்பூமியிலிருந்தானேல்
> அவனுரதன் சிவன்மாலயன் முதலறிவோ ரனுபவசுகபோதம்
> விவகாரநிர்சயமிதுவே யனுபவமெனமுன்சொல்லியவிவகாரி
> உவமானமுமறிமகனே யவனடியுதிரும்பொடிகளென்முடிமேலே."!
>
> கைவல்யநவநீதம்.

சந்நியாசமானது நான்கு வகையென நமது ஞானநூல் கூறுகின்றது: அவை குடீசக சந்யாசமெனவும், பகூதக சந்யாசமெனவும், ஹம்ச சந்யாசமெனவும், பரமஹம்ச சந்யாசமெனவும் ஆகும். இச்சந்யாசங்கட்கு நிராசை காரணமேயன்றி வேஷம் காரணமன்று. துறவுக்குக்காரணமான விராகமும்,—மந்தவிராகம், தீவிரவிராகம், தீவிரதர விராகம், என மூவகையாம். அவற்றில் துக்கம்வருங்கால் சம்சாரத்தை வெறுக்கும் விராகம் மந்தவிராகம்; இத்தேகமுள்ளளவில் மனைவி, மக்கள், திரவிய முதலியவை வேண்டாமெனத் துறத்தல் தீவிர விராகம்; பிராமணர் எழுதிய கர்மகாண்டக் கோட்பாடுகள், கற்பிதம், சுத்தபொய்யென்று துறத்தல் தீவிரதர விராகமாம். மந்தவிராகத்தில் துறவு சித்தியாது; தீவிரவிராகத்தில் குடீசக சந்யாசமும், பகூதக சந்யாசமுமென இருவிதங்களுளவாம். எட்டி நடக்கப் பலமில்லாருக்கு குடீசகசந்யாசமும், எங்கும் நடக்கப் பலமுள்ளவர்க்கு பகூதக சந்யாசமும் உரியனவென்று மேலோர் நியமித்துள்ளார்கள்,

தீவிரதரசந்யாசத்தும், ஹம்ச சந்யாசி எனவும், பரமஹம்ச சந்யாசி எனவும் இருவிதமெனச் சத்துக்கள் உரைப்பார்கள். ஹம்ச சந்யாசிக்கு மோக்ஷம் 'பிரமலோகத்தில்' கிடைக்குமே யன்றி இவ்வுலகிற் கிடையாதென்றும்; பரமஹம்ச சந்யாசிக்கோ மோக்ஷம் இவ்வுலகின்கண்ணே ஞானத்தாற் கிடைக்குமென்றும் சொல்வார்கள்.*

இவ்விந்து தேசத்தில், இக்காலத்தில், கல்கத்தா நகரத்தில், ஸ்ரீ விவேகானந்த ஸ்வாமிகளுக்குப் பரமகுருவாய், ஞான சூரியனாய் விளங்கிய ஸ்ரீராம கிருஷ்ணரே பரமஹம்ச சந்யாச சித்தி பெற்றவரென்று பல விவேகிகள் சொல்லக்கேட்டிருக்கிறோம். அம்மஹாத்மாவின் நாவினின்றும் வெளியான ஞான போதங்களும் யாம் வாசித்துள்ளோம். அவைகள் மிகு அற்புதமான ஞானநீதி போதங்களேயாம்! அம்மஹானுபாவரை, இவ்விராஜ தானியார் (ஸ்ரீ விவேகானந்தரைத் தரிசித்துப் பிரசங்கங்கேட்டுக் களித்ததுபோல) தரிசித்து, ஆனந்திக்க நேரிடாதது பெருந்தவுர்ப்பாக்கியமென்றே கூறலாகும்! கருணை நிரம்பிய இத்தகைப் பெரியோரே அந்தணரெனத் தக்கோர். இம்மஹான்கள் மஹிமையைச் சொல்ல யாவரால் தரமாகும்?

> "அந்தணரென்போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
> செந்தண்மை பூண்டொழுகலான்"
> "துறந்தார்பெருமை துணைக்கூறின் வையத்
> திறந்தாரையெண்ணிக் கொண்டற்று"—திருக்குறள்.

மேற்கூறிய பரமஹம்ஸ சந்யாசியும். சிஞ்ஞாசு, சுஞ்ஞானி என இருவிதமாம். சிஞ்ஞாசு, ஞான பூமிகள் எழில் முந்தின மூன்று பூமிகளிற் செல்லும் விவேகியாம்; சுஞ்ஞானி, ஜீவன் முத்தியைப் பெற்றிருக்கும் பரிசுத்தமான மஹானாம். அன்றியும், சிஞ்ஞாசுக்களும் இருவகை யியல்புடையவராம். சிலர் பந்தமான இல்வாழ்க்கையைவிட்டுத் துறவிகளாயிருந்து பிரம ஞானத்தைப் பெறுவார்கள்; சிலர் பிராமணராகவும் க்ஷத்திரியராகவும் வைசியராகவும் சூத்திரராகவுமிருந்து பிரம ஞானத்தை அடைவார்கள். இவ்வாறு ஞானநூலிற் சொல்லியிருப்பதால், முத்தியடைதற்கு விராகத்தால் வரும் சாந்தியே காரணமன்றி, இல்லறம் துறவறம் என்னுமிரண்டு மல்லவெனக் கொள்ள வேண்டும்.

---

* கைவல்ய நவநீதம்—சந்தேகந் தெளிதற்படலம்.

"ஞாலமுண்டவன் தலைமிசைசுமப்பன் மெய்ஞ்ஞானி வேண்டுவதெல்
ஆலமுண்டவனவன்பின்னே திரிகுவனவனடித்துகட்கன்றோ [லாம்
சீலமன்னரு மற்றுளதேவருந் திசைதிசைபணிந்தேத்தக்
காலிரண்டையும் தலைமிசைவையெனக் கழறுவன்கமலத்தோன்."
—ஞானமிர்தம்.

## பொது தர்மம்.

சத்யம், சர்வஜீவதயை, பொறுமை, உண்மையான தேவ பக்தி, சுத்தி, பொறாமையின்மை, மங்களமுடைமை, லோபத் தனமின்மை, ஆகிய இக்குணங்கள் யாவர்க்கும் அவசியமிருக்க வேண்டும். சத்யமாவது பிறருக்குத்துன்பம்வராதபடி பொய்யை யொழித்து மெய்யையுரைத்தல். மெய்யினாலும் தீமை உண்டாகு மாயின் அது பொய்க்குச் சமானமேயாம். பொய்யினாலும் நன்மை யுண்டாகுமாயின் அது மெய்க்குச் சமானமெனலாம்.

"பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த
நன்மைபயக்குமெனின்"—திருக்குறள்.

தயை என்பது பிறர்க்கு நேர்ந்த துன்பம் தனக்கு நேர்ந் ததுபோல மனநொந்து அதை நீக்கமுயலுதல். பொறுமை யாவது தன் விஷயமாய்ப் பிறர் செய்த குற்றத்திற்காக கோபங் கொள்ளாதிருத்தல். தேவபக்தி என்பது கடவுளிடத்தும் ஞானி களிடத்தும் அன்பாயிருத்தல். பூஜை என்பது ஈஸ்வரனிடத் தில் பரமபிரேமை வைப்பதும், சமஸ்த பிராணிகளிடத்தும் காருண்யம் வைப்பதுமாம். சுத்தியாவது மனவாக்குக் காயங் களினால் தகாதகாரியங்களை எண்ணாமலும் சொல்லாமலும் செய் யாமலுமிருத்தல். 'மங்களமுடைமையாவது மனோவாக்குக் காயங்களினாலே தனக்காயினும் பிறனுக்காயினும் துக்ககரமா னவைகளைப் பரிசியாமல் பிரியமானவைகளே செய்தல்'. பொருள் சம்பாதித்தல் தகாத வழியால் கூடாது.

"பழியஞ்சிப்பாத்தூணுடைத்தாயின் வாழ்க்கை
வழியஞ்சலெஞ்ஞான்றுமில்"
"அன்புமறனுமுடைத்தாயினில்வாழ்க்கை
பண்பும்பயனுமது"—திருக்குறள்.

மனிதன் முக்கியமாய் நீக்கவேண்டிய குணங்கள் ராகத் துவேஷாதிகளாம். அவைகள் இவை: (1) ராகம்—பரஸ் திரீயை இச்சிப்பது. (2) துவேஷம்—அபகாரத்துக்குப் பிர தியபகாரம் பண்ண நினைப்பது. (3) காமம்—மேலுமேலும்

பொருள் முதலியவை மேல் ஆசை கொள்வது. (4) குரோதம்—தன் காரியத்துக்கு விக்கினஞ் செய்தவன்மேல் ஆக்கிரமித்தல். (5) லோபம்—ஒரு காசும் செலவிடக்கூடாதென்னும் சித்தவிருத்தி. (6) மோகம்—தான் சம்பாதித்ததன் பேரில் பிரியமோதப் பிரமோதமாய்வரும் சித்தவிருத்தி; வஷிகரமுள்ள ஸ்திரீயின்மேல் மிதமிஞ்சிய ஆசைவைத்தல். (7) மதம்—ஐஸ்வரியமோ கல்வியோ மேலிட்டுக் கர்வமடைதல். (8) மச்சரம்—ஒருவர் சுகத்தைக்கண்டு சஹியாமை. (9) ஈரிஷை—தன் துக்கம் பிறர்க்கும் வராதா என்றெண்ணுகை. (10) அசூயை—தன்சுகம் பிறர்க்கும் வரலாமா என்று எண்ணுகை. (11) டம்பம்—தன் தர்மம், வீடு, ஆடை ஆபரணாதிகளை யாவரும் மெச்சவேண்டு மென்றெண்ணுகை. (12) தர்ப்பம்—சகல சம்பத்தும் தனக்கே உரியது என்றெண்ணல். (13) அகங்காரம்—தனக்கு மிஞ்சினவன் ஒருவனுமில்லையென்றெண்ணல்.

பொதுதர்மம்—தொடர்ச்சி.—தமக்குக் கல்வி கற்பித்த குருவையாவது சாஸ்திரோபதேசம் செய்த குருவையாவது தெய்வம்போலெண்ணி உபசரிக்கவேண்டும்.

ஈங்கு இடையிலே ஓர் விஷயத்தை நியாயவாயிலாகத் தர்க்கித்துத் தெளிவோம் :

நீதியும் கடமையுமிதுவாயிருக்க, மஹாபாரதப்பெரும் போர்க்கு ஆயத்தமாய் போர்க்களத்தில் ரதாரூடனாய் நின்ற, அழியாப்புகழ்பெற்ற யுத்த வீரனாகிய அர்ச்சுனன், தன்னெதிரே போர்க்கோலங்கொண்டிருந்த கௌரவ சேனையில், தனக்கு வில்வித்தை கற்பித்த குருவையும், தன் மூதாதையரையும், பிரபிதாமகரையும், தாயாதி சகோதரரையும், தன் குருவின் குமாரரையும், மற்றுமுள்ள பெரியோரையுங்கண்டு, சர்வப் பிராணிகளும் தானேயென்ற ஸ்ரீ கிருஷ்ணரை நோக்கி, ஓ கிருஷ்ணா! என் உறுப்புகள் தவறுகின்றன; என் நா உலருகின்றது; காண்டீபம் என் கையைவிட்டு நழுவுகின்றது; என் தேகமெங்கும் எரிகிறது; எனக்கோ நிற்கச்சக்தியில்லை; என்மனமோ சுழலுகின்றது; என் உறவோரையும், குருமாரையும், தகப்பன்மாரையும், சிற்றப்பன்மாரையும், பாட்டன்மாரையும், மாதுலரையும், மாமனார்மாரையும், பேரப்பிள்ளைகளையும், மைத்துனரையும், மற்றுமுள்ள என் சுற்றத்தாரையும் இந்த யுத்த பூமியிற் காண்

கின்றேன்! இவர்கள் முன் என் காண்டீபத்தை வளைத்து எப்படிப் பாணங்கள் தொடுப்பேன்! எப்படி என் அம்புகள் விடுவேன்! இவர்களைக் கொல்வதினால் எனக்கென்னபலன்; என்ன நயம்; என்னலாபம். எனக்கு மூவ்வுலக அரசாக்ஷி வருவதாயினும் இவர்களைக் கொல்லத்துணியேன்! இந்த களத்திற் பலர் பாதகராயினும், இவர்களைக் கொல்வதினால் நமக்குப்பாவமே சித்திக்கும்; என்று இப்படிப் பலவாறாக துக்கித்து, பரிதபித்து, அலறி முறையிட்ட அருச்சுனனைத்தேற்றி,அவனுக்கு உலகத்தில் எங்குமே அடாத அதிசயநீதிபுகட்டி, பாண்டவருக்கும் கௌரவருக்கும் பேதம் கற்பித்து அவன் மனதைப் பேதித்து, கொலை செய்வது க்ஷத்திரிய தர்மமென்றும், க்ஷத்திரியர் கடமையென்றும் அணுவேனு மிரக்கமின்றி அவனுக்குத் துர்ப்போதனை செய்து, கௌரவசேனையில் எண்ணத்தொலையாத ஜீவர்களைக் கொலையிட ஆக்ஞாபித்த கிருஷ்ணன் செயல் எவ்வாற்றானும் தருமமாகாது! ஆகாது! இது எமது தீர்க்க அபிப்பிராயம்.

"அறிவினாலாவ தொன்றுண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக்கடை."—திருக்குறள்.

---

பொதுகர்மம்:—அற்பமாகிலும் ஆத்மா கடைத்தேறும் வழியை அறிவித்தவனையும் குருவாகவே எண்ணவேண்டும். சரீரசுகத்திற்கு ஏதுவான அன்னவஸ்திராதிகளைக் கொடுப்பவனிடத்தில் கவுரவமும் நன்றியறிதலும் பாராட்டி உபசரித்துவருவது நற்குணமென்று நிச்சயித்திருக்க, அழியாத ஆத்துமசுகத்திற்கு ஞானவித்தையைஅளித்தவரிடத்து நாம்செய்யத்தக்க கடமை இதுவென்றும் இவ்வளவிற்றுஎன்றும் சொல்லவேண்டுமா? வைதிகச்சடங்கு செய்விக்கும் ஆசாரியரைவிட ஞானசாரியனே சிறந்தவன். அவ்வாசிரியன் ஞானசாஸ்திரத்தை தக்க பாத்திரத்தில் உபயோகிக்கவேண்டுமேயல்லதுஅபாத்திரத்தில் உபயோகிக்கக்கூடாது. அயோக்கியருக்குக்கொடுக்கும் வித்தை அவர்க்கு உபயோகப்படாமற்போவதுமன்றி கொடுத்தவர்க்கும் கேட்டிற்கு ஏதுவாகும். எவரும் மலமூத்திராதிகளை தேவாலயம்,சற்சங்கம்,நதி,தடாகம்,பசு மேயுமிடங்கள், மரத்தடி,இப்படிப்பட்ட ஸ்தானங்களில் விடலாகாது. எச்சில்களையும் பெருவியாதியஸ்தரையும் தொடக்கூடாது. நகம் கடித்தல், கைவிரல்கடித்தல் முதலான செய்கைகள் செய்யலாகாது. பிரமதியானஞ் செய்பவன் உணவில் தள்ள

வேண்டியவைகளைத் தள்ளி, கொள்ளவேண்டியவைகளைக் கொள்ளவேண்டும். அசுத்த பதார்த்தங்கள் புசிக்கலாகாது. அநாசாரமுள்ளவர்கள், ஜாதிப்பிரஷ்டர், பதிதர், தூர்க்கண்ணர், ரோகிகள், துர் எண்ணமுடையோர்,—இவர்கட்கு முன்னும், நாய் முதலான ஜந்துக்கள் தொட்டவைகளும் பார்த்தவைகளும் உண்ணலாகாது. ஒட்டகம்போன்ற ஒற்றைக்குளம்புள்ள பிராணிகளின் பாலும், ஈன்ற பத்து தினங்களுக்குட்பட்ட பசுமுதலியவைகளின் பாலும், கன்றூட்டாத பசுவின்பாலும், அசுத்த பாத்திரங்களிற்கொள்ளப்பட்டதும் பருகத்தக்கவையல்ல. யுக்தமான பண்டங்களையே புசிக்கவேண்டும். அசுத்தமானவைகளையும், நொந்துபோனவைகளையும் புசித்தால் தேகசுகம் கெடுவதுமன்றிப் புத்தியும் கெட்டுப்போம். தீட்டு—பிரமசாரிக்கும் சந்நியாசிக்கும் தீட்டில்லை; கன்னிக்குமில்லை. தீட்டுக்கு 'ஆசௌசம்' என்பது சம்ஸ்கிருதப் பெயர்; பிறப்புத் தீட்டுக்கு 'ஜாதாசௌசம்' அல்லது 'சூதகம்' என்றும்; இறப்புத் தீட்டுக்கு 'மிருதாசௌசம்' அல்லது சாவம் என்றும் பெயர். இவ் ஆசௌசங்கள் ஞாதிகளுக்கேயல்ல; ரக்த சம்பந்தமுள்ள பிறர்க்கும் உண்டு. சாதாரணமான பந்துக்கள் எவராகிலும் மரணமடைந்தால் ஸ்நாநஞ்செய்து தீரவேண்டும். சந்நியாசிகள் மரித்தால் அவருடைய தேக சம்பந்திகளுக்குத் தீட்டில்லை. பதிதர், ஜாதிப்பிரஷ்டர்,—இவர்கள் மரணத்தில் அவர்கள் பந்துக்களுக்குத் தீட்டில்லை. துர்மரணமாயிறந்தவர்களுக்காகவுந் தீட்டிருக்கவேண்டுவதில்லை.

---

## மதக்கொள்கை.

மேற்கூறியபடி மனிதன் சத்தியம், தயை, பொறைமுதலிய சற்குணங்களுடையவனாய் மோக்ஷமடைய தத்துவஞானத்தைத் தேடிச் சம்பாதிக்கவேண்டும். எம்மதத்திலும் பொதுவாய் அறியவேண்டிய பொருள்கள் ஐந்தாம். அவையாவன: கடவுள் சொரூபம், ஜீவாத்மசொரூபம், கடவுளையடையும் வழி, அடைவதின் பயன், அடைவதற்கு இடையூறு என்பவையாம். இவை அவசியம், கட்டாயம் விசாரிக்கத்தக்க விஷயங்களாம். இவ் விஷயங்களை நிர்ணயிப்பதே மதமாம். மதஸ்தாபகர்கள் இவ் வைந்து விஷயங்களைப்பற்றிச் செய்த நிர்ணயங்களை இங்கு கிஞ்சித்து விவரிப்போம். பகவான் அல்லது கடவுள், நித்தியராய்,

சுத்தராய், அளவிலா ஞானனந்த சக்திகளுடையராய், எங்கும் (உள்ளும் புறமும்) வியாபித்தவராய், தன் வசத்தராய், இயற்கையுணர்வினராய், சர்வக்ஞராய், பேரருளுடையராய், முடிவிலாற்றலுடையராய் இருக்கிறார். இவர்க்குப் பரமாத்மா என்று பெயர்; மற்றுமுள்ள ஆத்துமாக்களெல்லாம் ஜீவாத்துமா எனப்படுவர். இவை அணுரூபங்களாய், நித்தியங்களாய், ஞானஸ்வரூபிகளாயிருக்கும். இவ்வாத்மாக்கள் தத்துவஞானம் பெற்று தியானத்தாலே பரமாத்மாவை அடையும். இதுதான் முக்தி, மோக்ஷம். இதற்கு உபாசனை அல்லது தியானம்தான் வழி. இவ்வுபாசனை வேதாந்த சாஸ்திரங்களில் பலவகையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒவ்வோர் உபாசனைக்கும் பரமாத்மாவின் ஸ்வரூபம், குணம் வெவ்வேறாக சொல்லப்பட்டிருக்கின்றன. இப்பேதங்கள் மதவிகற்பங்களுக்கும் மதப்போர்களுக்கும் காரணமாயினும் அடையப்படும் சொரூபத்தில் பேதமில்லை. பெறுதற்கரிய இம்மோக்ஷத்திற்குப் பயன், மறுபடி 'துயரின் மலியும்' மனிதப் பிறப்பு பிறந்து சம்சாரதுக்கத்தில் திரும்பாமல் கடவுளைப்போலவே நித்தியானந்தம் பெற்றிருத்தலாம். இப்பதவி பெறுதற்கு கர்ம சம்பந்தத்தால் வந்த அஞ்ஞானமே தடையாம்.

இக்கர்ம சம்பந்தம் அநாதியான மாயையினால் நேர்ந்ததென்றும்; இம்மாயா சம்பந்தமும் அநாதியே யென்றும் வேதாந்தங்கள் கூறுகின்றன. இம்மாயை சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணவடிவாய், பலபடி மாறுந்தன்மைத்தாய், இரும்புக்குத் துருப்போலே ஆத்மாவோடு சேர்ந்து அதன் இயற்கை அறிவை மறைக்கின்றது. பஞ்சபூத வடிவமாகிய இப்பிரபஞ்சம் அம்மாயையின் விகாரமேயாம். இதற்குப் பிரகிருதி என்றும் அவித்தை என்றும் பெயராம். "இம்மாயையிற்பட்ட ஆத்துமாக்கள் ஒரு சக்கரத்திற்பிணித்த பொருள்போலத் தன்வயமின்றி, அஞ்ஞானத்தினற் கருமமும், கருமத்தினால் அஞ்ஞானமும், இப்படியாக மாறி மாறி நேர, தன் சொரூபத்தை யறியமாட்டாமல் பிராகிருதங்களையே தானாகப் பிரமித்து, வாசனைவசத்தினால் ஜனனமரணங்களில் உழல்கின்றன." * வாசனை என்பது பழக்கம். மேற்சொன்ன வகைகள் ஆத்மாதோறும்

* இந்துமத சித்தாந்தம்.

இயற்கையாகவே வெவ்வேறு யிருக்கின்றன. இக்கருமங்கள் புண்ணிய பாப ஹேதுக்களாயிருத்தலால், புண்ணிய பாபங்க ளெனச் சொல்லப்படும். புண்ணிய கர்மங்கள் மிகுதியாக துர் வாசனைபோய் நல் வாசனையுண்டாகும். நல் வாசனையுண்டாக வே உத்தம காரியங்களில் ருசிபிறந்து சத்ஸஹவாசமும் சத்குரு சேவையும் நேரிடும். சத்குரு கடாக்ஷத்தால் தத்துவஞான முத யமாய் முக்தி கிடைக்குமென்பது முறையாம். ஆத்மா விளக் காகவும், அதன் அறிவு விளக்கின் ஒளியாகவும், கர்மபந்தம் அதைச்சுற்றி மூடிக்கொண்டிருக்கும் ஓர் மறைவாகவும் நாம் குறித்துக் கொள்ளவேண்டும்.

நல்லது அப்படியே கொள்வோம். கொள்ளின், எல்லாம் கர்மவசத்தாலேயே ஆகிறதானல், கடவுளுக் கென்னமஹிமை? அவரால் ஆவதென்ன? அவர் கிருபையாற்பயனென்ன? என்று சந்தேகம் திரவாவது ஞாயவாயிலாய்க் கேட்கக்கூடாது, ஆக்ஷே பிக்கவொண்ணுது என்பது கட்டளை. கடவுள் ஒருவராலும் ஆளப்படாமல் ஸ்வதந்திரராயிருப்பதனுல், அவர் சிருஷ்டி திதி சங்காரம் என்னும் முத்தொழில்களைச் செய்யவேண்டிய அவசிய மில்லையென்றும்; மேலும் ஒருவன் இன்னது செய்யின் இன்ன நன்மை அடைவன் என்னும் ஏற்பாடு செய்யவேண்டிய கடமை யும் இல்லையென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனுலும் பிர கிருதியிலே ஒடுங்கிக்கிடக்கும் ஆன்மகோடிகள் பலவகையான சுகிர்தங்களடைந்து வாழட்டும் என்னும் பேரருளாலேயே, உட ம்பையும், பொறிகளையும், தத்துவத்தைஉணர்ந்து ஒழுகவேண் டிய வழிகளைப் போதிக்கத்தக்க சாஸ்திரங்களையும், வேண்டிய மற்றுப் பொருள்களையும் அருளினுரென நாமறியவேண்டும். என்றுலும் ஆத்மாக்கள் கர்ம வசத்தராதலால் எப்படி சுதந் தரித்து நடக்க மாட்டுவார்கள் என்னும் ஆக்ஷேபமும் ஆகாது. ஏனெனில் ஆத்மாக்கள் அறிவுள்ளோராகையால், சுவேச்சை யும், (free-will) சுவாதந்தரியமும், (liberty) உண்டு எனக் கொள்ளவேண்டும்.

> "பொறியின்மை யார்க்கும் பழியன்றறிவறிந்
> தாள்வினை யின்மை பழி."

> "தெய்வத்தா னுகாதெனினு முயற்சிதன்
> மெய்வருத்தக் கூலிதரும்."

" ஊழையுமுப்பக்கங்காண்ப ருலேவின்றித்
தாழாதுஞற்றுபவர்."—திருக்குறள்.

கடவுள் அவரவர் கர்மத்துக் கேற்றபடி நடத்துவதால் பக்ஷபாத மற்றவரென்பதும், முன்னுரைத்தபடி பல நலங்களும் அளிப்பதனுல் கிருபையுள்ளவரென்பதும், ஆஸ்திகமதக்கொள்கை.

"கடவுளுடைய சொரூப சுபாவங்களை அறியாதபோது அவரைப்பணிய நிமித்தமில்லை. ஆகையால் கடவுளை அறிவது அவசியமாயிற்று. ஜீவாத்மா என்பது சித்துப்பொருளோ, ஜடப்பொருளோ, நித்தியமோ, அநித்தியமோ என்று அறியாதபோது கடவுளைப்பணிய முயல்வதுங் கூடாதாகையால், ஜீவ சொரூபம் அறிவதும் ஆவசியகமே!" * இவையும் இவைபோல்வனவும் மதசித்தாந்தங்களின் பொதுக்கொள்கைகளாம்.

---

## பக்தியோகம்.

" பத்திவலையிற் படுவோன் காண்க."—திருவாசகம்.

உலகத்தில் பிரியம் வைத்திருப்பது ஆசை. பிரபஞ்சத்திற்குக் காரணமாகிய பிர்மம் அல்லது பகவானிடத்தில் பிரியங்கொள்வது பக்தி. பக்தியோகம் என்பது உலக சுகதுக்கங்களில் விருப்பு வெறுப்பற்று பகவானையடையும்பொருட்டு நிஜமான பிரீதியுடன் ஸதாகாலமும் அவரது திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருக்கை. 'அவனன்றி யோரணுவு மசையாது' எனவும்; 'சிவன் செயலாலே யாதும் வருமெனத்தேறேன்' எனவும் ஆன்றோர்கூறியபடி உலகத்தில் நம்மாலாகும்காரிய மொன்றுமில்லை, எல்லாம் கடவுளருளால் நடந்தேறிவருகிறது எனத் தீர்மானித்து, நமது தன தான்னிய புத்திர மித்திர களத்திராதி போகங்கள் யாவும் பகவானுல் அளிக்கப்பட்டவைகளா யிருக்க அவைகளை நாமே சம்பாதித்துக்கொண்டோமென்றெண்ணி, அவைகளை அபிமானிக்காமல் அவரிடத்தே உண்மையான பக்தி செலுத்துவதுதான் பக்தியோகம். பக்திமார்க்கம் கர்ம்மார்க்கத்திலும் பெரிது. யோகத்தினுல் ஞானமடைந்து பிரமத்தில் லயமாவதுபோல பக்தியினுலும் கடவுளையடையலாம். கர்மயோகம் ஓர் பலனைக்கோரி செய்யப்படுவது. பக்தியோ அப்படி

---

* இந்துமத சித்தாந்தம்.

யல்ல; பகவான் திருவடியன்றி மற்றேதொன்றையும் கருதுவ தல்ல. பக்தியின் பலனுக்கும் ஞானத்தின் பலனுக்கும் விசேஷ வித்யாஸமில்லை. இவ்விரண்டுக்கும் கடைசியில் முடிவு ஒன்றே.

"அறவாழியந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்தலரிது."

"பிறவிப் பெருங்கடனீந் துவர்நீந்தா
ரிறைவனடி சேராதார்."—திருக்குறள்.

முக்தியடைய பக்தி மார்க்கம் எளிதானதெனச் சொல்ல லாம். ஞானமார்க்கம் கஷ்டமே. பக்தி எளிதாயிருந்தாலும் அதைச் சிலர் அப்யசிக்க இயலாது. ஞானமார்க்கம் கடினமா யிருந்தாலும் சிலர் அதை விடவும் முடியாது. இவ்விருமார்க் கங்களும் அவரவர்கள் மன பரிபாகத்திற்குத் தக்கபடி யமைந் திருப்பதாய்க் கொள்ளவேண்டும். ஒருவன் ஒரு பக்திநூலும் படியாமலே, ஓர் ஞானநூலும் பாராமலே ஒரே தீர்மானம் பண்ணி, அதாவது கடவுளொருவருண்டென்று நம்பி, பக்தி புரிய ஆரம்பித்துஅதை யிடைவிடாதுசெய்வதால், உலகப்பற்று தானே யொழிந்து, தேகாபிமானம்போய், தன்னைமறந்து எல் லாம் பகவத்சொரூபமே, பகவானைத் தவிர வேறொரு வஸ்து வில்லையென்னும் ஞானமடைந்து மோக்ஷத்திற்கு அருகனாகி ருன். ஆனால் எல்லாருமே இப்படி ஆரம்பித்தல் முடியாது. எல்லார்க்குமே எளிதான இப்பக்திமார்க்கத்தால் முக்தி சித்திக் காது. உலகம் எப்படிவந்தது? நாம் யார்? நமக்குப் பிறப்பு வந்ததெப்படி? இறப்பு என்பது யாது? உலகத்தின் சுபாவ மென்ன? கடவுள் என்பவர் யார்? அவர் தன்மை என்ன? என்ற இத்தொடக்கத்தான சங்கைகள் உண்டாகி, அவைகளை சாஸ்திர விசாரத்தாலும் பேரறிவாளர் கேண்மையாலும் அறிந் தபின்னரே சிலர் மனம் சமாதானமடையும். இத்தகையோர் அநுசரிக்கவேண்டுவது ஞானமார்க்கமே. ஒருவன் பக்தியே செய்யவும், மற்றொருவன் ஞானாராய்ச்சியே செய்யவும், இன் னொருவன் கர்மத்தையே அநுஷ்டிக்கவும் காரணமாயிருப்பது அவனவன் மனப்பரிபாகமே. பக்திமார்க்கத்தை அநுசரிப்பவ ரில், தெளிவான புத்தியும் பக்குவமாகாத மனமும் இல்லாத பலர், தாங்கள் அன்போடு ஸ்மரித்து துதிக்கும் நாமமுடைய கடவுளே கடவுள், மற்ற நாமங்களால் பிறர் வணங்கும் தெய் வங்கள் தெய்வங்களல்லவென்று அவிவேகத்தா லெண்ணுவது

டன் விடாமல், அம்மதஸ்தரைப் பலவாருக விகழ்ந்து பேசியும், அவர்கள் தெய்வத்தைத் தூஷித்தும் நிந்தித்தும் வருவது யாவர்க்கும் தெரிந்தவிஷயம். சிவனை நன்குணராத சைவர்கள் விஷ்ணுவையும், விஷ்ணுபக்தர்களையும்; விஷ்ணுவை உள்ளபடியறியாத வைஷ்ணவர்கள் சிவனையும் சிவ பக்தர்களையும், தூஷிக்கிருர்கள். இதுபோல, இவ்விருமதஸ்தரும் பௌத்தமத மின்னதென்று தெரியாமல் புத்தரையும்; கிறிஸ்துமதம் இது வென்றுபடியாமலே கிறிஸ்தவரையும், மற்றுப்புற மதஸ்தரையும் தூஷித்தே வருகிருர்கள். இதுமட்டோ! விசாரணையே மேற்கொண்டொழுகும் அத்வைதிகளும் நிந்திக்கப்படுகிருர்களே! இவ்வாருன தூஷணைகள், ஹிந்துக்களில் மாத்திரமல்ல; மேற்கண்டத்து கிறிஸ்துவமதஸ்தரிலும், மகம்மதியரிலும் கூட, தம் தம் மதங்களின் உட்பிரிவுகளினல் மததூஷணைகளும், கக்ஷி தூஷணைகளும் உண்டு. யோசிக்குமளவில் இவ்வகையான தூஷணைகட்கெல்லாம் காரணம்,—அறியாமையும், மதத்துரபிமானமும், குருட்டுப் பக்தியும் மூட வைராக்கியமுமே யாம். தத்துவநெறியுணர்ந்தோர் மதபேதங்களை மறந்திருப்பார்; தூஷணைக் கிடந்தரார்.

> "அருபரத்தொருவ னவனியில்வந்து
> குருபரனுகி யருளிய பெருமையைச்
> சிறுமையென் றிகழாதே"

எனத் திருவாசகம் கூறுவதால் நாம் ஐதிகப்படி, ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவற்கீதையிற் புகலும் தத்துவோபதேசத்தை, நம் சிரமேற்கொள்வது அவசியமாயிற்று.

> "எப்பொருள்யார் யார்வாய்க்கேட்பினு மப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பதறிவு."—திருக்குறள்.

"ஸர்வம் பிரஹ்மமயம் ஜகத்"—உலகமெல்லாம் பிரஹ்மமயமாயிருக்கிறது என்பது உத்கிருஷ்டமானவாக்கியம். இதன் கருத்தை உணர்ந்தவர் சர்வப் பிராணிகளையும் பிரம்மமாகவே எண்ணி, அவைகளை யன்புடன் பார்த்து, ஸதா பிரமத்தியானஞ் செய்துகொண்டிருப்பார்கள். எங்கும் வியாபித்து ஏகமாயிருக்கும் பரப்பிரம்மத்தை, உலகில் பல வேறுநாமங்களிட்டு ஸ்தோத்திரம் பண்ணுகிருர்கள்.

"நானேசங்கரன், நானே பிரம்மா, நானேவிஷ்ணு, நானே சூரியன், நானே சந்திரன், மனமும் புத்தியும் நானே, நானே வாயு, நானே வருணன், நானே நாரதர், நானேகபிலர், நானே

பிரஹஸ்பதி. நானே பிருகுமுனி, நானே மேருமலே, நானே சமுத்திரம், அசையாப்பொருள்களில் ஹிமயமலே நானே, நானே ஐராவதம், இடியேறுநானே, காமதேனு நானே, நானே வாசுகி, நானே அநந்தன், யமனும் நானே, நானே ஸிம்மம், பிரணவம் நானே, ஸ்மிருதி நானே, ஸாமவேதம் நானே; எல்லாவஸ்துக்களுக்கும் ஆதியும் மத்தியமும் அந்தமும் நானே'' என்று இவ்வாருக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கீதையிற் கூறியிருக்கிருர். பிர்ம்மா, விஷ்ணு. சிவன் என்னும் திரிமூர்த்திகள் முதலாக பிருதிவிவரையிலுள்ள சித்துப்பொருள்களிலும் ஜடப்பொருள்களிலும் ஒவ்வொன்றையுமெடுத்து, அது நான், நானே நானே என்று கிருஷ்ணபகவான் கூறியிருப்பதால் அண்டபிண்டங்களிலுள்ள சகலமும் அவரே யென்று ஏற்படுகின்றது. அவர் திரிமூர்த்திகளிலும் மேம்பட்டவரே யாவர். இவரே பிரம்மம் என்றும் கொள்ளவேண்டியிருக்கிறது. * எங்கும் நிறைந்திருப்பது பரப்பிரம்மமாயிருக்க, அப்பிரம்மத்தை எப்பேரிட்டு எம்மூர்த்தியாகவாவது எத்தேவதையாயாவது துதித்தால் அத்தோத்திரம் பரப்பிரம்மத்தைச் சாருமன்ருே? அவ்வண்ணமே எம்மூர்த்தியை, அல்லது எத்தெய்வத்தை நிந்தித்தாலும், அந்நிந்தை பரப்பிரமத்தையே நிந்தித்ததாகுமல்லவா? உபநிஷத்துக்களிலும், கீதைகளிலும் கூறியிருக்கும் வாக்கியங்களே ஹிந்துக்களாகிய நாம் நம்பியிருப்பது உண்மையாயின், சகல ஜீவர்களேயும் சமமாகப் பாராட்டாமல் ஒருவரிடத்தில் விருப்பும் மற்ருெருவரிடத்து வெறுப்பும் காட்டுவது தகுதியாகுமா? கீதையிற்சொன்னபடி எல்லாவற்றிலும் பகவானிருக்கிருன் என்பது உண்மையெனத் தெளிந்த பின், உலகத்தில் எதைத்தான் விரும்புகிறது? எதைத் தான் வெறுக்கிறது? எல்லாம் பகவத் சொரூபமென்றே நாம் எண்ணவேண்டும்.

---

* ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தனக்கே உரியது என்று கூறியிருக்கும் பிரஹ்ம பட்டத்துக்குப் போட்டிபண்ண, இயேசு கிறிஸ்துநாதர்—'நான் அல்பாவும் ஓமெகாவும், ஆதியும் அந்தமும், முந்தினவரும் பிந்தினவருமாயிருக்கிறேன்' (வெளி, அதி. 22-13) என அறிக்கையிடுகிருர். பிரஹ்மபதம் இப்படிப் போட்டியிலிருக்க, நாம் யாரைத்தான் உண்மையிலே பிரஹ்மம் எனக்கொள்ளலாம்!

Alpha - கிரேக்பாஷையின் முதலெழுத்து; Omega - கடையெழுத்து.

ஆரிய நண்பர்களே! நமது தேசத்திலே பக்தியிற் சிறந்து கீர்த்திபெற்றோர் அநேகரிருந்தார்கள். உண்மையான பக்திமான்கள் எத்தேசத்திலும், எந்நாட்டிலும் உண்டு. அவர்கள் எவ்வருணத்தாராயினும், எப்பாஷையினராயினும் நாம் மரியாதை செய்யத்தக்கவரே யாம். அவர்களை எல்லாம் எண்ணிக்கைசெய்ய நம் தரமல்ல. பௌத்தமதஸ்தாபகராகிய சாக்கிய புத்தர் கருணையே உருக்கொண்டு அவதரித்தவராயிருந்தார். ஐரோப்பாகண்டத்தில் St. Francis of Assisi என்னும் பெயர் கொண்ட இதாலிய சந்நியாசி (1182-1226) 'உன்னைப்போல் பிறனை நேசிப்பாயாக' என்று இயேசுநாதர்கூறிய நீதிநெறி அணுவளவும் தவறாது, சகல பிராணிகளிடத்தும் சமமாகப் பிரியம் வைத்து, அன்பே தன் கொள்கையாய் காலங்கழித்ததாக சரித்திரம் சொல்லுகின்றது. முன்னே ஒரு காலத்தில் நமது தேசத்திலே கபீர்தாஸ் என்னும் மஹா பக்தரொருவரிருந்ததாயும், அவர் தாம் உண்பதற்கு ரொட்டியும் வெண்ணெயும் சர்க்கரையும் வைத்திருந்ததாயும்; அவர் உண்ண உட்காருந்தருணத்தில் ஒருநாய் அங்கு ஓடிவந்து ரொட்டித்துண்டுகளில் ஒன்றை வாயில் கவ்விக்கொண்டு ஓடிப்போனதாயும்; அதுகண்ட கபீர்தாஸ் தன் கையில் வெண்ணெயும் சர்க்கரையும் எடுத்துக்கொண்டு அதன்பின்னே சடுதியிலோடி "பகவானே! ரொட்டி மட்டும் தின்றால் ருசியாயிராது; வெண்ணெயும் சர்க்கரையும் சேர்த்துச் சாப்பிட்டாலே ருசியுண்டு: ஆதலின் ஸ்வாமி! இதோ வெண்ணெயும் சர்க்கரையும் கொண்டுவந்தேன், ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று பிரார்த்தித்து ரொட்டியும் வெண்ணெயும் சர்க்கரையும் சேர்த்து அந்நாய்க்குத் தந்ததாயும், தக்ஷணமே அம் மஹாபக்தருக்கு அச்சுணங்கனே ஈஸ்வரனாகத் தோன்றியதாயும் பக்தர் சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படிப் பக்தியிற் பழுத்த பழமாயும், மன்னுயிரைத் தன்னுயிர்போற் பார்க்கும் புண்ணியனாயுமிருக்கை, மிக்க அரிதல்லவா? இத்தகைய பக்த சிகாமணிகளுக்கு யாவர்தான் என்ன கைம்மாறு செய்யக்கூடும்?

இத்தென்னிந்தியாவில் திரிசிரபுரத்தில் 247-வருஷங்களுக்குமுன் ஜீவித்திருந்து ஞான மணிவிளக்காய் விளங்கிய ஸ்ரீ தாயுமான ஸ்வாமிகள், பரம தயாளுவாய், கிருபாமூர்த்தியாய், பக்தி

யும் ஞானமும் நிரம்பிய புண்ணியராகவே யிருந்தனரென நாம் கொள்ள, அவரது அருள்சொரியும் திருப்பாடல்களில் பக்தி தளும்பும் பராபரக் கண்ணியே போதுமான சாக்ஷியாம் :

"எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே."!

"தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே."!

இதுபோன்ற பக்திதான், பரபக்தியென்று சொல்லப்படுகிறது. அல்லாதது அபரபக்தி. அபரபக்திதான் எங்கும் விசேஷம்; வேஷமும் கலந்தது. பொருள்வேண்டும், பிள்ளைவேண்டும், கீர்த்திவேண்டும்என்பதாகக் கடவுளைப் பிரார்த்திப்பதும்; கேட்டவை கிடைத்தால் கோயில்களுக்குத் தாம் சொல்லிக்கொண்ட பிரார்த்தனை செலுத்துவதும், உற்சவாதிகள் நடத்துவதும், பிராமணருக்கு வயிறுபுடைக்கப் பிரஸாதங்கள் தாராளமாய்ப் பங்கிடச்செய்வதும்; தாம் கோரியது கிடைக்காவிடின், கடவுளுக்குக் கண்ணில்லையா; அவனுக்கு ஒருகண்ணில் வெண்ணெயும், மற்றொருகண்ணில் சுண்ணாம்புமா; துஷ்டர்களையும் பாபிகளையும், எல்லாப்போகமும் தந்து ஆதரிக்கிறானே; நாமென்ன புண்ணியஞ்செய்தாலும் நம்மை இப்படிப் பரீக்ஷிக்கிறானே; இதென்னகொடுமை! இவன் தெய்வமாவானா? என்று இவ்வாறாகத் தெய்வத்தை நோவதும் நிந்திப்பதும் சகஜமாயிருக்கின்றது. இதுதான் அபரபக்தியெனப்படும். இதை மனதிற்கொண்டே ஒரு பக்தர்,—"வாயாரவுண்டபேர் வாழ்த்துவதும், நொந்தபேர் வைவதுமெம் முலகவாய்ப்பாடு" என்றார். இப்பக்தி லஞ்சமளிப்பது போல்வதாதலால், மோக்ஷத்தைத் தராது. இது திண்ணம்.

வாஸ்தவமான பக்தனுக்கு எல்லாம் பகவத்ஸ்வரூபமாகவே தோன்றும். அவன் யாவரிடத்தும் அன்பு பாராட்டியிருப்பான். அவனை எல்லாருமே இச்சிப்பார்கள். அவன் பேதமின்றியே எவ்வுயிரையும் பார்ப்பன். உலகத்தில் பகவானையன்றி ஒன்றும் நடவாதென்றே நினைப்பான். பொருளுடையாரை உயர்ந்தவராகவும், பொருளிலாரைத் தாழ்ந்தவராகவும் எண்ணான். ஆடையாபரணம் வாகனாதிகளுடையாரைத் துதிப்பதும், வறி

யாரை இகழ்வதும் செய்யான். பக்திநெறி யிவ்வாறிருக்க, இத ற்கு நேர்மாருக,

> " இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
> எல்லாரும் செய்வர் சிறப்பு"

எனத் திருவள்ளுவர்கூறியபடி இவ்வுலகத்தில் பெரும்பாலும் நடந்துவருவதைக் கருத்திற்கொண்டே நமது தாயுமானர்—

> " அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய
> வாப்தர்மொழி யொன்றுகண்டால்
> அறிவாவதேது சில வறியாமை யேதிவை
> அறிந்தார்க ளறியார்களார்
> மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
> வாயாப்பிதற்று மவரார்
> மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
> வன்மையொ டிரக்கமெங்கே
> புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
> பூதபேதங்க ளெவிடம்
> பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
> பொறைபொருமையு மெவ்விடம்
> எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
> யாதுமுனே யன்றியுண்டோ
> இகபர மிரண்டினிலு முயரினுக் குயிராகி
> எங்குநிறைகின்ற பொருளே"—எனப்பாடினுர்.

உத்தமபக்தி முதிர்ந்து மெய்ஞ்ஞானமடைந்த முதியோர்வாக்கு இப்படித்தானிருக்கும். என்ன பக்திப்பெருக்கு! என்ன பக வத்தியானம்! என்ன சமரஸஞானம்!

மேற்சொன்ன மெய்ப்பக்தி சற்றேனுமின்றி, சிவபக்தர், விஷ்ணுபக்தர் என்று பேர்மாத்திரம் பூண்டு, முன்னேர் கட்டி வைத்த கோயில்கள் போதா, புதுக்கோயில்கள் கட்டவேண்டு மென்றும்; உள்ள கோயில்களைப் புதுப்பிக்க வேண்டுமென் றும்; தேவாலயங்கட்குக் கோபுரம், கடவுளருக்குக் கிரீடம், வாஹனுதி திருப்பணி செய்யவேண்டுமென்றும் வெளிவந்து, உள்ளூரிலன்றி வெளியூர்களுக்கும்போய், பேதைகளையும் மூட பக்தர்களையும் மயக்கி அவர்கள் கஷ்டார்ஜ்ஜிதமான பொருள் களைத் தண்டி, சேகரித்துக்கொண்டு யாதொரு கைங்கரியமும் செய்யாது—இதுவும் ஓர் ஜீவனேபாயமாகக்கொண்டு—குவிந்த பொருளைக் கவர்ந்து வேஷங்காட்டித் திரியும் பல போலிப்

பக்தர்களை என்னென்றுசொல்லலாம்? இவர் உருவம் எத்தன் மைத்தெனின்:

"வலியினிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின் தோல்போர்த்து மேய்ந்தற்று."—திருக்குறள்.

---

## சமயக்கொடுமை.

இங்கிலன்ட் தேசத்தில் பெருந்தார்க்கிகர் என்றும், பெருந் தத்துவஞானியென்றும் பெயர்பெற்று விளங்கிய J. S. Mill என்பவர் (1806-1873) மதம்என்பது மனிதனுக்கு அவசியமா, அதனாலாகும் பலனென்ன? என்னும் முக்கியமான கேள்விக்கு ஒருவித சமாதானம்சொன்னார். அதாவது, தனது நேசரொரு வர் குடும்ப துக்கத்தி லமிழ்ந்திருக்கக்கண்டு அவரைநோக்கி, "ஒருவன் உண்மையான துயரத்திலிருக்கையில் தன்னா லன்பு பாராட்டப்பட்டவர் மரணமடைந்ததினால் அவர் தன்னைவிட்டு அறவே பிரிந்துவிட்டாரே, என்று அப்பிரிப்பை நினைக்க பயங் கரமாகவே யிருக்கும்: அவ்வுணர்ச்சியின் பாரத்தை யிறக் குவதாகிய ஓர் நிலைமையான நன்மையே மதத்தின் பயனா கும்" * என்றார். அப்படியெனில், இவ்வுலகத்தில் நம்மை விட்டுப் பிரிந்தவரைஇன்னொருலகில் காணலாம் என்னும் ஆசை யையுண்டாக்குவது மதத்தின் மாறுக்குணமாம் என்பது அவர தபிப்பிராயம். இது சரியே,உண்மையே. ஆயின் மனிதரெல்லோ ருக்குமே மதம் அவசியம் தானாவென்றால், மோக்ஷம் நரகம் என்பவைகளில் ஞாயமான நம்பிக்கையில்லாமலே தம் ஜீவதசை யை நல்லபடியே கழிக்கச் சக்தியும், அறிவும் இல்லார்க்கு அவசி யமேஎன்று சொல்லவேண்டும். இக்கண்டத்திலும், மற்றுக்கண் டங்களிலும் சாஸ்திரஞானம் (Scientific Knowledge) தத்துவ ஞானம் (Philosophic Knowledge),—இவ்விரண்டும் நிரம்ப உடையவரிற் பலர், மேலுலக நம்பிக்கையில்லாமலே நன்னெறி யேகடைப்பிடித்து பரோபகாரிகளாய் ஜீவித்திருந்தார்கள். அத் தகையோர் இப்போதும்அநேகர் உள்ளார்கள் என்பது துணிபு.

இது நிற்க, உலகத்தில் ஸ்மார்த்தம், சைவம், வைணவம், புத்தம், சமணம், கிறிஸ்துவம், மஹம்மதியம் முதலிய பல்சம யங்களை ஸ்தாபித்தோரும், அவ்வச்சமய ஆசாரியர்களும், நற் குணங்கள் யாவும் நிரம்பியவராயும், ஜீவகாருண்யமே விரத

---

* Prof. Bain's Life of J. S. Mill.

மாக மேற்கொண் டொழுகினவராயுமிருத்தல் வேண்டுமல்லவா? அச்சமயாசாரியரும், அச்சமய அபிமானிகளும், அச்சமயங்களிற் பிறந்தவரும், புகுந்தவர் யாவரும் தம்போன்ற ஜீவர்கள் மேற் றயை காட்டியேவந்தனரா வென்பதை விசாரிப்போம்.

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாய்க்கும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

எனத் திருஞானசம்பந்தர் மஹிமையைப் பற்றித் திருத்தொண் டர் புராணம் கூறுகின்றது. சைவசமயாசாரியர் மூவரில் முத ன்மைபெற்ற ஸ்ரீ ஞானசம்பந்தர் கிரபராதிகளான க்ஷமணரைக் கழுவேற்றிக் களிப்படைந்தார்! இதுதானு சிவஞானத்தின் பயன்? பவத்தையறுக்கும் ஞானசித்தி இதுதானோ? இதுவோ மெய்ஞ்ஞானம் பெற்றபேறு?

"மனிதர்களுடைய மனமானது தாம் தொன்றுதொட்டுப் பழகிவரும் வழக்க மிகுதியினாலும், தம்மை இடைவிடாது சூழ்ந்துவரும் நண்பர் உறவினோர் முதலியோருடைய சேர்க்கை விசேஷத்தாலும், ஓர் விஷயத்தில் நாட்டமுறும். அந்நாட்ட மோ யூகை முன்னிட்டுதிக்காமல் பழக்க முன்னிட்டுதித்தமை யால், நாளுக்கு நாள் பழக்கம் விர்த்தியாக நாட்டமும் விர்த்தி யாகும். இவ்வாறு விர்த்தியான நிலையிலுள்ள நாட்டத்திற்கு வைராக்கியமென்று பெயர். இஃது சமயாதிகளொன்றைப் பற் றியதாயின் சமய வைராக்கியமெனப்படும். ஒருவர் தெய்வத் தை மற்றொருவர் இகழ்வதும் சமயவைராக்கியமே. இச் சமய வைராக்கியங்களால் விளைந்த கொடுமைகள் அநந்தமாம். கொல் லா விரதிகளென வெளிவந்த அப்பர் சம்பந்தரும் க்ஷமணரதி களைக் கொலைபுரிந்தது சமயவைராக்கியமன்றோ? தாய் தந்தை யர் சற்றேனும் மனங்கூசாது, தாம் அருமையாய்ப் பெற்ற சீராளதேவரை அறுத்துக் கறிசமைத்தது சமய வைராக்கிய மன்றோ? இரக்கமென்பது எட்டுணையுமில்லாது, சண்டேசுரநாய ஞர் தந்தை தாள்வெட்டிய விந்தையும் சமயவைராக்கியமன்றோ? தற்காலம் வீதிகளிலோடும் கடிநாய்களை அடிக்கக்கண்டால், மனம்பொறுது கண்ணைப் பொத்திக்கொண்டு அவ்வாறு அடித் தவனைத் திட்டித்துரத்தும் மதத்தினர், நரகொலைபுரிந்த நாயன் மாரைப் பூசித்துப் புகழ்வது சமயவைராக்கியமன்றோ? இங்கி

லாந்து தேசத்தில் புரந்தரியெனப் பட்டந்தாங்கி அரசுபுரிந்த கத்தோலிக்கு சிமோட்டியாகிய மேரி (Mary) ஆயிரமாயிரமாக புரோடெஸ்டன்ட் குடிகளைக் கொலைபுரிவித்ததும் சமயவைராக் கியமன்று? [அவ்வண்ணமே மேரிக்குப் பின் அரசாண்ட புரோடெஸ்டன்ட் சிமோட்டியாகிய எலிஜபெத் (Elizabeth) கணக்கில்லாக் கத்தோலிக்குக் குடிகளைக் கொலைசெய்வித்ததும் சமய வைராக்கியமன்று?] மஹம்மதிய அரசில், வாளொருகை யிலும் வேதம் (குரான்) ஒருகையிலும் தாங்கி, வீடு வீடாய் நுழைந்து, நம்பினல் உண்டு, நம்பாவிட்டால் துண்டு ரெண் டென்று நரவேட்டையாடிவந்ததும் சமயவைராக்கியமன்று?''*

மேற்சொன்ன மதஸ்தரின்கொடுமையிப்படியிருக்க, சத்வ குண சொரூபியெனப்படும் விஷ்ணுவையே மேலான தெய்வ மெனத் தொழும் வைஷ்ணவரில், குருட்டுபக்தி மிகுந்து சிவ நிந்தைபுரியும் தென்கலையாருக்குப் பரமகுருவாகிய மணவாள மாமுனி என்பவரின் கொலைக்குணத்தைப் பற்றி இங்கே சற் றுப் பேசுவாம். இவர் 'தமிழ்ப்புலமைசான்ற விஷ்ணுபக்தரே யாவர். உபதேசரத்தினமாலை, நூற்றந்தாதி முதலியன பாடி னருமிவரே.' அபிதானகோசம். இம்முனியும் சிவஞானபோத த்துக்குப் பாஷியஞ்செய்த பெரும் சம்ஸ்கிருத பண்டிதரான சிவாக்கிரயோகியாரு மொருகாலத்தவர்களே. இவர், தஞ்சா வூரிலே சரபோஜி மஹாராஜாவின் சமுகத்திலே பதினேழு நாளாகச் செய்த சைவ வைஷ்ணவ சமயவாதத்திலே சிவாக்கிர யோகியருக்குத் தோற்றார். தோற்றவர் ஞாயப்படி வென்றவரை வியந்து வணங்காமலும், அவர் சரண்புகாமலும், அது கூடாத வழி, தன் மதம்விட்டு அவர்மதம் தழுவாமலும், குரோதமேலி ட்டு கோபங்கொண்டவராய், தான் தோற்றதினத்தின் இரவே யோகியார் வசித்திருந்த வீட்டைக் கொளுத்திவிட்டார்! அர்த்த ராத்திரியில் யோகியார் நித்திரைகலைந்து இக்கொடுமையைக் கண்டு தெய்வ சங்கற்பத்தால் உயிர்மீண்டார்! ‡ இக்கொலை பாதகத்துக்குக் காரணராய இக்கிருபாமூர்த்தியை இவ் வை

* 'சமயவைராக்கியம்'—தத்துவ விசாரிணி (Philosophic Inquirer) பிபர்வரி 2, 1879.

‡ இவ்வரலாற்றை யாழ்ப்பாணத்து ரெவெரென்டு ஆர்னல்டுதுரை (சதாசிவ நாவலர்) இயற்றிய 'பாவலர் சரித்திர தீபகம்' என்னும் அருமையான அகராதியிற் காணலாம்.

ணவர்கள் ஓர் பெரிய ஆசாரியராகத் தொழுதுவருவதுமன்றி, இவர்க்கு வருஷவாரியில் உற்சவமும் நடத்திவருகிறார்கள். இதென்ன மடமை! இதென்ன அறிவீனம்!

நமது தேசத்தில் புராணங்களும், இதிகாசங்களும், நீதிநூற்களும், தத்துவநூற்களும், நாடகங்களும், விநோதக் கதைகளும் இன்னும் பல்வேறான கலைகளும் ஏராளமாகவிருக்க, பக்ஷபாதமின்றிய சரித்திரம் எவ்விஷயத்திலும் கிடைப்பதரிதாயிருப்பது இத்தேசத்துக்குப் பெருங்குறையாகும். இக்குறையினால், இக்காலத்தில் இவ்விஷயம், இன்னபடி நடந்தது என்று துணிந்துசொல்லக் கூடவில்லை.

நமது ஹிந்து மதஸ்தராகிய சைவர்க்கும் வைணவர்க்கும் புராணங்கள் வெளிவந்த நாள்தொடங்கி நெடுங்காலமாய் பரஸ்பரதுவேஷமுண்டாயிருப்பது யாவராலும் மறைக்கமுடியாது. ஆகிலும் இன்ன சைவ அரசன் ஆண்டகாலத்தில் இன்ன நாட்டில் இன்னகொடுமை இவ்வளவுகாலம் சைவர் வைணவருக்குச் செய்துவந்தாரெனவாவது; வைஷ்ணவரும் அப்படியே இக்காலத்து இக்கொடுமை சைவருக்குச் செய்துவந்தாரெனவாவது சரியாகவும், பூரணமாகவும், வரலாறுகூற இயலவில்லை. அங்குமிங்கும் சிதறிக்கிடக்கும் ஏடுகளைக்கொண்டும் சில அச்சுப்புஸ்தகங்களிற் காணும் விர்த்தாந்தங்களைக் கொண்டும் நாம் ஒருவாறு நிர்ணயிக்கவேண்டியதாயிருக்கிறது. வைஷ்ணவருள்ளும் வடகலை தென்கலைப் பிராமணருக்குள் இன்றுவரையில் நடந்துவரும் ஆபாசச்சண்டைகள் யாவர்க்கும் தெரிந்தவிஷயமே. வைஷ்ணவர்கள் தங்கள் நெற்றியிற்றரிக்கும் திருமண்ணுக்குக் கீழ்ரேகை யிழுத்தாலென்ன, இழுக்காவிட்டாலென்ன? இந்த ரேகையினால் ஒரு பக்ஷன்மேல் விருப்பும், மற்றொரு பக்ஷன்மேல் வெறுப்பும் அவர் தொழும் விஷ்ணுவுக்கு உண்டாமா? கடவுளுக்குப் பக்தி பிரதானமேயல்லது நெற்றிக்குறியல்லவே. இக்குறிக்காக ஒருவரையொருவர் பகைப்பது என்னமதியீனம்! என்றாலும், இக்கக்ஷி தூஷணைக்கும் பகைக்கும் காரணராயினோர் மூடவைராக்கியம் பற்றிய வடகலை தென்கலை ஆசாரியரே யாவர். இம்மட்டும் நமது தேசத்தில் முக்கிய மதஸ்தரான சைவர் சமணரைப்படுத்திய பாடும்; வைஷ்ணவர் சைவர்க்குச் செய்த கொடுமையும்; மகம்மதியர் சென்றவிடமெல்லாம்செய்த

சொல்லொணுத் தீமையும் சுருக்கிச்சொன்னேம். இனி ஐரோப்பாகண்டத்தில் மத்தியகாலத்தில் (Middle Ages) கிறிஸ்துவர் சுயக்கியானிகட்குப் புரிந்த அளவிலாப் பாவக்கிரியைகளைப் பற்றிப் பேசுவாம்.

விவிலியநூலின் ஆதியாகமத்திற் சொல்லியிருக்கும் சிருஷ்டிவரலாறு அசாஸ்திரீயமென்றும், கத்தோலிக்கு மதக்கோட்பாடுகள் ஆபாசமானவை யென்றும், ஆக்ஷேபித்த அநேக ஏகேஸ்வர வாதிகளையும், அத்வைதிகளையும் 300 வருஷங்களுக்குமுன் (1450-1600) ஐரோப்பாவிலுள்ள ரோமபுரியில், போப்பு (Pope) மதக்கோட்பாடினின்றும் விலகினவரைக் குற்ற விசாரணைசெய்ய ஸ்தாபித்திருந்த சங்கத்தில் விசாரித்து, அவர்கள் சமயபேதத்துக்காக சிறையிட்டார்கள், அநேகருக்குப் பாரவிலங்கிட்டார்கள். ஆயிரக்கணக்கான மதபேதிகளை நானுவித ஹிம்சைசெய்தார்கள்; அத்தகையோரை ஆயிரமாயிரமாக மொத்தஞ்சேர்த்து கழுமரத்துக்கு ஆளாக்கினர்கள்; ஆயிரமாயிர மதபேதிகளின் பாவனுருபத்தை—சிங்கு சில வருடங்கட்குமுன் ராமலிங்கபிள்ளை அபிமானிகள் கதிரைவேற்பிள்ளை பிரதிமைக்குச் செய்ததுபோல—கொளுத்தினர்கள்; அனந்தம்பேரை உயிருடனே கொளுத்திக் களித்தார்கள். இக்கொடுந்தண்டனைகள் கிறிஸ்து மரித்த (450 A. D) வருஷம் ஈஜிப்ட் தேசத்து அலெக்சான்ட்ரியாவிலும், விசேஷித்திருந்தன. பெருங்கணித சாஸ்திரியெனப் பெயர்பெற்று, கிரீஸ் (Greece) தேசத்து தத்துவஞானி ப்ளேடோ (Plato) என்பவரின் கொள்கையைக் கொண்டாடியிருந்த ஹைபேஷியா (Hypatia) என்னும் மாதுசிரோமணியின் தோலுரித்து, அம்மாதை நிர்வாணமாக்கித் தெருவிலிழுத்து தடியாலடித்துக் கொன்றூர்கள். நினைக்கவே நடுக்கந்தரும் இக்கொலைபாதகம், அலெக்ஸாண்ட்ரியாவின் அத்தியக்ஷகுரு ஸிரில் (Cyril) என்னும் கொடும் பாவிகாலத்து, அவன் கட்டளையின் கீழ் நடந்தது! ஸ்பெயின் தேசத்திலும் கத்தோலிக்கு கிறிஸ்தவ குருமார் ஆக்ஞையால், இத்தன்மைத்தான கொடுமைகள் அநேகமாய் நடந்தன. கலீலியோ (Galileo) என்னும் வானசாஸ்திரியைக் கடுஞ்சிறையிட்டார்கள். ப்ரூனே (Bruno) என்னும் அத்துவிதப்பெரியோனை அணுவளவு மிரங்காது பெருந்தீக்கு இரையாக்கினர்கள். அம் மஹானுபாவர் தன் தேகம் பற்றியெரியும்போதும், சற்றேனும்

அசையாமல், சலனமடையாமல், மஹா தீரத்துடன் தன்கொள்கையை விட்டகலாமல், தேகாபிமானமுற்றத் துறந்து சாந்தமூர்த்தியாகவே உயிர் நீங்கினர்.

இம்மஹா புருஷரைக்கொளுத்திய பாவிகள் பேரும் மகிழ்ச்சியும் அன்றே அழிந்தன. அழியா வுடம்புபெற்ற இப்பெரியோர்க்கு இவர் உயிர்விட்ட ரோமபுரியில் இவர் ஞாபகார்த்தமாகச் செய்துவைத்திருக்கும் பிரதிமைக்கு இன்றும் மரியாதை நடந்தேறிவருகின்றது.

KOVILOOR MADALAYAM

கிறிஸ்துவர் கொடுமை யிம்மட்டோ! மேற்சொன்ன மத்திய காலங்களில் வானினி (Vanini) என்னும் இதாலிய தத்துவஞானியின் நாவை அறுத்தார்கள். பிரான்சு தேசத்தில் பதினெட்டாம் நூற்றுண்டில் சிறந்த கல்விமானய் விளங்கி, மிகு சாதுர்யமான பல நூல்களியற்றிய ஏகேஸ்வரவாதி வால்டேர் (Voltaire) என்பவரைப் பலமுறை சிறையிலடைத்தார்கள். அமெரிகா ஐக்கிய மாகாணங்களில் (U. S. A.) வசித்திருந்து புகழ்பெற்று அக்கொள்கையே கொண்ட வித்வசிரோமணி தாமஸ்பெயின்(ThomasPaine) என்பவரை அவ்வாறே சிறைப்படுத்தினர்கள்.

அடுத்த பத்தொன்பதாம் நூற்றுண்டில் நாகரிக மிக்க வளர்ந்தும் சாஸ்திரக்கல்வி அதிகரித்தும், இங்லன்ட் தேசத்தில் புரோடெஸ்டன்ட் (Protestant) மதஸ்தர் தங்கள் மதக்கோட்பாடுகளை நிராகரித்த சுயக்கியானிகள் பலர்க்கும் தீங்கிழைத்தே வந்தனர். அவ்வரலாறெல்லாம் சுருக்கியாகிலும் சொல்ல இப்புத்தகம் இடந்தராததலின், ஐரோப்பாவிலும், பிறவிடங்களிலும் கிறிஸ்து மதத்தினர் பல நூற்றுண்டுகளாக ஆஸ்திகர்க்கும் நாஸ்திகர்க்கும் அத்வைதிகட்கும் செய்துவந்த வெவ்வேறுன கொடுமைகளை அறிய விரும்புவோர், ஹாலம் (Hallam) ட்ரேபர் (Draper), லெக்கி (Lecky) முதலியோர் எழுதிய பெருஞ் சரித்திரங்களிற் காணலாகும்.

ப்ரம்மயக்ஞம், தேவயக்ஞம், பிதுர்யக்ஞம், பூதயக்ஞம், அதிதியக்ஞம் எனும் பஞ்சயக்ஞங்களுள், பிறர்க்குத் துன்பஞ் செய்யாமையே சிறப்பினதென்று மஹாபுருஷர் பீஷ்மர் சொல்லியிருக்கிறர்.

ஆரியநேசரே! மேற்கூறிய சமயக்கொடுமைகள் யாவும் குருட்டு நம்பிக்கையாலும், மூடபக்தி வைராக்கியத்தாலும் விளைந்தனவேயன்றி வேறு காரணங்களாலல்லவென்பது யாவருமே தெளிவாயறியலாம். ஆதலால், நாம் கூறுவதொன்றுண்டு. அதாவது, எவரும் தம்மதமே எம்மதத்தினும் சிறந்ததென்றும், அஃதே கடவுளா லளிக்கப்பட்டதென்றும், அம்மதத்தாலேயே எவர்க்கும் நற்பதவிகிடைக்கும் மற்று மதங்களாற் கிடைக்காவென்றும், வீணுய்ப் பேசுவதொழித்து; உண்மையிலே தம் மதக்கொள்கைகள் எத்தகையின; அவைகளிற் கொள்ளப்படுவனவும் தள்ளப்படுவனவும் எவை; எனத் தீர்க்கமாய் ஆராய்ந்து, பின்னர் குணமுள்ளவைகளை அங்கீகரித்து குணமற்றவைகளை நீக்கிவரின், எம்மதம் மெய் உம்மதம் பொய்யென்று, 'சமயகோடிகளெலாந் தந்தெய்வமெந்தெய்வமென் றெதிர்வழக்கிடுவ' தொழியுமல்லவா? ஒழியுமாகின் சமரஸம் நிலைபெற்றோங்குமல்லவா? அப்பொழுது எம்மதமும் சம்மதமே யாகுமல்லவா? யோசியுமின்!

"ஓரோர்சமயத்துயிராய்ச் சிலபலவுண்டுசொன்னு
மாராயின்முத்தியொன்றே யெனினெங்குமதைவிரும்பித்
தேராமலெம்மதமிம் மதமென்ருென்றிற்சிக்கியிந்தப்
பார்மீதுழல்வதென்னீர் தெளிந்தோர்செயும்பண்பிதன்றே."
[அருட்பிரகாசம்.

"யாவருமெவையுந்தானு யவரவர்சமயந்தோறுந்
தோய்விலன்புலனைந்திற்குஞ் சொலப்படானுணர்வின்மூர்த்தி
யாவிசேருயிரினுள்ள லாதுமோர்பற்றிலாத
பாவனையதனைக்கூடி லவனையுங்கூடலாமே."—திருவாய்மொழி.

"ஓத்தசமயங்க ளோராறுவைத்திடும்
அத்தனொருவனு மென்பதறிந்திலர்
அத்தனொருவனு மென்பதறிந்திடின்
முத்திவிளைக்கு முதல்வனுமாமே."

"ஆறுசமயமுங் கண்டிலர்கண்டிவர்
ஆறுசமயப் பொருளுமவனலன்
தேறுமின்தேறித் தெளிமின்தெளிந்தபின்
மாறுதலின்றி மனைபுகலாமே."—திருமந்திரம்.

"நாலுணர்வுணரா நுண்ணியோன்காண்க
சொற்பதங்கடந்த தொல்லோன்காண்க
சித்தமுஞ்செல்லாச் சேட்சியன்காண்க."—திருவாசகம்.

---

## ஞானயோகம்.

"திரிவிதவுலகத் தரிதொருஞானி"—வைராக்கியதீபம்.

கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் எனும் முவ்வித யோகங்களில் முன்னிரண்டும் ஒருவாருகச் சுருக்கிச்சொன்னேம். இனி மூன்ருவதான ஞானயோகத்தைச் சொல்வோம், முன்னர் பலாபேக்ஷையற்ற கர்மத்தால் ஞானமடையலாமென்றும், உண்மையான பரபக்தியாலும் ஞானமடையலாமென்றும் சொன்னேம். ஆகவே மார்க்கம் வேருயினும் அடையும்பலனுன ஞானம் பேதமின்றியதாயிற்று. பக்தியாற்பெறும் ஞானத்திற்கும் கர்மத்தால் பெறும் ஞானத்திற்கும் வித்தியாஸமேயில்லை. ராஜயோகத்தா லடையவேண்டுவதும் ஞானந்தான். ஞானம் கர்மயோகத்தாலும் பக்தியோகத்தாலும் கிடைக்கும் என்பது துணிபாயினும், ஞானயோகமே சர்வோத்கிருஷ்டமானதெனச் சொல்லலாம். ஒருவன் தனக்கு ஓர் ஆபத்து நேரிட்டிருக்கையில், இன்னது செய்யலாமென்று யாதொன்றும் தோன்ருமல் மனங் கலங்கி ஏக்கமுற்று, தெய்வம் தான் வழிகாட்டவேண்டுமென்கிருன். ஓர் ஜாலக்காரன் தான் கற்ற வித்தைகளைக்காட்டும்போது, அவ்வதிசயங்கள் இன்னபடி உண்டாகின்றனவென்பது தெரியாமல் அவைகளைக் காணும் ஜனங்கள் இதென்ன மாயம் என்கிருர்கள். சாதாரணமாய் மனிதர்கள் தங்கள் ஆபத்துகாலத்தில் முக்கியமாய் கடவுளை நினைக்கிருர்கள். தாங்கள் கோரியது சித்தித்தால் கடவுளைத் துதிப்பதும், சித்தியாவிட்டால்கடவுளை நிந்திப்பதும் சகஜமாகவேயிருக்கிறது. சன்மார்க்கத்தாலாவது துன்மார்க்கத்தாலாவது ஓர் காரியத்தைக்கோரி, அது பலித்தால் தங்களிஷ்டதெய்வத்துக்கு அபிஷேகாதிகளும், அலங்காராதிகளும், உற்சவங்களும், பிரசாதங்களும் நடத்துவதும் தவிர, பிரஜைகள் மெச்ச காஸ்லைட்டுகளும் பாணவேடிக்கைகளும் கூட நடத்துகிருர்கள். ஓர் தனிகன்வீட்டிற் கன்னமிட்டுப் பொருள்களைத்திருட எண்ணும் கள்ளனும், தன்னிஷ்டதெய்வத்துக்கு தன் எண்ணம் நிறைவேறப் பிரார்த்தனை செய்துக்கொள்கிருன்! தன் இல்லத்துக் கருகேயிருக்கும் பிள்ளையாருக்குத் தன் சக்திக்கேற்றபடி தேங்காய் சூறையிடுவதாய்ச் சொல்லிக்கொள்ளுகிருன். இதனுல் நாம் கிரகிக்கவேண்டுவதென்னையெனில், ஸகஜமாய் மனிதர்கள் தங்கள் தங்கள் எண்ணங்கள்நிறைவேறவே கடவுளை நினைப்பதும், துதிப்பதுமா யிருக்கி

ரூர்களேயல்லது ஸதா கடவுளை நினைக்கவேண்டும், அது தங்கள் கடமை என்றே எண்ணவில்லை யென்பதாம். என்றாலும், எம் மதஸ்தரிலும் இடைவிடாது உள்ளபடியே கடவுளைத் தியானிப்பவருண்டு. அவர்கள் தான் பக்தரெனப்படுவோர். உண்மையானவர் மிகு கொஞ்சமெனவே சொல்லவேண்டும். உலகத்திலே கடவுள் நம்பிக்கையுடையவரும், அவரைத் துதிப்பவரும், அவர்க்குப் பிரார்த்தனை செய்துக்கொள்பவரும், செலுத்துபவரும், அவர்க்குக் கோயில் கட்டுபவரும், வாஹனாதிகள் செய்பவரும், உற்சவங்கள் நடத்துபவரும், அவர் பேரிட்டே சிற்சமயங்களில் அன்னதானாதி புண்ணியங்கள் செய்பவரும், அநேகருளராயினும் கடவுள் என்பவர் யாவர்? அவர் சொரூபமெவ்வகைத்து? ஜீவசொரூபம் எவ்வண்ணம்? மாயை எனப்படுவது யாது? என்று விசாரிப்பவர் சிலரே யாவர். இப்பதங்களை உபயோகிப்பவரையே அவைகளின் விபரம்கேட்கின், மறுமொழி கிடைக்காது; சமாதானமுஞ்சொல்லார். வேதாந்திகள் விசாரணைசெய்யும் பிரகிருதி (மாயை) ஜீவன், ஈஸ்வரன் என்னும் மூன்று வஸ்துக்களையே வேதாந்த விசாரணையில்லாத மற்றவரும் வழங்கிவருகிறார்கள். இவைகளைப்பற்றி, தத்துவநூல்கள் என்ன உணர்த்துகின்றன என்று ஆராய்வதுதான் ஞானாராய்ச்சி. ஞானாராய்ச்சியால் அறிந்தவண்ணம் அநுபவித்தலே ஞானயோகம் என்ப.

"நானற்றபோதத்தே நானானமுத்தியை
நானெங்ஙனஞ் சொல்வதுந்தீபற
நான்மறைக்கெட்டாதென் றுந்தீபற."—அவிரோதவுந்தியார்.

"நின்றவொன்றை யுணர்ந்தேனுக் கதனுணேர்மை யதுவிதுவென்
றொன்றுமொருவர்க் குணரலாகா துணர்ந்துமேலுங் காண்பரிது
சென்றுசென்று பரம்பரமா யாதுமின்றித் தேய்ந்தற்று
நன்றுதீதென் றறிவரிதாய் நன்றாய் ஞானங்கடந்ததே."—திருவாய்
[மொழி.

---

ஈசன்—ஜீவன்.

ஞானயோகத்தின் பயனாவது ஆத்மாவை அறிதலாம். ஞானமயமாய் நினைப்பு மறப்பற்று, எங்கு மொருதன்மைத்தாய் ஏகமாயிருப்பது தான் ஆத்மாவெனப்படும். அத்வைத சித்தாந்தப்படி அவ்வாத்மாவிடத்து கயிற்றில் அரவு தோன்றுவதுபோல மாயை ஜனித்து, அதன் சம்பந்தத்தால் ஜகசிருஷ்டி உண்டா

யிற்று. ஜகத்தைச் சிருஷ்டித்து அந்தரியாமியாய், சத்யம், ஞானம், அநந்தம், ஆநந்தம் முதலிய குணங்களுடன் பொருந்தினவனுயுள்ளவனே ஈஸ்வரன். முடிவில்லாத தத்பதசொரூபியாயிருக்கும் ஈஸ்வரன் சர்வ வியாபகமாயிருந்தும், தன்னுருவம் இவ்வளவென்று பாவனைசெய்யுங்கால், அதன் தொடர்ச்சியாக இடமும் காலமும் தொழில்களும் பல நாமரூப விகாரங்களும் ஆரோபமாயுண்டாகி, அவ்வீஸ்வரனே ஜீவனுகின்றுன். பரிபூரண ஆத்மசைதன்யத்திடத்து மாயை என்னும் பிரம்மாண்டகடமுண்டாயிற்று. கடத்திலுள்ள வெளியை ஆவரித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் தீபம்போல, மாயையினின்றும் உண்டான பிரம்மாண்டத்தில் ஈஸ்வரன் விளங்குகிறுன். கடத்திலுள்ள தீபம், கடத்தின் அநேகரந்திரங்கள் வழியாய், கடரந்திராகாசத்துடன்கூடி, ரந்திராகாசவாதாரமாய் அநேக தீபங்களாகப் பிரகாசிப்பதுபோல, ஈஸ்வரன் ஒருவனே மாயையாகிய பிரம்மாண்ட கடத்தில் விக்ஷேபமான ரந்திரங்களாலே ஆத்மாவை ஆதாரமாகக்கொண்டு அனந்தம் ஜீவர்களாக விளங்குகிறுன். ஈஸ்வரன் ஒருவனே எல்லாஜீவர்களுக்கும் ஆதாரமெனக் கொள்ளவேண்டும். கடத்திற்கும் விளக்கிற்கும் ஆதாரம் ஆகாசமேபோல, பிண்ட பிரம்மாண்டரூபமான சகல பிரபஞ்சத்திற்கும் சர்வவியாபகமான ஆத்மாவே ஆதாரமென்றறியவேண்டும். இவ்வாருக, ஆத்மாவுக்கு ஈஸ்வரத்துவம் ஜீவத்துவம் இரண்டும் உள்ளதென் ஏற்படுகின்றது. இது சமஷ்டி வியஷ்டியாலுண்டான பேதமாம். வெகு ஜனங்கள் என்பது சமஷ்டி; ஒரு மனிதன் என்பது வியஷ்டி. காடு எனல் சமஷ்டி; அதில் ஒரு விருக்ஷம் எனல் வியஷ்டி; கிராமம் எனல் சமஷ்டி; அதில் ஒரு கிரகம் எனல் வியஷ்டி. இதுபோல ஈஸ்வரன் சமஷ்டி; ஜீவன் வியஷ்டி. சகல ஜீவர்களின் தொகையே ஈஸ்வரன்; அப்படியெனில், எல்லாச் சீவர்களிடத்தும் அந்தரியாமியாய் விளங்குபவன் ஈஸ்வரனெனப் பொருளாம். ஒரு மனிதனே, அவனுக்குப் பிள்ளையிருக்கப் பிதாவெனவும், பேரனிருக்கப் பாட்டனெனவும் பெயர் பெறுவதுபோல, எங்கும் வியாபகமான ஆத்மாவுக்கே சமஷ்டியுபாதியால் ஈஸ்வரனெனவும், வியஷ்டியுபாதியால் ஜீவனெனவும் பெயருண்டாகிறது. ஈஸ்வரன் சர்வக்ஞனுகவுமிருக்கிறுன். ஓர் பெருத்த ஏரியின் ஜலம் அநேக கிராமங்களை ரக்ஷிக்கும்; ஓர் குளத்தின் ஜலம் ஒரு கிராமத்தையே

ரக்ஷிக்கும். ஓர் விளக்கினொளி சமீபத்துள்ள வஸ்துக்களைத்தான் விளக்குவிக்கும்; ஜடசாஸ்திரம் (Physical science) நன்குணராக் காலத்துண்டான தீவர்த்தி கொஞ்சம் தூரத்துள்ள வஸ்துக்களைப் பிரகாசிப்பிக்கும்; இக்காலத்துதித்த காஸ்லைட் (gas light) அதினும் தூரத்துள்ள வஸ்துக்களை தெள்ளிதின் பிரகாசிப்பிக்கும்; மின்சார ஒளியோ (electric light) நீண்டதூரம் வஸ்துக்களை ஒளிவிக்கும். இது நாம் காணும் காக்ஷியேயாம். இது போலவே ஆத்மசைதன்யத்துக்கு சமஷ்டியால் மஹத்வமாகிய சர்வக்ஞத்வமும் வியஷ்டியால் அணுத்வமாகிய கிஞ்சிஞ்ஞத்வமும் உண்டு. இப்படியாக சமஷ்டி வியஷ்டி என்னு முபாதியாலும், பேரறிவு சிற்றறிவுஎன்னு முணர்வினாலும் ஈஸ்வரனுக்கும் ஜீவனுக்கும் பேதமுண்டு. இப்பேதம் கற்பிதமென்பது அத்வைதக் கொள்கை. ஏரியின் ஜலத்துக்கும் தடாகத்தின் ஜலத்துக்கும் பேதமேயில்லை. அக்கினிக்கும், விளக்கொளிக்கும் பேதமில்லை. இரண்டு மொன்றே. ஆதலின் பேதமாயிருக்கும் உபாதிகளை நீக்கிப் பார்க்கின் ஈஸ்வரனிடமிருப்பதும் ஜீவனிடமிருப்பதும் ஒரே ஆத்மசைதன்ய விளக்கமெனவே நாமறியலாம்.

"எப்பொருள்களுக்குந் தோற்றமுநிலையு மிறுதியுமிதன்கணேயாகி
ஓப்பிடவொன்று மின்றியேயென்று முள்ளதாயுரையுணர்விறந்த
அப்பொருணேரே யறிந்தபோதெல்லாப்பொருள்களுமறிந்தவாமங்க
மெய்ப்பொருடானே யெப்பொருள்களுமாய் விளகலால்வேறிலாமை
[யினால்."—பிரமகீதை.

"சத்தாதிதத்துவம் போய்த்தானு மெதிருங்கழன்றூற்
சித்தாந்த வேதாந்தச் செம்மையிலே—முத்தி
அநிர்வசனமின்ப மதீதமெனிலாங்கே
பினமிடுதல் கன்மம் பிளாய்"—ஒழிவிலொடுக்கம்.

"மோகவற்ச நாபிக்கொடி முளைத்தெழுமூலம்
சோகமாசுண மிருந்தர சாள்வதோர்சூழல்
ஆகமேமுதல் யானெனதென்னு மஞ்ஞானம்
ஏகமாகிய பராபரந் தோன்றினுவிறக்கும்."

"பொய்யதாமுயற் கொம்பினைப்பற்றவும் போக்கவுநினைப்பாரார்
ஐயனேபரபோத பூரணத்திலே யயலொன்று வருமாறென்
பொய்யதாகிய வனேகபாவனை யினைப்பொருந்தல் புன்பிறப்பாகும்
ஐயமின்றிய வேகபாவனையி லழுந்துதல் பவந்தீர்தல்."—ஞானவாசி
[ட்டம்.

"சார்புணர்ந்து சார்புகெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தருநோய்."—திருக்குறள்.

மேற்சொன்ன ஞானயோகத்தின் பலன், இவ்வுலகத்தில் ஜீவர்க்குள்ள பயம் பிராந்தி மோகம் துக்கமுதலியவை அறவே ஒழிந்து எவ்வித சலனமுமற்று மாறாச்சுகத்தை யனுபவித்தலாம். அத்வைத சித்தாந்தப்படி ஞானயோகத்தின் முடிவானது வேதாந்த விசாரணையாலறிந்தபடி அகண்டவுலகம் கற்பனையே, நித்தியமாயுள்ளது பிரமம் ஒன்றேயென அநுபவத்திற் காணலாம். அவ்வாறு காணலே ஜனனமொழிய ஹேதுவாம். ஞானயோகத்தால் பரம்பொருளாகிய பிரமத்தை அறியவே, பிறப்பைச் சார்ந்தனவாகிய சகல துன்பங்களும் அழிந்தேபோகும்.

"பிறப்பென்னும் பேதமைநீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்பதறிவு."—திருக்குறள்.

நித்தியமாய், சர்வவியாபகமாய், விகாரமற்றதாய், எக்காலும் ஒரே தன்மைத்தாயுள்ளதுவே பிரமமெனப் பெரியோர் கூறுவர். அவ்வஸ்துவைக் காண்கையாவது—ஜீவன் பிறவிக்குக் காரணமாகிய தன் அஞ்ஞானநீங்க, அப்பரம்பொருளில் லயமாக அல்லது அதனுடன்கலக்க, இடைவிடாமல் மனதை நாட்டியிருத்தலாம். இதுதான் சமாதி எனப்படும். ஜீவர்கள் தம் மரணகாலத்தில் எண்ணுகிறபடி பிறவியுண்டாகுமெனுஞ் சித்தாந்தமிருப்பதால், மோக்ஷத்தில் ஆசையுள்ளோர்க்கு அக்காலத்தில் தத்துவப்பொருளைப் பாவிக்க, முன்னமேயே ஞானயோகப்பழக்கம் பண்ணலைவிட வேறு உபாயமில்லையெனக் கொள்க.

ஞானயோகத்தாலறியப்படும் அப்பரவஸ்து எத்தன்மைத்து எனின், அதைச் 'சொல்லாமற் சொல்லும் வேதம்' எனச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்பரம்பொருளை, தமது நிஜபக்தியாலும், தத்துவ விசாரத்தாலும் அறிந்தபடி, நமது பெரியோர் அடியில் வருமாறு பாடியுள்ளார்:

"தானேகடன் மலையாதியுமாய் நிற்கும்
தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானேயுடலுயிர் தத்துவமாய் நிற்கும்
தானேயுலகிற் றலைவனுமாமே."—திருமந்திரம்.

"பாராதியெட்டு மப்பாலு மெப்பாலுமா
யோர்சோதியே நின்றதுந் தீபற
உன்னுவேறில்லை யென்றுந் தீபற."—அவரோதவுந்தியார்.

"மாலாகிநான்முகனாய் மாபூதமாய் மருக்கமா யருக்கமாய் மகிழ்வு மாகிப், பாலாகியெண்டிசைக்கு மெல்லையாகிப் பரப்பாகிப் பரலோகந் தானேயாகிப், பூலோகபுவலோக சுவலோகமாய்ப் பூதங்களாய்ப் புராணந் தானேயாகி, ஏலாதனவெலா மேல்விப்பானு யெழுஞ்சுடரா யெம்மடிக ணின்றவாறே."—தேவாரம்.

"நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாயமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகேழெனத் திசைபத்தெனத் தானொருவனுமே
பலவாகிநின்றவா தோணோக்க மாடாமோ."—திருவாசகம்.

"துன்பமுமின்பமுமாகிய செய்வினையா யுலகங்களுமா
யின்பமில்வெந்நரகாகி யினியநல்வான் சுவர்க்கங்களுமாய்
மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாய மயக்குகளா
யின்புறுமிவ் விளையாட்டுடையானைப் பெற்றேதுமல்லலிலேனே."—
[திருவாய்மொழி.

"ஒன்றுடனுந்தோய் வில்லாவொத்தார் மிக்காரில்லா னுலகமில்லான்
நின்றநினைவுக் கெட்டாநித்தன் காணப்படா னெஞ்சுணிற்பான்
பொன்றுபிறப்பிலி முதலாமறிவினிட்களன்பழையோன் பொருள்க ளில்லோன், என்றுநினைந் தடிக்கடியும் பிரமமெனநோக்குதலே யியல்பதாமே."—தேவிகாலோத்தரம்.

"திக்குங்காலமு முதலியவசத்துறு சிறுவடிவறத்துன்பம்
தொக்கவன்னவற் றுன்மறைவாகியே சுக்கமாய்நொய்தாகி
மிக்கசோதியா யனைத்துமாயொன்றுமாய் மெய்யறிவொன்றேயாந்
தக்கவிந்நிலை நில்லெண வுரைத்தனன் தலைமையா முபதேசம்."—
[ஞானவாசிட்டம்.

"உலகமேயுருவமாக யோனிகளுறுப்பதாக
இலகுபேரிச்சாஞானக் கிரியையுட்கரணமாக
அலகிலாவுயிர்புலன்கட் கறிவினையாக்கியைந்து
நலமிகுதொழில்களோடு நாடகாடிப்பனுதன்."—சிவஞான சித்தி
[யார்.

"பாருந்திசையும் படரொளியாலே நிறைந்தான்
தாருந்தலையுமிலாத் தோன்றவான்—வேராகி
வித்தாகி வித்தின்முளையாய் விளங்குதனிச்
சத்தாதிபூதங் கடானாகிச்—சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய்வெறும் பாழுக்கப்பால்
உறுபொருளாய் நின்றவொருவன்."—நெஞ்சுவிடுதூது.

"பார்த்தவிடமெல்லாம் பரமேகாணம்மானை
பாராமலிந்நாளும் பாழ்பட்டே னம்மானை."—திருவம்மானை.

---

## சாதன சதுஷ்டயம்.

வேதாந்த விசாரணைசெய்ய விரும்புவோர், யாவராலும் சிரேஷ்டமானவையெனக் கொள்ளப்பட்டிருக்கும் ஞானநூல்களைக் கசடறக்கற்று, தக்க குருவைநாடி ஞானோபதேசம்பெற்று வேதாந்த சிரவணஞ்செய்தல் தகுதியாம். குருவும், ஞானநூல் உணர்த்துவதும் ஞானோபதேசம்செய்வதும், நல்ல பக்குவமடைந்த சிஷர்களுக்கே செய்தல்வேண்டும். இதுபோன்ற ஞாயத்தை அநுசரித்தே நமது நாட்டிற்கே உரிய வகார்வித்தையை பொருளாசை விட்டவர்க்கே சொல்லும்படி பெரியோர்விதித்தார்கள்.

"இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமமீ யென்னல்வேண்டும், வியப்புறவாசையி லுழல்வார்க்கிவ்வாறே தின் மீளாத நிரயில் வீழ்த்ததாகும். இயக்குறுபோகத் தாசைதீர்ந்து புந்திதெளிந்த வுனைப்போல்வார்க்கே திகழத்தோன்றும், மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக்கிட்டா வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனுமாங்கே."—ஞானவாசிட்டம்.

மேற்சொன்ன சிஷன், ஸ்ரவண மனன நிதித்தியாஸனம் செய்பவனாயிருத்தல்வேண்டும். ஸ்ரவணமாவது, வேதோபநிஷத் முதலியவைகளைக் குருமுகமாய் விபரீதமின்றித் தெளியக்கேட்டாலாம். மனனமாவது, அங்ஙனங் கேட்ட விஷயங்களை நன்றாய்ப் பரிசீலனம்பண்ணி, மனதிற் றரிக்கச்செய்தலாம். நிதித்தியாஸனமாவது, அவ்வாறு தரிக்கச்செய்தபின் விபரீதம் நீங்க, சேடித்துநின்றது நித்தியமாகிய பரம்பொருள் ஒன்றேயென நிச்சயித்தலாம். இப்பக்குவமடையாதவர்கள் வேதாந்த சாஸ்திரம் கற்கவும், ஞானோபதேசம் பெறவு மருகரல்லர். இப்பக்குவம் பெறார்க்கு உபதேசம்பண்ணல், 'மட்கலத்தைப் பொன்னாக்க வாஞ்சைகொளல்போலும், கன்னிக்குக் காமநூல் கட்டுரைத்தல்போலும், கண்ணிலார்க்குப் பொன்னாரம் பூட்டுதல் போலும் ஆம்' என ஓர் விவேகிகூறியுள்ளார். சாதன சதுஷ்டயமாவன: (1) விவேகம்; (2) வைராக்கியம்; (3) ஷட்சம்பத்தி; (4) முமுக்ஷுத்வம். என நான்கு சாதனங்களாம். இச்சாதனமில்லாதவர்கள் வேதாந்தவிசாரப்படியேறவே அநர்ஹர்களாம்.

---

## வஸ்துவிவேகம்.

இவ்வுலகத்தில் நாம் கண்ணுற்காணும் சகல ஜீவராசிகளும், நால்வகை யோனியினிடமாக உற்பவிக்கின்றன வென்பதாக

நமது ஹிந்து தாபரசங்கம சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது. நால்வகை யோனிகளாவன : 1. சராயுசம்—பையிற்கட்டப்பட்டுப் பிறப்பது ; 2. அண்டசம்—முட்டையிற் கட்டப்பட்டுப் பிறப்பது ; 3. ஸ்வேதசம்—வேர்வையினிடமாகப் பிறப்பது ; 4. உற்பீஜம்—பூமியில் முளைத்துவருவது. யோனிபேதம் 4-லக்ஷமெனவும் சொல்லப்பட்டிருக்கிறது. அவை:—தேவபேதம் 16-லக்ஷம்; மானிடபேதம் 9-லக்ஷம்; மிருகபேதம் 10-லக்ஷம்; பக்ஷிபேதம் 10-லக்ஷம்; ஊர்வனபேதம் 11-லக்ஷம்; நீர்வாழ்வனபேதம் 10-லக்ஷம்; தாவரபேதம் 18-லக்ஷம். ஆக எண்பத்துநான்குலக்ஷ யோனிபேதங்களாம். இச்சாஸ்திர விவரங்கள் மேற்கண்டத்து கியூவியர் (Cuvier) டார்வின் (Darwin) போன்ற தாபர சங்கம சாஸ்திரிகளால் எம்மட்டும் அங்கீகரிக்கப்பட்டனவோ அறியோம்!

நமது தேசத்தில் கட்டுரை சகஜமாயினும் உலகத்தில் வசிக்கும் ஜீவன்கள் அனந்தமாயிருக்கக் காண்கிறோம். அநாதியாக, எண்ண எட்டாத காலந்தொடங்கி இப்பூவுலகத்திற் பிறந்து மரித்த ஜீவர்களைக் கணக்கிட யாவராலாகும்? 'மண்ணில் மாண்டவர் மண்ணிலும் கோடிபேர்' என்பது பழமொழி. தோற்றமான இப்பிரபஞ்சத்திலுண்டான வஸ்துக்கள் யாவுமே அழிவனவாயிருக்கையை நாம் அறிகிறோம். மனிதர் முதல் மற்றெல்லாச் சீவர்களும் மண்ணுக்கே இரையாகிறார்கள். நம்மைப் பெற்றவர்களும், அருமை பாராட்டி வளர்த்தவர்களும், நம் குடும்பங்களில் ஆண் பெண் பாலராயிருந்த பெரியோரிற் பலரும் இறந்தேபோனார்கள். நம்மேல் ஆசைவைத்த அருமைச் சகோதரரும், தங்கை தமக்கைகளும், பெண்டுமக்களும் நம்மைப் பிரிந்தேபோனார்கள். நாம் அன்புடன், அருமையாய் அமுதூட்டி வளர்த்த அழகிய சேய்களும் நம் கண்முன்னே மறைந்துபோயின. கொடிய மிருகங்களும், பசுபோன்ற சாதுமிருகங்களும் சாகின்றன. மஹா விருக்ஷங்களழிகின்றன. பிருதிவிசாஸ்திரம் (Geology) கூறும்படி, ஆழிகள் தீவுகளாயின; கடல்கள் கண்டங்களாயின; கண்டங்கள் கடல்களாய்மாறின; பண் மேடுகள், குன்றுகளும் மலைகளுமாயின; மலைகளுதிர்ந்து கரைந்து மண் மேடுகளாயின. இவ்விந்தைகளெல்லாம் உற்று நோக்கில், தோற்றப் பிரபஞ்சத்திற்றோன்றும் சகல வஸ்துக்களும் அழிவனவென்றே நாம் கொள்ளவேண்டும். நாமும்

அநித்யமே; நம்மைச் சேர்ந்தோரும் அநித்யமே; எல்லாம் அநித்யமேயாம்.

புராணேதிகாசப் பெரும் பொய்களைப் பெரும்பாலும் பேணும் நமது தேசத்திலியற்றிய ஸ்காந்தபுராணத்திற் கூறியுள்ள படி; ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டு சதுர்யுகமாண்ட சூரபத்மனென்னும் மஹா ராக்ஷதனும் ஒருநாள் மாண்டான். வானசாஸ்திரமே (Astronomy) கல்லாமலும், அல்லது அது கற்றோரிடத்தே அறிந்துகொள்ளாமலும், ஜோதிஷ மண்டபமாவது (Observatory) போய்ப் பாராமலுமே, புராணப்புளுகும், புராணாலங்காரமும் சாஸ்திரக் கோட்பாடுகளென நம்பியிருப்பவர் நமது தேசத்தில் எண்ணத்தொலையாதவரா யிருக்கிறார்கள்! அவர்கள் சூரியன் உலகத்துக்கெல்லாம் ஒளியிடும் கிரகமென்றறியாமல், மனுஷர்போல் கை கால் முதலிய உறுப்புகளுடைய தேவனென்றும்; ஆகாசத்தில் ஏழு பச்சைக்குதிரைகள் கட்டிய ரதத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு சவாரி செய்கிறானென்றும்; அவனுக்கு ஓர் கண் ஊனமென்றும்; தக்கன் (தக்ஷப்பிரஜாபதி) யாகத்தில் அவன் பற்கள் பிடுங்கப்பட்டனவென்றும், இன்னும் இவைபோன்ற ஆபாசக் கதைகளை நம்பியேயிருக்கிறார்கள்.

அவ்வாறே சந்திரனும் மனுஷரூப முடையவனென்றும், அவனுக்குத் தாரை என்றொரு மனைவியுண்டென்றும் இன்று வரையில் நம்பியேயிருக்கிறார்கள். இக்குருட்டு நம்பிக்கைகள் எக்காலமொழியுமோ? இவ்வாபாசக் கதைகளைப் புகட்டிவைக்கும் புராணபாகங்கள் எக்காலமறையுமோ? பொய்களைந்த புராணங்கள் எப்போவெளியாகுமோ அப்போதுதான் நமது மஹிமை பெற்ற நாடு சீர்படும்! மேற்கண்டத்து நாடுகள்போல் மேன்மையடையும்!

இத்தகையோர்க்கு உண்மைவிளக்கவே அடியிலே சூரியனைப்பற்றி விவரிக்கிறோம்:

"பூமிக்கும் சூரியனுக்கும் உள்ள தூரம் சற்றுக் குறைய 93-மிலியன் மைல்கள். அதன் நிஜமான வட்டம் (Diameter) 866,500-மைல்கள். அது பூமிவட்டத்தினும் $109\frac{1}{2}$-பங்கு அதிகம். ஆதலால் அதன் பருமை பூமியின் தடிப்பைவிட 1,300,000 பங்குக்கு கொஞ்சம் அதிகம். அதன் பிண்டம் (Mass) பூமியின் பிண்டத்தினும் 330,000 பங்

களவு பெரிது. ஆதலால் அது, எல்லாக்கிரகங்களின் மொத்தபிண்டங்கள் எவ்வளவு பெரிதோ அதற்கு ஏறக்குறைய 900 பங்களவு பெரிது.'' *

கணிதசாஸ்திரப் புலமையாலும், வானசாஸ்திர ஞானத்தாலும், தூரதிருஷ்டிக் கருவியின் அவதானிக்கையாலும் கணித்த உண்மை யிதுவாம். உண்மை யிப்படியிருக்க, மேற்சொன்ன சூரபதுமனென்னும் அரக்கனுக்கு ஜேஷ்டபுத்திரனை பாநுகோபன் என்பவன், தனது குழந்தைப்பருவத்தில் தொட்டிவிற் றூங்கிக்கொண்டிருக்கையில் சூரியகிரண உஷ்ணம் தன் தேகத்தைத் தாக்கவும், அது பொறுது, தக்ஷணம் (தான் வசித்த பூமிக்கு 93-மிலியன் மைல் தூரத்திலிருந்த, அதற்கு 13-லட்சம் பங்கு பருமையுள்ள) சூரியனைப் பிடித்துவந்து தொட்டிவிற் கட்டிவைத்து, அதை ஓர் சிற்றுயிராய்ப் பாவித்து அதனுடன் விளையாடிக் கொண்டிருந்ததாய் யாம் எமது இளவயசில் கந்தபுராணத்தில் வாசித்துள்ளோம். இஃதென்ன ஆபாசம்! எந்த புராணப்புளுகும் கந்தபுராணத்திற்காணலாம் என்ற வாக்கியம் சரியாயிற்று. [கந்தபுராணத்து வர்ணனை, மிகுதி, மிகுதி என்றார் யாழ்ப்பாணத்து சதாசிவ நாவலர்.] இப்புராணம் இப்படியெனின், ராமாயண பாரதமோ சாமானியமல்ல. கந்தபுராண வர்ணனைக்கு இரண்டாந்தரம் மூன்றுந்தரமெனலாம். 'பாரத ராமாயணம் வெகுபொய், வெகுபொய், வீணும்' என்றார் அகஸ்தியர். என்றாலும், இவ்விரு இதிகாசங்களிலுமடங்கிய திவ்யமான நீதிகளை மறுத்ததன்றெனக்கொள்க.

ஸ்ரீராமருக்கு வளர்த்த தகப்பனுய தசரதச் சக்ரவர்த்தி அறுபதினுயிரம் வருஷம் ஜீவித்திருந்ததாக ராமாயணத்திலும், மஹா சத்பாத்திரராயும் வீரராயுமிருந்த பீஷ்மர் நானூறுவருஷமிருந்ததாக பாரதத்திலும் அறிகிறோம். இன்னும் அனந்தம் பேர்கள் ஆயிரக்கணக்கான வருஷங்களிருந்ததாகவும் நமது புராணங்கள் கூறுகின்றன. சிரஞ்சீவிபட்டம் பெற்ற மார்க்கண்டேயர் மாபலி அநுமார் விபீஷணர் பரசுராமர் அஸ்வத்தாமர் கிருபாச்சாரி வியாஸர்—இக்கலிகாலத்தில் எங்குதானுள்ளாரோ தெரியவில்லை! நமக்கு அறிவிப்பாருமில்லை! புஸ்தகங்கள் தான் சாக்ஷிபோலும்!

---

* Century Dictionary.

நம்மவர்கள் ஸ்மிருதிக்குப் பின் புராணங்களும் இதிஹாசங்களும் பிரமாணங்களாகக் கொள்ளுகிறுர்கள். இவ்விரண்டும் கூறுவதெல்லாம் பொய்யென்று நாம் கூறுவதல்ல. அவைகளில் மெய்யுடன் பொய்யும் ஏராளமாய்க் கலந்திருக்கிறதென்பதே நுண்ணறிவுடையோர் துணிபு. ராமாயணம் பாரதம் என்னும் இரண்டு இதிஹாஸங்களையும், விசேஷமாய் பாரதத்தை மட்டுமே ஐந்தாம் வேதமாகக் கொள்ளுகிறுர்கள். ஸ்ரீ சங்கரரும் சாந்தோக்கியோபநிஷத்திற்குத் தாமியற்றிய பாஷியத்தில், புராண இதிஹாஸங்களைச் சேர்த்து வேதமெனப் பாவித்து, அவைகள் ஐந்தாம் வேதமென்று நிச்சயிக்கிறுர். ராமாயணம், பிள்ளை தந்தை பால்நடத்தவேண்டிய கடமையும், சகோதரர் ஒருவர்க்கொருவர் கடமையும், ஸ்திரீ புருஷர் நடந்துகொள்ளவேண்டிய முறைமையும், அரசு செலுத்து முறைமையும், ராஜதந்திரமும் இன்னும் அநேக நீதிகளையும் போதிக்கின்றது. பாரதமோ மஹா தீரர்களும் வீரர்களும் விவேகிகளுமான க்ஷத்திரியர் அழிந்ததால், நமது புராதனதேசத்தை பிற்காலத்தில் அந்நியர்கள் கைப்பற்றி ஆக்கிரமிக்கப் போகிறுர்களென்பதையும்; இதன் துக்ககரமான கடைசிப் பாகம் இவ்வாரிய நாட்டிற்குப் பின்பு சம்பவிக்கப்போகும் தெளர்ப்பாக்கியத்தையும் சூசிப்பிக்கின்றது. இவ்விதிஹாஸத்தின் முக்கிய கதைகளின் மத்தியில், ஆங்காங்கு தர்மத்தைப்பற்றிய உபந்நியாசங்களும், மஹாபுருஷரான பீஷ்மருடைய சாஸ்வத பிரயோஜனமுள்ள நீதிபோதங்களும், பாரதத்திற்கு விலையிலாச் சிரோரத்தினம்போல் விளங்கும் பகவத் கீதோபதேசங்களும் உபகதைகளும் பலமுறையும் வருகின்றன. அன்றியும், இவ்விதிஹாஸத்தில் பூர்வ பரம்பரை மன்னர்களின் வரலாறும், மகரிஷிகளின் மஹத்வமும், யோகிகள் முனிவர்கள் சரிதமும், இடையிடையே சிவன்-விஷ்ணு தாரதம்மியமும், கிருஷ்ணன் சித்திகளும் கபடும் சூதும் பொய்யும் குடிகேடும், தருமன் சாந்தமும், வீமன் மஹாவலிவும், விஜயன் மஹாவீரமும், கர்ணன் சொல்லொணுக்கொடையும், பாண்டவர் பொறையும், துரியோதனுதிகள் பொறுமையும் வஞ்சமும், இன்னும் அநேகவிஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. "பாரதம் முழுமையுமே, சரித்திரம், தருமம், மதம் இவைகளைப்பற்றிய வசனங்கள் நிறைந்த கலாநிதியாக இருக்கிறது. அதற்குமேலான கிரந்தம் உலகத்

கத்திலில்லை யென்பது மட்டுமன்று; அதற்குச் சமானமானது மில்லை.''—சநாதநதர்மம், ௩-ம் பிரிவு.

மேற்குறித்த முக்கியமான நூலில் புராணங்கள் புராதன சரித்திரத்தைக் கூறுகின்றனவென்றும்; அச்சரித்திரத்தின் காலநிலைமை முதலிய சுபாவங்கட்கும் இக்காலத்தவைகட்கும் வித்தியாசமிருக்கிறதென்றும்; இப்பிரபஞ்சத்தில் ஸ்தூல திருஷ்டிக்கு வியக்தமில்லாத பிரதேசங்களைப்பற்றி அவைகள் விவரிக்கின்றனவென்றும்; ஆகவே, புராணங்களின் தாற்பரியங்களை இக்காலத்திய பிராகிருத சாஸ்திரத்தைப்போல் (physical science) மதிக்கக் கூடாதென்றும்; புராணத்திற் சொல்லியிருக்கும் பிரபஞ்ச வரலாறுகளையும் மற்றவைகளையும் சூக்ஷ்மமான யந்திரங்களுதவி எவ்வளவிருந்தாலும் அவ்வுதவியைக்கொண்டு நமது ஸ்தூலதிருஷ்டியால் நாம் பார்த்துத் தெரிந்துகொள்வதைக் காட்டிலும், யோகசித்திகள் கைகூடும்போது அவைகளெல்லாம் மிகச் சரியானவைதானென்று அநுபவத்துக்கு வரலாமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கோர் திர்ஷ்டாந்தமும் காணுமே! கைப்புண்காணக் கண்ணாடிவேண்டுமா? "பிராணிகளின் உற்பத்தி, மரணம், போக்கு, வரவு, வித்தை, அவித்தை முதலியன அறிபவன் பகவானுவன்'' என நமது சாஸ்திரங்கூறுகின்றது. யோகத்தால் உள்ளபடி இவையறிந்தாற் போதும். ஒருவன் தன்வரையில் அறிந்துகொண்டாற் போதாதா? அகண்டமான பிரபஞ்ச முழுதும் அறியவேண்டுமா? 'உன்னை நீ யறிவாயாகி லுனக்கொரு கேடுமில்லை' என்பது கைவல்யம். புராணங்களெனச் சொல்லப்படும் பதினெட்டும் செய்தவர் வியாஸர் ஒருவரேயெனக் கொள்ளக்கூடாமையாயிருக்கிறது. ஏனெனில், ஒரு புராணத்துக்கு மற்றொன்று முரணுகவிருப்பதாலும்; சிவ புராணங்களில் சிவனையுயர்த்தி விஷ்ணுவைத் தாழ்த்தியும், விஷ்ணுபுராணங்களில் விஷ்ணுவையுயர்த்தி சிவனைத் தாழ்த்தியுமிருப்பதனுல், இப்புராணங்கள் செய்தார் ஒருவரேயாகில் அவர் தன் மனசாக்ஷிக்கு பிரத்தியக்ஷ விரோதமாக முரணுனகாரியங்கள் செய்திராரென்பது நாம் யூகிக்கவேண்டியிருக்கிறது.

மஹா சித்தராயிருந்த போகமுனிவர், தமது ஏழாயிரத்தில் மண்ணுக்கிரையாகாதவர் யாவருமே யில்லையென்றும், ராமர், ராவணன், கிருஷ்ணர், பாண்டவர் முதலாக யாவருமே மாண்

டாரென்றும் கூறுகிறார். இது உண்மையிலும் உண்மையே. நம்மொவ்வொருவர்க்கும் தின அநுபவமே. ஆகையால் அநித்தியமாய்க் கழியும் வஸ்துக்கள்மேல் ஆசைவைக்காமலும், அவைகளில் புத்தி செலுத்தாமலும், நித்தியமாய் என்றைக்கும் அழிவில்லதாயுள்ள பிரமத்தினிடத்தே மனம் பற்றியிருத்தலே நித்தியா நித்திய வஸ்து விவேகம் எனப்படும். உலகமுழுதும் சதா மாறுதலையுடையதாகவே யிருக்கின்றது. மாறுதலின்றி எக்காலும் ஒரேபடித்தாயுள்ள வஸ்து ஒன்றே. மாறுதலுள்ள வஸ்துக்களைக்கண்டு மாறுதலற்றவஸ்து ஒன்றிருக்கவேண்டுமென்று நாம் யூகிக்கிறோம். அவ்வஸ்துதான் ஆத்மா. அவ்வாத்மாதான் கடவுள். அதுதான் பிரமம். என்றைக்குமுள்ளது அப்பிரமமே.

தாகமெடுத்த சமயம் கானல் நீரைக்கண்ட வொருவன் அதைக்கிட்டி அது நிஜமான நீரல்லவென்றறிந்த பின்னும், அது தோற்றிக்கொண்டேயிருக்கும். அப்படித் தோற்றினும் அம்மனிதன் அதனிடத்து தாகந்தணிக்க ஆசைவைக்கான். அதுபோல, தோற்றமாயுள்ள பிரபஞ்சம் சத்தியம்போற்காணினும், வேதாந்த விசாரணையால் அது அநித்தியமென்றே முடியும். ஆகையால் கானல்நீர்போன்ற உலகத்தில் சத்தியபுத்தியை வைக்காமல், நித்தியமாய், சுயம்புவாயுள்ள ஆத்மாவிடத்து மனதைத் தரிப்பதே 'நித்தியா நித்தியவஸ்து விவேகம்.' இவ்விவேகம் மனிதர்க்கு சாதாரணமாயுண்டாவது கடினமாயினும், இது உண்டாகாவிடில் மேற்சொன்ன மற்ற மூன்று சாதனங்களும் கைகூடாவாம். நமது தேகமும், போகமும் அநித்தியமென்று நமக்குணர்த்தவே

> "நெருநலுள னொருவனின் றில்லையென்னும்
> பெருமையுடைத் திவ்வுலகு."—என்றார் திருவள்ளுவர்.

> "சுற்றமொ டெற்ற துவந்துவ மெல்லா
> மற்றவர் தம்மொடு மற்றவர் தாமே"—அஞ்ஞைவதைப்பரணி.

---

## வைராக்கியம்.

மனிதன் நித்தியா நித்தியவஸ்து விவேகத்தால் இப்பிறப்பிலநுபவிக்கும் விஷயபோகங்கள் யாவும் அநித்தியமென்றும், க்ஷணத்தி லழிவனவென்றும், அவைகள் துன்பமே பயக்குமென வுணர்ந்தபின், அப்போகங்களில் மனப்பற்றைத் தீரவொழித்

தலே வைராக்கியம் அல்லது நீண்டபெயருடன்—'இகமுத்திரார்த்த பலபோகவிராகம்' எனப்படும். உலகவிஷயங்களில் நாம் சுகமென்றெண்ணுவதெல்லாம் உண்மையிலே சுகமல்ல. எதைச் சுகமென்றெண்ணுகிறோமோ அதனுடன் துக்கமும் கலந்துதானிருக்கிறது. துக்கமற்றவன் உலகத்தில் எவனுமேயில்லே. இவ்விஷயத்தில் தனிகனும் வறியவனும் ஒன்றேயாம். சக்ரவர்த்தியும் யாசகனும் ஒரே நிலேயிலுள்ளவரேயாம். இது பற்றியே உலகெங்கும் புகழ்பெற்ற இங்கிலாண்டுதேசத்து மஹாநாடகக்கவி ஷேக்ஸ்பியர் (Shakspere) என்பார், 'கிரீடம்தரிக்கும் சிரசு ஆறுதலற்றேயிருக்கும்' என்றார். இப்போது சுமார் நாலுவருஷகாலமாய் யூரோப்கண்டத்தில் நடந்துவரும் நீதியற்ற பெரும்போரே இவ்வாக்குக்குப் போதுமான சாக்ஷியாம்.

இவ்வுலகத்தில் சுகதுக்கங்கள் மாறிக்கொண்டேயிருக்கின்றன. சிறிது காலத்துக்குமுன் ஐஸ்வரியவந்தனயிருந்தவன் இப்போது ஏழையாயிருக்கிறான். சில வருஷங்கட்குமுன் நித்திய தரித்திரனுயிருந்தவன் இப்போது சகல சம்பத்துடன் வாஹனதிகளுடனும் மோடார் ரதத்துடனும் வெளியாகிறான். இதோர் அதிசயமல்ல. உலகசுபாவமே இப்படிதான்.

மேற்கூறிய நித்தியாநித்திய வஸ்து விவேகத்தால் லோகத்துள்ள வஸ்துக்கள் யாவும் நாமரூபவிகாரமானவைகள், சத்தியமானவைகளல்ல வென்றறிந்தபின்னர், அசத்தாயும் அநித்யமாயுமுள்ள இவ்வுலகில் நித்யசுக மெவ்வாறு கிடைக்குமென்பதை மனதாரவெண்ணி, இகபோகங்களேயெல்லாம் வெறுத்து வைராக்கியமடைவதே இக முத்திரார்த்த பலபோகவிராகம். விராகமுண்டாயினும் அது நிலேயாயிருப்பது கடினம். பகவத்கீதை முதலிய தத்துவசாஸ்திரங்கள் கேட்கும்போதுமாத்திரம் அதன்படியே நடக்கவேண்டும், புண்ணியமே செய்யவேண்டும், பாபஞ் செய்யக்கூடாது, எக்காலும் கடவுளேத் தியானிக்கவேண்டுமென்றெண்ணுவது புராணவைராக்கியம். பிரேதத்தைச் சுடுகாட்டுக்குக் கொண்டுபோவதைக் கண்டபோது மாத்திரம், இதென்னவாழ்வு, என்னபோகம், எல்லாம் அநித்யம், பெரியோர் சொன்னதெல்லாம் சரிதான், நாமே திர்ஷ்டாந்தமாகப் பார்க்கிறோம். இவ்வுலக வாஞ்சை நிஷ்பிரயோஜனமானது, இதைத் துறப்பதே நலம் என்று நினைப்பது ஸ்மசானவைராக்

கியம். ஒரு ஸ்திரீ கர்ப்பவேதனை பொறுக்கமுடியாது, அற்ப சுகத்துக்காக இப்பாதை யேன்படவேண்டும், இனி புருஷன் முகத்தைப் பார்க்கவேகூடாது என்று, அச் சமயமாத்திரம் நினைப்பது பிரஸவ வைராக்கியம். இவ்வுலகவாழ்வையொழித்து பேரின்பவாழ்வைப் பெறவேண்டும் என, துக்கம் நேரிட்டகாலத்தில் மாத்திரம் நிச்சயித்துக்கொள்வது பிரஸூதவைராக்கியம்.

இவைபோன்ற வைராக்கியங்கள் இன்னும் பலவுள. இவைகள் சிறிது நேரம்தான் இருக்கும். அச்சமயம் கழிந்தால் வைராக்கியம் விலகி பழையபடி ஆசையேமுன்னிற்கும். ஆகையால் இத்தகைய வைராக்கியங்களடைவது பல போகவிராகமாகாது. எப்பொழுதும் உலகம் அநித்யமெனவேயெண்ணி அதிலுள்ள அற்ப சுகத்தைக்கண்டு பிரமிக்காமல், அது துக்கத்தையே தருமென்று நிச்சயித்து வெறுத்து பரமாத்மா அல்லது பகவானொருவனே நித்தியமான சுகசொரூபியென்று உள்ளபடியே அவரிடத்து மனப்பற்றுவைத்தலே இகமுத்திரார்த்த பலபோக விராகம். 'விஷயங்களிடத்து தோஷதிருஷ்டியே வைராக்கியத்துக்குஹேது'வாம்.

"மின்னினிலையிலிம் மன்னுயிராக்கைக
ளென்னுமிடத்திறை யுன்னுமினீரே."—திருவாய்மொழி.

"அன்னையின் வயிற்றிடை யநேக துன்பமே
பின்னையும் பிறப்புழிப் பெரிது துன்பமே"

"காலையு மலத்தினாற் கடிது துன்பமே
சாலவும் பசியினாற் றளர்வ ருச்சியின்
மாலையிற் காமமு மலிய வாடுவர்
வேலைக டொறுமிடர் விளையும் விஞ்சியே."—சிவதருமோத்
[தரம்.

"தமர்பிறரற்றூர் சமயமுமற்றூர்
சகவியல்பற்றூர் தமையொழிபற்றூ
ரமர்விடமற்றூ ரறமறமற்றூ
ரறிவயர்வற்றூ ரவரடியாரே."—அஞ்ஞைவதைப்பரணி.

"தவமகந்தீர்த்தஞ்சேவை யருச்சனை தானமாதி
யவமயக்கத்தானீனுள் விலங்குபோலவலத்தாழ்வார்
பவமுறுமிவற்றைவிட்டுப் பரிசுத்தபரமபோகங்
கவர்வறப்பற்றியெல்லாக் காதலுநீங்கிநிற்பாய்"—ஞானவாசிட்டம்.

---

## சமாதிஷட்சம்பத்தி.

இதற்கு ஆறு அங்கங்களுள : அவை—சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம் என்பவையாம். மேற்சொன்ன நித்தியாவஸ்து விவேகம், பலபோகவிராகம், என்னும் இரண்டு சாதனங்களைவிட சமாதிஷட்சம்பத்தியே மேலானது.

### சமதமம்.

சமமாவது அந்தக்கரணத்தை லௌகிக விஷயங்களிற்செல்லாமல் தடுத்தல். தமமாவது புறத்திலுள்ள சுரோத்ராதி தசேந்திரியங்களைத் தடுத்தல். மனதும் இந்திரியங்களும் வெளி விஷயங்களிற் பிரவேசித்து அலையாமல், அவைகளை அகமுகமாய்த் திருப்பி ஆத்மாவையறியும்படிச் செய்யுஞ் சாதனங்கள் சமதமாதிகள் எனப்படும். நாம் நம்மருகிலிருக்கும் வஸ்துக்களைக் காண்கிறோம். அவைகளைக் காண்பது கண் மாத்திரமேயல்ல. கண்ணுக்கும் மூளைக்கும் மத்தியிலேயுள்ள நரம்பின் வழியாய் ஓடிக்கொண்டிருக்கும் இந்திரியம், வஸ்துக்களைக்காண மிக உபயோகமானது. கண்ணென்னும் அவயவம் காணுந்தொழிலுள்ள இந்திரியத்திற்கு ஓர் கருவியாம். அவ்விந்திரிய மின்றேல், ஒருவனுக்கு பல கண்களிருப்பினும் அவன் ஒரு வஸ்துவையும் பார்க்கமுடியாது. கண்ணெனும் கருவியும் கண்ணேந்திரியமுமிருந்தாலும் இவைகளுடன் மனம் கலந்தாலல்லாமல் வஸ்துக்களைக் காணலாகாது. ஆகவே ஒன்றைக் காணவேண்டின், கண்ணும் இந்திரியமும் மனமும் ஆக மூன்றும் வேண்டும். இங்கு அதி முக்கியமாய்க் கவனிக்கவேண்டியது யாதெனின்—மனம் வேறு இந்திரியத்தோடு சேர்ந்து வேறு கருவியின்மூலமாய் வேறு தொழிலிலிறங்கிவிட்டால், கண்ணேந்திரியமும் கண் கருவியும் பயன்படா. ஆதலால் ஒருவிஷயத்தை உணரவேண்டுமானால், அவ்வுணர்ச்சிக்கு கருவி, இந்திரியம் மனம் இம்மூன்றும் அவசியமே. இவ்வுண்மையை விளக்கவே ஓர் ஆங்கிலகவி ‘பூமியில் மனிதனைவிடப் பெரிதொன்றுமில்லை ; மனிதனில் மனதைவிடப் பெரிதொன்றுமில்லை’ என்றார்.

மேற் சொன்னதற்கு நம் ஒவ்வொருவருடைய அநுபவமே திர்த்தாஷ்டாந்தமாகும்: நாமொரு நேசரை ஒருவீதியில் அல்லது சாலையில் சந்திக்கிறோம். அத்தருணம் நம்மனம் வேறுவிஷயத்திற் பிரவேசித்திருப்பதால் நம்மெதிரேவந்த நேசரை, கண்டு

கொள்ளாமலே போய்விடுகிறோம். அந்நேச ரின்னொருசமயம் நம்மைச் சந்திக்கையில் ஆயாஸமாக 'நான் அன்று உங்களைக் கண்டேன். பேசாமலே போய்விட்டீர்கள். நான் என்ன தீமை செய்தேன். என்மேல் உங்கட்கென்ன கோபம்' என்கிறார். அப்போது நாம் திடுக்கிட்டு, 'நீங்கள் சொல்வது நிஜமாயிருக்க லாம். நான் உண்மையிலே உங்களைப் பார்த்திருந்தால் பேசா மற்போயிருப்பேனா. இதென்னசம்பவம்! எப்படியாயினும் நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும்' என்று கேட்டுக்கொள் கிறோம். இந்நிஷ்டூரத்திற்கு ஹேது மனமன்றிவேறல்ல. முன் கண்ணுக்குச் சொன்னபடியே தான் காதுக்கும் சொல்லவேண் டியிருக்கிறது. காது, கேட்கும் கருவியாயிருப்பினும், செவி இந்திரியமும் மனமுங்கூடாமல் இளஞ் சப்தத்தையாவது சங்கீ தத்தையாவது கேட்க முடியாது. சில சமயம் குண்டு சப்தம் கூட, மனம் வேறுவிஷயத்திற்சென்றிருந்தால் கேளாமலேயிருக் கிறோம். துக்கத்தி லமிழ்ந்தியிருக்கும் ஒருவன் முன்னே, கோ யம்புத்தூர் ராகவையர், மஹா வைத்தியநாதையர்போன்ற பெ ரும்பாடகர் பாடினாலும்; பிடில், வீணை; புள்ளாங்குழல், அற்புத மான கிராமபோன் (Gramophone) போன்ற வாத்தியக் கருவி களினின்றும் உருக்கத்தக்க பாடல்கள் கிளம்பினாலும்; அப்பா டல்களின் இனிப்பும் சுகமும் அருமை பெருமையும் உணராதவ னாகியேயிருப்பன். ஸ்திரீபுருஷ சையோகத்தும் மனமே சுகத் துக்குப் பிரதானமாயிருக்கிறது. அது பற்றியே

"ஒருதலையானின்னாது காமம்காப்போல
இருதலையானு மினிது"—என்றார் திருவள்ளுவர்.

இங்ஙனமே பிறவுணர்ச்சிகளுக்கும் பொருத்திக்கொள்க. நாம் வஸ்துக்களைக் காண்கையில் மனம் அவைகள்மேல் தாவுகின்றது. கண்களை மூடிக்கொண்டு அவைகளை நினைக்கை யில் மனம் உள்ளேயே இந்திரியங்களோடு சேர்ந்து தொழில் செய்கின்றது. இந்திரியங்களுதவியில்லாமல் ஓர் எண்ணமும் உண்டாகாது. ஓர் வஸ்துவின் அடையாளமின்றி மனம் அதை நினைக்காது. அவ்வடையாளங்களை மனதுக்குக் கொண்டுவரு வது இந்திரியங்களே யாம். சொப்பனத்தில் கண் மூடப்பட் டிருப்பதனால், கண் ஒன்றையுங் காண்பதில்லை; ஆனாலும், மனிதன் தன் ஜாக்கிரத்தில் கண்ணால்கண்ட வஸ்துக்களின்

அடையாளத்தை இந்திரியங்கள் சொப்பனத்தில் கொண்டுவருகையால், சொப்பனத்தில் அவ்வஸ்துக்களைக்காண்கிருன். சொப்பனமின்றி நித்திரை செய்யும்போது மனமடங்கியிருக்கையால் ஒன்றும் காண்பதில்லை. ஜாக்கிரத்தில் வஸ்துக்களைக்காண கண்ணெனுங்கருவி யுதவுகிறதால் அப்போது கண்ணே முக்கியமெனவறிகிறோம். கண்மூடி நித்திரைசெய்யப்போய் ஸ்வப்நம் காணுங்கால், கண் முக்கியமல்ல இந்திரியமே முக்கியமென அறிகிறோம். ஸ்வப்நம்போய், மனோவியாபாரமும் நீங்கி தூங்குங்கால் ஒருவஸ்துவும் காணுதபடியாலும் நினையாதபடியாலும், இந்திரியம் முக்கியமல்ல. மனந்தான் முக்கியமென்றறிகிறோம். மனம் வெளியேதாவி விஷயங்களைப் பற்றுவதற்கும், உள்ளேயே பலவாறுன எண்ணங்கள் கொள்வதற்கும், இந்திரியங்களே முக்கிய ஹேதுக்களாயிருப்பதால், இந்திரியங்களையே முன் அடக்கிப் பின்னர் மனதை அடக்கவேண்டும். இந்திரிய நிவிர்த்தி சமம் ; மனோநிவிர்த்தி தமம் ; எனக்கொள்க.

"எழுந்தெழுந்து சிறுமிந்திரியப் பாம்புகளை யிதயந்தன்னி [ள
லழுந்துவிவேகத்தடியால் வச்சிரங்கொண் டிந்திரன்வெற்படர்வதள்
விழுந்திடமோ துறவேண்டுஞ் சாந்தியினுற் சமமேவியிடர்தீர்நெஞ்ச
முழுந்துசுகவடிவாந்தற் பதநிலையைப்பெறுமிதுவேமுத்தியென்ன."
[ஞானவாசிட்டம்.

## உபரதி.

உபரதியென்பது வெறுத்துத் தள்ளல் என்பதுபொருளாம். விகிதகர்மங்களை விவேகத்தால் விடுதல் உபரதியென்பது சிலர் அபிப்பிராயம். கர்மங்களில், கர்திருத்துவாபிமானம், பலாபேக்ஷையின்றி புண்ணியமானவைகளையே பகவத் பிரீதியாகச் செய்தலே உபரதியென்பது தகுதி. பலனைக்கோராமல் கர்மஞ் செய்வது சாத்தியமாகுமா ? ஓர் கர்மமும் செய்யாதிருத்தலே நல்லது, என்று ஒருவன் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்தாலும், அவனது பூர்வ கர்மானுசாரமாக விருத்தியடைந்த ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களும் இவனறியாமலே துஷ்கர்மங்களி விழுத்துச்செல்லும். சத்கர்மங்கள் பலனைக்கோராது செய்ய சாத்தியப்படாத ஒருவனுக்கு எக்கருமமுஞ் செய்யாதிருக்கமுடியுமா ? முடியாது. உண்மையென்னவெனில்,— கர்மங்களின் பலனில் பற்றுவைத்துச்செய்தால் அப்பலனை யநுபவிக்க ஜன்மங்களெடுக்கவேண்டிவரும். ஆசையேபிறவிக்கு

வித்தாகலின். ஜன்மங்களெடுத்தலே துக்கத்துக்கு ஹேது. மனிதன் கருமங்கள் செய்யாதிருக்க சாத்தியமாகாதாதலால், கருமங்கள் செய்யவும்வேண்டும் ; அவைகள் ஜன்மங்களைப் பின்னும் உண்டாக்காதவையா யிருக்கவும் வேண்டும். இதற்கு உபாயமென்னவெனில்,—தருமசாஸ்திரங்களிற் சொல்லியிருக்கும் சத்கருமங்களை, பலனில் சற்றேனும் ஆசைவையாது ஈஸ்வரார்ப்பணஞ் செய்தலேயாம். "பிறப்பு, இறப்பு என்ற சக்கிரவட்டம் ஆத்மாவுக்கு எப்பொழுதும் நடைபெறக்கூடியதல்ல: பற்றினால் வருவது பிறப்பு. பற்றற்றால் உறுவது மோக்ஷம். ஒருவன் தன் உண்மை யறியாமையால் பிரிவுத்துன்பமும், அதையறிந்தபின் விடும் பெறுகிறான்."—சநாதநதர்மம்.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர் உறுவ தறிக."—மணிமேகலை.

திதிக்ஷை.

திதிக்ஷை என்பது சதேக நிஷ்டையெனப் பொருளாகும். மேற்சொன்ன உபரதியென்னும் சாதனம் சாதித்தவனுக்கு திதிக்ஷை சுலபமாக முடியும். சுக துக்கங்களைச் சகித்தலே திதிக்ஷையெனப்படும். ஒருவன் தனது பிராரப்த கர்மபலனாக எது வரினும், அதை யனுபவித்தே தீரவேண்டுமென்று தன் மனதிற் றிடம்பண்ணிக்கொண்டு தான் எதையிழந்தாலும் அதற்காக வாட்டமடையாமல், தனக்கு எச்சுகம்வரிலும் அதற்காக மகிழ்ச்சியுங் கொள்ளாமல் சம சித்தத்துடனிருத்தலே திதிக்ஷையாகும். சுகதுக்கங்கள் தேகத்தாலும் மனதாலும் அநுபவிக்கப்பட்டவைகளாதலின் நாமாகிய ஆத்மாவைச்சாரா. சுகதுக்கங்கள் நமக்கல்லவென்றெண்ணி அவைகள் நேரிடுங்கால், அவைகளில் தான் பந்தப்படாமல் தான் சாக்ஷியாய் தனியே நின்று பார்க்கவேண்டும். இஞ்ஞானம் வருமளவும், லோகத்தில் சீதோஷ்ண முதலிவைகளாலும் பிணியாதி ஏதுக்களாலும் வரும் சுக துக்கங்களைப் பொறுத்தலே திதிக்ஷையாம்.

"வையினும் வாழ்த்தினு மலர்கொ டேத்தினும்
வெய்யவ ராவிடை வீழ நூக்கினு
மெய்யினு மெறியினு மியாது செய்யினு
நைவொடு மகிழ்வில ஞானி சீலமே."

" சாயேறி வீழ்ந்தென் னடாத்துகி லென் ஞானிக்குப்
பேயாஞ் சகம்பழித்தென் பேணுகிலென்—ரேயார்
பெருமை சிறுமையிலைப் பின்னு முன்னுமில்லை
வரைவற்று வேண்டுவ செய்வார் "—ஒழிவிலொடுக்கம்.

சிரத்தை.

உபநிஷத்துக்கள் முதலிய ஞானசாஸ்திரங்களில் மனதை நிறுத்தி, அவைகளில் நம்பிக்கையும் சற்குருவிடத்து நிஜபக்தியும் விசுவாசமும் வைப்பது சிரத்தை எனப்படும். எவ்விஷயத்திலும் சிரத்தையில்லாவிடில் எண்ணின எண்ணம் நிறைவேறாதென்பது எல்லோர்க்கும் தெரியும். ஆதலால் ஒருவன் உலக விஷய சுகங்களில் எவ்வளவு ஆவல்வைப்பனோ அவ்வளவு ஆவலும் அன்புங்கூட, யோகாநுபவமுள்ள தன் ஞானாசிரியரிடத்தும் சாஸ்திரங்களிடத்தும் வைத்தால், தன் கோரிக்கை தடையின்றி சித்திபெறும். முயற்சி திருவினையாக்கும் என்றபடி.

சமாதானம்.

உபாதியொழித்து வுள்ளொளிகருதல், சமாதானமாம். சிரவண மனன நிதித்தியாசங்களிற் பயின்று பக்தி விசுவாசத்துடனடைந்த குரு உபதேசித்த லக்ஷியத்தினின்றும் பிறழாது, வேதாந்தார்த்தத்தையே மனதில் பெரும் நியமமாக நிறுத்துவது சமாதானமென்ப. சமம் தமம் உபரதி திதிக்ஷை சிரத்தை சமாதானம்—(சமாதிஷட்சம்பத்தி) என்னு மிவ்வாறும் சொன்னோம். இனி முமுக்ஷுத்வத்தைப் பற்றிப் பேசுவாம்.

" பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினெங் கடிகைபூசிக்க
ராசசூய மிலக்கநிக ரிவ்வாறொருநா ளருச்சிக்கி
ஞசிலாத பரவொளியி லமரலாகு மிதுதானே
யேசில்பரம யோகமிது தானே பரமகிரியையுமே"—ஞானவாசிட்டம்.

முமுக்ஷுத்வம்.

உலகபந்தத்தினின்றும், ஜனன மரணதுக்கத்தினின்றும் நீங்குவ தெப்படியென்னும் விசாரத்திலேயே மனம் உறுதியடைந்து வேறு விஷயங்களிற் செல்லாதிருப்பதே முமுக்ஷுத்வம் எனப்படும். ஓர் கிரகம் தீப்பற்றியெரியும்போது அதிலகப்பட்ட மனுஷன் தன் புத்திர களத்திர மித்திராதிக ளெப்படிப் போனார்களோ வென்ற விசாரத்துடனே, அக்கினியில் தபிக்கப்பட்டவனாய், அவர்களை விட்டுப்பிரிந்து தண்ணீரில் பிரவேசித்ததுபோலும்; நித்திய தரித்திரனை ராஜ சிம்மாசனத்தி லிருத்தி

யதுபோலும்; குருடனுக்குக் கண்தெரிந்தாற்போலும்; தீரா வியாதியஸ்தனுக்கு வியாதி தீர்ந்தாற்போலும்; நீண்ட சிறையிருந்தானுக்கு சிறை நீங்கினாற்போலும்; துறைதப்பி சுழித்தலைப்பட்டுக் கவிழுங் கப்பல் கரைசேர்ந்தாற்போலும்; பிறவிக்கடலிலழுந்தி சமுசாரதாபாக்கினியால் தபிக்கப்பட்டபுருஷன், இப்பவசாகரத்தினின்றும் நீங்கி சமுசாரபந்தத்தைப் போக்கத்தக்க சற்குரு எங்கிருக்கிறாரோ, இதற்கு என்ன சாதனம் தேவையோவென்று தாபங்கொண்டு அலைந்துதேடுகிற சித்தவிருத்திக்குத்தான் முமூக்ஷுத்வம் என்றுபேர். இது நான்காவது சாதனமாம். இந்நான்கு சாதனங்களும் யாரிடத்துண்டோ அவர்களே ஞானோபதேசம் பெறற்கருகர்கள். தன்னையறிவது, அதாவது பிரமஞானமடைவது எளிதல்லவாதலால், மேற்சொன்ன நான்குசாதனங்களும் கைகூடச்செய்து, அவசரநீக்கிப் பொறுமைபெற்று, தக்க தேசிகனையடுத்து ஆத்மஞானம் பெறமுயல்வதே யாவற்றினும் பிரதானகாரியம்.

"கருகியகங்குலின் மறையாக்கதிர்க்கு மட்காக்காண்பரிய பொருளெல்லாங் காணுங்கண்ணாற், றெருளுறநானு ருலகம்வந்தவாறென் செறிபிறவியாரதெனுந்திகழ்விசார, மிருளுறுமாபத்தினுக்கு மருந்தாமப்பா லேற்றமுள சந்தோஷமேதென்றோதில், வருபொருளி லின்பமறத்துய்த்து வாராவன்பொருளிற் றுன்பமிலா மகிழ்ச்சிதானே"— [ஞானவாசிட்டம்.

---

## இருவிதத் தியானங்கள்.

தியானம் இருவகைப்படும். அவை நிர்க்குணத்தியானம், சகுணத்தியானங்களாம். நிர்க்குணத்தியானமாவது உபநிஷத்வாக்கியப்படி நிர்க்குணியான பிரம்மத்தைத் தியானிப்பது. சகுணத்தியானமாவது பிரம விஷ்ணு ருத்திராதிகளென்னும் திரிமூர்த்திகளையும் நாமரூபமுள்ள ஈஸ்வரரையுந்தியானிப்பது. பிரமமென்பது நிர்விசேஷ சின்மாத்திரம், நிருபாதிகம், அகண்டாநந்தரூபம், அசங்கம், நித்திய சுத்த புத்த முக்தஸ்வபாவமுடையதாம். அத்தன்மைத்தாய பிரஹ்மமே, திரிகுணாத்மகமாகிய அநாதி மாயோபாதியால் சகுணமாகிய சபளபிரமமாய், திரிமூர்த்தியாத்மகனும், சர்வசக்தனுமாகிய பரமேஸ்வரனெனப்பெறும். எதனிடத்து இவ்வகண்ட பிரபஞ்சமுண்டாகி, எதனிடத்து சர்வ ஜீவர்களும் தங்கி, எதனிடத்து எல்லாம் பின்பு

லபிக்கின்றனவோ அதுதான் பிரஹ்மம். சகலத்துக்கும் காரணமாயும், நித்திய நிர்க்குண நிரஞ்சன நிராமய நிஷ்களமாயும், மனோவாக்குக் கெட்டாததாயும், எல்லாமாயும் உள்ளது எதுவோ அதுதான் பிரஹ்மம். இது பிரஹ்மமல்ல, இது பிரஹ்மமாகாது, என்று விசாரத்தாலும் மெய்யறிவாலும் ஞானிகள் நியதிகளைந்தபின் நின்றது எதுவோ அதுதான் பிரஹ்மம்.

"அரியுமல்ல வயனுமல்ல வரனுமல்ல வப்புறம்
கருமைசெம்மை வெண்மையுங் கடந்துநின்ற காரணம்
பெரியதல்ல சிறியதல்ல பெண்ணுமாணு மல்லவே
துரியமுங் கடந்துநின்ற தூரதூர தூரமே"—சிவவாக்கியம்.

"பூதங்களல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ளமதியின்
பேதங்களல்ல விவையன்றிநின்ற பிறிதல்லவென்று பெருநூல்
வேதங்கிடந்து தமோறும் வஞ்சவெளி..."—திருவிளையாடல்.

அவ்வத்வைத பிரஹ்மம் ஒன்றே சத்தியமானது. அகண்டமாய், பரிபூரணமாய், சச்சிதானந்த மயமாயுள்ள பிரம்மத்தினிடத்து மூலப்பிரகிருதியெனப்படும் ஓர் சக்தியுண்டாயிற்று. அப்பிரகிருதி, சத்துவகுணம் ராஜஸகுணம் தாமஸகுணம் என்னும் முக்குணங்களுடனே யுள்ளது. அப்பிரகுருதியின் சத்துவகுணமே மாயை யெனப்படுவது. அம்மாயையிற் பிரதிபிம்பிக்கும் பிரம்மத்துக்குத்தான் ஈஸ்வரன் என்று பெயர். அவ்வீஸ்வரன்தான் இவ்வகண்ட பிரபஞ்சத்தை ஆக்கி, ரக்ஷித்து அழிப்பவர். மோக்ஷம்தர அதிகாரியும் அவரேதான். அவரைப் பக்தர்கள் மோக்ஷமடையும்பொருட்டு எளிதான சகுணத்தியானஞ் செய்கிறார்கள். அவரை நிர்க்குணமாய்த் தியானிப்பது யோகிகளுக்கும் ஞானிகளுக்குமே எளிது; மற்றவர்க்கு மிகக் கடினமே. ஞானிகள் பிரம்மத்தை சகுணமாகவும் நிர்க்குணமாகவும் தியானிப்பதுண்டு. சுகரிஷிமுதலியோர் மஹாஞானிகளாயிருந்து பிரம்மத்தை இவ்விருவகையான தியானம்பண்ணி முக்தியடைந்தார்கள். ஜனகமஹாராஜர் கர்மயோகியாயிருந்து, அரசுபுரிந்து ஞானம்பெற்று மோக்ஷமடைந்தார். ஞானிகள் லோகோபகாரார்த்தமாக பிரம்மத்தைச் சகுணமாகவே தியானித்து உலகத்துக்கு நல்வழிகாட்டுவோர். அவர்கள் தங்கள் ஆத்மார்த்தமாக பிரம்மத்தை நிர்க்குணமாகத் தியானிப்பவர். சகுணத்தியானமேலீட்டின் பயன், நிரம்பிய பக்தியாம். எம்மதத்தினும் நிஜமான பக்தர்கள் பல அற்புதங்கள் நடத்திய

தாக நாம் பல பக்திநூல்களினும் படிக்கிறோம். இதுவன்றியில் ஈஸ்வரன் தனது உத்தம பக்தர்களின்பொருட்டே ஆங்காங்கு அவர்கள் தன்னைத் துதித்தவண்ணம் பிரசன்னமாகி அநேக அற்புதங்கள் நடாத்தி தன் தெய்வத்தன்மை நிலைநாட்டியதாகவும் மேற்சொன்ன நூல்களிற் காண்கிறோம்.

"யாதொருதெய்வங் கொண்டீரத் தெய்வமாகியங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்"—சிவஞானசித்தியார்.

கடவுள் அல்லது பரப்பிரஹ்மம், மெய்ப்பக்தர் தியானித்த வடிவோடுந்தோன்றி, அவரவ ரெண்ணியபடி எய்துவித்தும், தேகாந்தத்தில் முத்தியுமளிப்பவரென்பது ஒவ்வொரு மதத்தின் துணிபாம். இவ்வுண்மையை விளக்கவே பட்டணத்துப் பிள்ளையாரும்

"அன்றென்று மாமென்று மாறுசமயங்க
ளொன்றேடொன் றொவ்வா துரைத்தாலு—மென்று
மொருதனையே நோக்குவா ருள்ளத்திருக்கு
மருதனையே நோக்க வரும்"—என உரைத்தார்.

பக்தியாலேனும், ஞானத்தாலேனும் கடவுளைக் காண்பது லேசான காரியமல்ல. பக்திமான்களில் அநேகரும் யோகிகளிலும் அநேகரும் உள்ளபடியே தங்கள் பற்றறுமையால் கடவுளைச் சிந்தித்துச் சிந்தித்து, தங்கள் எண்ணங்கள் கைகூடாமலே, மனநொந்து, நொந்து, பக்திகலைந்து, தவங்கெட்டு உயிர்துறந்தார்கள். இது பொய்யல்ல. எண்ணிறந்த பக்தர்கள் கடவுளைக் காணாமலே மாண்டார்கள். எண்ணிறந்த தபசிகளும் ஆசையறாமலே, மனோ இருதய சுத்தமடையாமலே தேகத்தையொழித்தார்கள். இது நிஜமாயிருக்க, மூடர்களையும் ஏழைகளையும் மயக்கு நிமித்தம் காணற்கரிய கடவுளைக் கண்டேன் கண்டேன் என்றுசொல்லித் திரிந்து வீண்காலங் கழிப்பதைவிட, பரமபக்தராய ஸ்ரீ மாணிக்கவாசகர் கூறியபடி 'ஒருத்தனே உன்னையோலமிட்டலறி உலகெலாந் தேடியுங் காணேன்' என்று உண்மை பேசி உலகத்துலாவல் எவ்வளவு நற்காரியம்? பற்றற்றோர்க்குப் பலனுண்டு; பரகதியுண்டு. உள்ளதுபேசில் மெய்யது காணும். நிஜமுளோர்க்கு நித்தியமுண்டு; நிர்வாணங்கிட்டும். இது திண்ணம்.

"உணர்ந்துணர்ந்திழிந்தகன் றுயர்ந்துருவியந்தவிந்நிலைமை
உணர்ந்துணர்ந்துணரினு மிறைநிலையுணர்வரிதுயிர்காள்

உணர்ந்துணர்ந்துரைத்துரைத் தரியயனரனென்னுமிவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்டதொன்
[றே ''—திருவாய்மொழி.

---

## விக்கிரகாராதனை.

நமது இந்துதேசத்தில் விக்கிரகாராதனை தொன்று தொட்டு வழங்கிவருவதாய்க் காணவில்லை. இவ்வாராதனைக்கு வேதோபநிஷத்துகளின் பிரமாணமுமில்லை. வேதோபநிஷத்துகள் நன்குணர்ந்த விவேகிகளில் இவ்வாராதனையை ஆமோதிப்பாரில்லை. வங்காளநாட்டில் வேதசமாஜம் ஸ்தாபித்த ராமோஹனராயர், பிரமத்தை ஆத்மசொரூபியாய்த் தியானிக்கவேண்டுமே யல்லது ஜடசொரூபியாய்த் தியானித்தல் கூடாதெனவே கண்டிப்பாய் போதியவரையில் எழுதியிருக்கிறார். அவர் பின் தோன்றிய பிரம சமாஜத்தார் அவர் கூறியபடியே இன்றும் பிரமத்தை நிர்க்குணியாகவே தியானித்துவருகிறார்கள். கிறிஸ்துவ வேதத்திலும் 'உன் கையாற்செய்த உருவை நீ கும்பிடாதே' எனக் கட்டளை பிறந்திருக்கிறது. கத்தோலிக்கு கிறிஸ்துவர் தவிர ஏனையகிறிஸ்து மதக்கக்ஷிகாரரனைவரும் கடவுளைநிர்க்குணராகவே துதிக்கிறார்கள். மஹம்மது மதஸ்தரும் மஹம்மது காலந்தொட்டு கடவுளை அரூபியாகவே தொழுதுவருகிறார்கள். இவ்வாறிருக்க நமது ஹிந்துக்கள் மட்டும் விக்கிரகாராதனை செய்துவர எப்படி நேர்ந்ததெனின், வேதோபநிஷத்துகள் முற்றும்கற்று, மூவாயிரம் பழைய சமஸ்கிருதநூல்கள் படித்தவரெனப் பேர்பெற்று,—பஞ்சாப் தேசத்தில் ஆரியசமாஜம் ஸ்தாபித்த தயானந்த சரஸ்வதி என்பார், விக்கிரகாராதனை ஜைனரிடமிருந்தே ஸ்பஷ்டமாக உதித்ததென்றும்; அது அவர்கள் மடமையினால் உண்டானதென்றும்; முற்றத்துறந்த முனிவர் தியானத்திலமிழ்ந்திருப்பதுபோல, ஜைனர்கள் தங்கள் விக்கிரகங்களை நிர்வாணியாக்கித்தொழுவதை இந்துக்கள் நோக்கி, அதற்குமாறாக தங்கள் விக்கிரகங்கட்கு ஆடையாபரணங்களிட்டு அலங்கரித்து கீதவாத்தியங்களுடனே சகல போகங்களுஞ்சூழ அவைகளைத் தொழுதுவருகிறார்களென்றும், 'சத்தியார்த்த தீபிகை' என்னும் தனது நூலில் மிகு தெளிவாய்க்கூறுகிறார். தவிர, விக்கிரகாராதனை ஹிந்து மதஸ்தருக்கு தகாதசெய்கையென்றும் அடாத காரியமென்றும் வற்புறுத்திப் பேசுகிறார். அவர் சமா

ஜத்தைச்சேர்ந்தவர் யாவரும் விக்கிரகாராதனை செய்வதேயில்லை யென்றும், புலால் புசிப்பதேயில்லை யென்றும் பிரதிக்கினை பண்ணியே சேர்ந்திருக்கிறார்கள். இச்சங்கம் மிகு நற்சங்கமென்றே கொள்ளவேண்டும். இப் பெரும்பண்டிதர் ஹிந்திபாஷையில் அநேக நூல்களியற்றி அவைகளில் தனது கொள்கைகளை வெளியிட்டிருக்கிறார். ஆயின், அந்நூல்கள் தென்னிந்தியாவில் வழங்கும் பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுப் பரவிவராமை வியசனிக்கத் தக்கதேயாம்.

"நட்டகல்லைத்தெய்வமென்று நாலுபுஷ்பம்சாற்றுதீர்
சுற்றிவந்துமுணுமுணென்று சொல்லுமந்த்ரமேதடா
நட்டகல்லுபேசுமோ நாதனுள்ளிருக்குமோ
சுட்டசட்டிசட்டுவங் கறிச்சுவையறியுமோ"—சிவவாக்கியம்.

விக்கிரகாராதனை வேதோபநிஷத்துகளின் சம்மதம் பெறாததென அறவேயொழித்தபின், அதைச்சார்ந்த—மலமற்ற கடவுளுக்கு மணம் நடாத்தல்; தூயவுடம்பினனான கடவுளுக்கு தலைநோய் பற்றுபோடல்; சர்வ வல்லபமுள்ள கடவுளுக்கு விடையாற்றி யுற்சவம்பண்ணல் முதலான ஆபாசக்கிரியைகளைப் பற்றி ஈங்கெழுதல் அநாவசியமென விடுத்தாம்.

---

## க்ஷேத்திரதரிசனம்.

இப்பூவுலகில் எண்ணிறந்த கோடி மனிதர்கள் ஜீவித்திருக்கிறார்கள். அவர் வசிக்கும் நாடுகளில் ஆங்காங்குள்ள ஆசார ஒழுக்கங்கட்கிணங்கி நடந்துகொண்டும், ஆங்காங்குள்ள மதங்களைத் தழுவிக்கொண்டும் காலங்கழித்துவருகிறார்கள். மேலும் தாங்களமர்ந்திருக்கு மிடங்களினின்றே, கடவுளுக்கு நிஜமான பக்தி செலுத்திவரின் ஆங்கே தங்களுக்கு நற்கதிகிடைக்குமென்றும் நம்பியிருக்கிறார்கள். இப்படியிருக்க நமது சைவசமயிகள், லோகத்தில் அந்தந்த மதஸ்தருக்குள்ள முக்கிய ஸ்தலங்கள் க்ஷேத்திரங்களெல்லாம் நீக்கி, திருவாரூரிற் பிறக்கமுத்தி, தில்லையை நினைக்கமுத்தி, காசியில் இறக்கமுத்தி யென்பதை யூகிக்க ஓரிடத்திற் பிறப்பதாலும், இன்னோரிடத்தை நினைப்பதாலும், பிறிதோரிடத்திலிறப்பதாலும் லேசாகவே முக்திகிடைப்பதாயின், தவமேன், யோகமேன், ஞானமேன் என்னும் ஞாயமான ஆக்ஷேபனைகள் ஜனிக்கின்றன.

இது நிற்க, மூடவைராக்கியமுதிர்ந்த முரட்டு மத்துவமதஸ்தர்,—'கார்நிறத்த கண்டத்தான் ரோதனஞ்செய் காரணத்தால் ருத்ரன்' எனப் பரமசிவனுக்குப் பெயர்வந்ததெனவும்; வைஷ்ம்ய வைரங்கொண்ட வைணவமதாசாரியர், விஷ்ணுவின் 'செய்யதாளின் மலரரான் சிரத்திலான தில்லையோ' ஆதலான் 'அரங்கனன்றி வேறுதெய்வ மில்லையே' எனவும்; 'பாதியாயழுகிய கால்கையரேனும் பழிதொழிலு மிழிகுலமும் படைத்தாரேனும், ஆதியாயரவணையா யென்பராகில் அவரன்றோ யாம் வணங்குமடிகளாவார்' எனவும்; இதற்கு எதிராக சைவமதாசாரியர் 'நள்ளேனினதடியாரொடல்லா நரகம்புகினும்' எனவும்; 'அங்கமெலாம் புழுத்தழுகுங் கையரேனும், ஆவுரித்துத் தின்றிடுமாபுலையரேனும், கங்கைவார் சடைக்கரந்தோற் கன்பராகில் அவரன்றோ யாம்வணங்கு மடிகளாவார்' எனவும்; 'ஏறுகட்டிய கொட்டிலரங்கமே...' எனப் புலவர் பெருமான் காளமேகமும்; அதற்கு மாருகப் 'பொன்னரங்கம் போற்றுதார் புலையர்தாமே' என ஓர் அகந்தைகொண்ட ஆழ்வாரும்—கூறுவது என்ன கீழ்மை! என்ன அவலக்ஷணம்! என்னகுணக்கேடு! இவ்வண்ணமாக குருட்டுப் பக்தியாலும் முஷ்கரத்தாலும் சைவரும் வைணவரும் மார்பிடி மயிர்பிடி சண்டை போடுவதாலல்லோ ஆபாச சித்தாந்தங்கொண்ட கிறிஸ்தவர் நம்மை (ஹிந்துக்கள்) எல்லோரையும் ஒருங்கே அஞ்ஞானிகள், அஞ்ஞானிகள் என அறைகிறார்கள். ஆரியசோதரரே யோசியுமின்! யோசியுமின்! நம்மவரில் மூடபக்தி முதிர முதிர, பொதுவாக காசிராமேஸ்வரம் பாராத ஜன்மம் வீணென்றும்; சைவர்கள் பஞ்சபூதங்கட்கான ஸ்தலங்களைத் தரிசித்தால் மாத்திரமே சிவபதமுண்டென்றும்; அவ்வாறே வைணவர்கள் தங்களபிமானம்பெற்ற ஸ்தலங்களைத் தரிசித்தாலே விஷ்ணுபதங் கிடைக்குமென்றும் சொல்லுவதாலே என்னபயனோ அறியோம்!

> "காசிகாசியென்றுநீர் கால்கடுக்கவோடுநீர்
> காசியோடியாடினும் கறுப்புவெள்ளையாகுமோ"

என்றார் சிவவாக்கியர். 'ஜங்காதம்போனாலும் தன்பாவம் தன்னோடே' எனவும்; 'காசிக்குப்போயும் கர்மம்தொலையவில்லையே' யெனவும்; நமது பெண்டுகள்வாக்கிலும் அமைந்து கிடக்கும் உண்மையைச் சிந்தித்தால் போதாதா?

" தேரைத் திருநாளைச் சேவிப்பார் தம்மைவிட்டங்
காரைத் தொழப்போரா ரையகோ—தேரிடையே
பார்க்கின்ற தெய்வம் பரிபூரண மலவோ
யார்க்குந் தெரியாததோ "—சொருபசாரம்.

" தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்களிலத் தெய்வ முண்டோ, பாகமறப் பணியற வடிமுடிவற் றுளவுணர்வே பரம போத, மாகவினு லதுதெய்வ மருச்சித்தற் குரித்தாகு மறிவிலாத, மூகருக்கு வடிவுமுத லருச்சனையே யியல்பென்று மொழியுமன்றே"
—ஞானவாசிட்டம்.

சமாஸம்.

உடன்கட்டையேறல், செடல்குத்தியாடல் முதலிய கொடிய பழக்கங்களும், சாங்கியங்களும் Lord William Bentinck என்னும் கவர்னர் ஜெனரல் காலத்தும் (1828—1835) அவர் காலத்துக்குப் பின்னும் ஒழிந்துபோயின. ஆயினும் நமது காருண்ய துரைத்தனத்தார் கவனத்துக்கெட்டாத அமானுஷீகமான சாங்கியம்முத்தின வைஷ்ணவரிடத்தும் மத்துவரிடத்தும்ஒன்றுண்டு. அதாவது ஸமாஸம். ஸமாஸமெனின் வைணவதீக்ஷைபெற விரும்பும் ஒருவன் தோள்களில், பருத்துக் கொழுத்திருக்கும் பல வைணவப்பிராமணர்கள்கூடி, விஷ்ணுவின் கை ஆயுதங்களாகிய சங்கு சக்கரங்கள்போன்று செம்பாற்செய்த உருவங்களைப் பழுக்கப் பழுக்கக் காய்ச்சி, அவன் பதைக்கப்பதைக்க, அலற அலற முத்திரையிடுவதாம். இவ்வழியா முத்திரையால் பரமபதம் ஐயமின்றிக் கிடைக்குமென்பது மூடவைணவ நம்பிக்கை.

" எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான்
யாதினும் அரிதரிது காண்
இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
யாதுவருமோ வறிகிலேன் "

என்றார் கருணையிற்சிறந்த தாயுமானவர். நமது தேசத்தில் மாடு முதலான மிருகங்கட்கு வலிகண்டால் சூடுபோடுவதுவழக்கம், சிகிச்சை. அப்படியிருக்க அரிதினு மரிதாகிய மானிடதேகம்பெற்று ஒரு வியாதியுமில்லாத ஒருவனை வலிகண்டமாடாகப் பாவித்து, அவன் தோள்களைச் சுடச்சுடச்சூடுவது என்ன பாவக்கிரியை! என்ன குரூரசெய்கை! இத்துர்ச்சடங்கு, இக்கொடியகர்மம் எக்காலத்தொழியுமோ அக்காலந்தான் நமது நாடு நன்னுகரிக மடையும். இது திண்ணம், திண்ணம்.

## பௌத்தமதம்.

உலகத்திலுள்ள எல்லாமதங்களினும் விசேஷமாய் எக்கண்டத்தும் பரவியிருப்பது புத்தமதமேயாம். அவ்வுத்தமமதத்தின் கொள்கைகளும் அதை ஸ்தாபித்த சாக்கியபுத்த கௌதமனார் மஹிமையும் ஈங்கு ஒருவாறு சுருக்கிச்சொல்வோம்: "இக்கௌதமனார் கங்கைக்கு வடக்கே ரோகணிநதி தீரத்திலே கபிலவாஸ்து என்னு நகரத்திலே சுத்தோனன் என்னு மரசனுக்கு மாயாதேவி வயிற்றிலே புத்திரராக அவதரித்தவர். புத்தர் பிள்ளைத்திருநாமம் சித்தார்த்தனர். அவர் கௌதமகோத்திரத்திலே சாக்கியர் குடியிலே பிறந்தமையால் கௌதமரென்றும் சாக்கியரென்றும் இருவேறு பெயர்கொண்டனர். புத்தர் என்னும் பெயர் பின்னர்ப்பெற்ற ஆஸ்ரமப்பெயர். அவர் இயல்பிலே துறவுடையராதலின் அவரை விவாஹாதி போகங்கள் பிணிக்கவில்லை. அவர் யௌவனத்திற்றானே உலகப்பற்று யாவும் முற்றத்துறந்து 'ஆன்மாக்கள் பிறவிப் பெருங்கடலாகிய துக்கசாகரத்தைக் கடந்துய்யும் வழி யாதென்றுநாடி யுணரக்கடவேன்' என்றுகூறித் துணிந்து, தமது அரமனையை விட்டகன்று காட்டகஞ்சென்று யோகஞ் சாதிப்பராயினர். யோகசித்தி யடைந்த பின்னர் அவர் தேசங்கடோறுஞ்சென்று, தமது கொள்கைகளை யெடுத்துப் பிரசிங்கித்துவந்தார். அவரைப் பல்லாயிரவர் ஞானசிரியராகக் கொண்டார்கள். அவர்க்கு அனேக அரசரும் சிஷரானர்கள். அவராலும் ஏனைய சிஷர்களாலும் அவர்மதம் உலகெங்கும் வியாபிப்பதாயிற்று. கடவுள் அவாங்மனோகோசரமாதலின் அவரை இம்மானுஷ நிலையிற்கண்டு தெளிவதுகூடாதென்றும், புத்தநிலையையடைய முயல்வதே முத்தியுபாயமென்றும் அவாவறுத்து, உலகம் கணந்தோறும், விகாரப்பட்டுத் தோற்றக் கேடுகளுக்கிடனய் நிற்றலின் பொய்யென்றுணர்ந்து, ஆன்மதரிசனஞ்செய்த வழியன்றி அங்நிலை சித்தியாதென்றுங் கூறுவது அவர் மதவுள்ளுறை. உயிர்களிடத்து அன்பும், ஞானமுமே அவர் மதத்துக்கு ஆதாரபீடமாம். அவர் கூறிய அறநெறிகள் அதியற்புதமானவை. அவரது பிரதம சிஷர் ஆநந்தர். அவர்காலத்தரசர் விம்பிசாரர், அஜாதசத்துரு முதலியோர். அம்மஹாத்மா அடைந்தபோது அவர்க்கு வயசு எண்பது."—அபிதானகோசம்.

---

பன்மதங்கள்.

இப்புத்தகத்து முற்பாகத்தில் விவரமாகக்கூறியுள்ள ஷண் மதங்கள் (ஷட்தரிசனங்கள்)—காபிலம் கௌதமம் காணுகம் மீமாம்சம் பாதஞ்சலம் வேதாந்தம்—இவையன்றி வேறு ஷண் மதங்களுளவெனவும் சொல்வதுண்டு. அவை—சாங்கரம் பாஸ்கரம் யாதவம் பாட்டம் பிராபாகரம் வைஷ்ணவம் என்பவையாம். இன்னும் வேறுமதங்களுமுண்டு. அவையாவன: சத்தப் பிரமவாதிமதம் கிரீடாப் பிரமவாதிமதம் பாஞ்சராத்திரமதம் பாசுபதமதம் மாவிரதமதம் காபாலிகமதம் அநேகேஸ்வரவாதி மதம் சாக்தமதம் வைரவமதம் ஆருகதமதம் (ஜைனமதம்) காணுபதமதம் கௌமாரமதம், சிவசமவாதிமதம் அச்சுமரூவாதிமதம் லோகாயுதமதம் சௌரம்தம் சாந்திரமதம் நவக்கிரகமதம் பஞ்சபூதாத்மவாதிமதம் இந்திரியாத்மவாதிமதம் அந்தக் கரணுத்மவாதிமதம் பிராணுக்மவாதிமதம் சூன்யவாதிமதம் * என்பனவாம். இவற்றுள் சிவசமவாதிமதம் அதிசயாக்கிரமவாதிமதமாயிருத்தலின் இதனை அறிவிலிகள் மதமென்ருர் ஆறுமுகநாவலர் மாணவரொருவர்.‡

---

## வேதாந்த மதங்கள்: துவைதம்.

மேற்காட்டியபடி நமது ஆரியதேசத்தில் மதங்கள் பலவாயினும் தத்துவநிர்ணய நிமித்தம்நோக்க சிறப்பான கொள்கைளுள்ள மதங்கள் மூன்றே என ஏற்படும். இம்மூவகை மதங்களாவன: துவைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என்பனவாம். துவைதமாவது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறென்னுங்கொள்கை. அத்வைதமாவது அவ்விரண்டும் ஒன்றென்னுங் கொள்கை. விசிஷ்டாத்வைதமாவது அவ்விரண்டும் சொரூப பேதமுளவாயினும் பிரியாமலிருப்பதனல் ஒன்றேயென்னுங் கொள்கை. துவைதம் எனில் இரண்டாயிருத்தல்,—அதாவது

---

* இம்மதங்கள் அதி முக்கியமான மதங்களல்லனவா யிருப்பதுடன் இவைகளின் விபரங்களை யெழுதப்புகின் இப்புத்தக மிடந்தராதாதலின் எழுதாதுவிடுத்தாம். அவையறிய விரும்புவோர், காலஞ்சென்ற—இயற்றமிழாசிரியர் விசாகப்பெருமாளையர் எழுதிய 'சமயத் தொகுதி' என்னும் சிறு புத்தகத்திற் காணலாம்.

‡ போலியருட்பா மறுப்பு.

பேதமுளதாயிருத்தல் என்பது பொருள். துவைதம் அல்லாதது அத்துவைதம்,—பேதமிலது, அபேதமென்பதாம். விசிஷ்டம் எனின் கூடியிருக்கை: அதன் அபேதம் விசிஷ்டாத்துவைதம். துவைத சித்தாந்தப் பிரவர்த்தகர் மத்துவாசாரியார். இவர் கனராஜில்லா வென்னும் கன்னடநாட்டில் உடுபி எனும் ஊரில் சாலிவாகன வருஷம் 1120-ல், அதாவது இப்போதைக்கு 720-வருஷங்கட்குமுன் ஜனித்தவர். இவரது சிஷ்ய பரம்பரையார் மாத்துவர்.

இம்மத்து வாசாரியார் பகவத்கீதை பிரமசூத்திரங்கள் முதலியவைகட்குச் செய்த பாஷியங்களின் துவைத சித்தாந்தமாவது: ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வெவ்வேருயிருப்பினும் ஜீவன்கள் பிரம்மத்தின் பிரதிபிம்பங்களாயிருக்கின்றன. மாயையென்னும் பிரகிருதியினின்றும் ஜனித்த பிரபஞ்சத்திற்கு கடவுள் நேரே உபாதான காரணமென்பது ஒப்பத்தக்கதல்ல. மனுஷ்யத்வம் தேவத்வம் முதலான ஜாதி தேகத்தில் மாத்திரமன்றி ஆத்மாவிலுமுளது. கர்மவசத்தால் ஒரு ஜாதி ஆத்மா வேறு ஜாதியுடம்பைப் பெற்றிருப்பினும், முடிவிலே தன் தன் ஜாதி நிலையிலேயே நிற்கும். மோக்ஷத்திலோ அவரவர் ஞானுதி இயல்புக்கேற்க அனந்தபேதமுண்டு. மோக்ஷமென்பது வைகுண்டம் என்னும் அப்பிராகிருத லோகத்திற்போய் அங்குள்ள கடவுளின் (விஷ்ணுவின்) பதத்தை அநுபவித்தலேயாம். அம்முக்தியோ இறந்த வுடனே கிடைப்பதல்ல. சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மா மோக்ஷத்துக்குப் போகையில் அவர் துணைபற்றிச்செல்லக்கிடைக்கும். அதுபரியந்தம் ஆத்மாக்கள் பிரமலோகத்துக்குச் சமீபமாய் காத்திருக்குமாம்! இம்மத்துவர்க்கு விஷ்ணுவே முக்கிய தெய்வம். இவர்கள் வானராதிபதியாகிய அநுமாரையும் ஓர் தெய்வமாகவே கொண்டாடுகிருர்கள். மத்துவ சந்நியாசிகள் ஸ்மார்த்த சந்நியாசிகள்போன்றே யிருப்பர். இவர்கட்கு வியாசராயமடம், சத்தியபூர்ண ஸ்வாமி மடம் என விரண்டு பிரதான மடங்களுண்டு. ஆங்காங்குள்ள மடாதிபதிகள் தம் சீஷர்களை அரசர்போலாள்கிருர்கள். குருவுக்கு முரட்டுவைராக்கியத்துட னடங்கி நடக்கும் கட்டுப்பாடு இவர்களில் விசேஷம். கர்நாடகரிலும் மஹாராஷ்டிரிலும் மத்துவர் அதிகமாயுள்ளார்கள். கன்னடம் தங்கள் குருவின் பாஷையென அதை மேலாகக் கொள்ளுகிருர்கள். நியாயமென்பது சிறிதுமின்றி,

ஐரோப்பிய ஆஸ்திகம், பிரமசமாஜ ஆஸ்திகம், ஆரியசமாஜ ஆஸ்திகம்போன்ற சுத்த ஆஸ்திகமதம் (Pure Theism) எனக் கொள்ளல் எவ்வாற்ருனும் தகாது. இவ்வாபாசக்கதம்பமும் வேதாந்தமாமா!

---

## அத்வைதம்.

அத்வைதத்துக்குப் பிரவர்த்தகர் ஸ்ரீசங்கராசாரியார். இவர் மலேயாள நாட்டிலே கொச்சி - ஷோரனூர் இருப்புப்பாதை மார்க்கத்திலேயுள்ள ஆல்வாய் என்னும் ஊருக்கு ஆறு மைல் கிழக்கேயுள்ள காலடி என்னும் பிரக்யாதி யில்லாத கிராமத்திலே பிறந்தவர் எனச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனந்தகிரியென்பார் சிதம்பரத்திற் பிறந்ததாகச் சொல்லுகிருர். பண்டிதர் ஸ்ரீநிவாசராகவாசாரியார் 'இவர் மலேயாளதேசத்திலே திருசுவபேரூர் என்கிற ஊரிலே கலியுகவூல 3000-க்குப் பின்,இப்போதைக்கு 2024-வருஷங்களுக்குமுன் அவதரித்தவர், என்கிருர். ஸ்ரீசங்கரர் சிஷ்யபரம்பரையைச் சார்ந்தோர் சாங்கரர் எனப்படுகிருர்கள். இவர்கள் பெரும்பாலும் ஸ்மார்த்தரேயாம். ஸ்மார்த்தர் எனின் ஸ்மிருதி ஆசாரமநுஷ்டிப்பவரென்பது பொருள்.

இக்காலத்து சமஸ்கிருதபாஷை கற்ருேரும், சங்கரபாஷியமுணர்ந்தோரும் இவ்வாசியாகண்ட மன்றியில் ஐரோப்பா அமெரிகா கண்டங்களிலும் பல்லாயிரம் பல்லாயிரமா யிருப்பதாலும்; ஸ்ரீசங்கரர் கொள்கைகளே மேற்கொண்டொழுகுபவர் கீழ்க்கண்டத்திலும் மேற்கண்டத்திலும் அநேகரிருப்பதாலும், இவர்களில் பிராமணரல்லாத பிறவருணத்தாரு மிருப்பதாலும், சாங்கரர் சங்கியை சொல்லமுடியாது.

"ஆதி சங்கராசாரியார் சிதம்பரத்திலே விசுவசித்து என்னும் பிராமணோத்தமருக்கும் அம்பிகையென்னும் அவர் மனைவிக்கும் புத்திரராக அவதரித்தவர். அவர் பால சந்நியாசம்பூண்டு உத்தரஞ்சென்று அங்கே [கௌடபாதரென்பாரின் சிஷ்ராகிய கோவிந்தர்—கோவிந்த பகவத் பாதாசாரியர்—] எனும் ஒரு குருவையடைந்து வேதசாஸ்திரங்கள் முற்றுங்கற்று வல்லராகிப் பிரம சூத்திரத்திற்கும் உபநிஷதங்கட்கும் பகவத்கீதைக்கும் பாஷியஞ்செய்து, அத்வைதமதத்தை திக்குகள் தோறும் சென்று பிரசங்கித்து வியவஸ்தாபனம் பண்ணி ஜகத்குருவாயினர். [அவர் சிலர்சொற்படி 32-வயசிலே அவது வேறு சிலர் சொற்

படி 38-வயசிலே பரிபூரணதசையடைந்தனர்]. அவர் அத்வைத மதத்தை பிரவசனஞ்செய்து வியவஸ்தாபனம் பண்ணிப்போயினரேயன்றி, நடுநிலைபிறழ்ந்து அகங்கரித்து ஒரு மதத்தையும் தூஷித்தாரல்லர். அவரதுநிரம்பிய கல்வியும், தார்க்கிக வல்லபமும் ஞானப்பிரகாசமும் வாக்குசாதுரியமும் பாஷாசுகமும், எடுத்தவிஷயங்களை வரம்புகடவாது கடைபோக விசாரித்து நிச்சயிக்கும் நுண்ணியவிவேகமும், அழுக்காறும் பக்ஷபாதமும் பற்றாது நடுநிலைபிறழாது சத்தியத்தையே அவாவும் பெருந்தகைமையு முடையரென்பது அவரது நூல்களால் நன்கு விளங்கும். அவர் இப்பரத கண்டத்திலே அந்நாளிலே அவதாரம்பண்ணிப் பாஷியங்கள் செய்யாதிருப்பரேல், வேதோபநிஷதங்கள் நெடுங்காலத்துக்கு முன்னே மேகபடலத்தால் மூடப்பட்ட சந்திரனைப்போலொளி யிழந்துவிடும். அவர் சமாதிகொண்டவிடம் காஞ்சிபுரம். அவர் இற்றைக்கு இரண்டாயிரத் தெண்ணூற்றைம்பத்தாறு [2856] வருஷங்களுக்கு முன்னிருந்தவரென்பது ஜைன சமயநூல்களு ளொன்றாகிய 'ஜினவிஜயம்' என்னும் நூலினாலே நன்கு புலப்படும். புறச்சமயவாதிகளாகிய ஜைனருடைய நூலே இதற்குப் பிரமாணமாய், சங்கரருக்குப் பிரதமசிஷ்ராகிய ஆனந்த கிரியென்பார் கூற்றை வலியுறுத்துமென்றால், அவர் காலத்தைக்குறித்து ஐயங்கொள்ளற் கிடங்காணிலம்."—அபிதானகோசம்.

இவ் வொப்புயர்வில்லாப் பெருமானைக் கொண்டாடாதார் எங்குமில்லை. இவர் புகழ்பரவாத கண்டமுமில்லை. சமஸ்கிருத பாஷையை நன்கு கற்று வேதோபநிஷதங்களை முற்றிலுமுணர்ந்த Wilson, Weber, Max Muller, Deussen முதலான சிறந்த ஐரோப்பிய பண்டிதர்களாலேயே இவரது பாஷியங்கள் சிலாக்கியமாகக் கொள்ளப்பட்டுவருகின்றனவெனின் இவர் பெருமையைச் சொல்லவும்வேண்டுமோ? இஞ்ஞானபாஸ்கரரை மனமொழிமெய்களாற் றுதியாத அத்வைதி இப்பரதகண்டத்து எங்குமேயில்லை. வேதாந்தார்த்தம் உலகத்துக்குத் தெளிவித்த ஆசாரியரில் இவரே அதிமஹிமைபெற்றோர். ஆதிசங்கராசாரியராற் செய்யப்பட்ட வேறு நூல்கள்—ஆனந்தலகரி, ஸௌந்தரியலகரி, விவேகசூடாமணி, உபதேசஸஹஸ்ரி, பிரபஞ்சஸாரம், சிவபுஜங்க முதலியனவெனக் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆனந்தலகரிக்கு அப்பைய தீக்ஷிதர்செய்த வியாக்கியானம் சிறந்ததாம்.

உபநிஷதங்களையெல்லாம் செவ்வனே யாராய்ந்து வியாஸமுனிவரியற்றிய சூத்திரரூபமாயுள்ள பிரம மீமாம்சை, வேதாந்தமெனப்படும். இது உத்தரமீமாம்சையெனவும் சாரீரகமீமாம்

சையெனவும் பிரம சூத்திரமெனவும் வியாஸ சூத்திரமெனவும் வேதாந்த சூத்திரமெனவும் படும். இவ்வேதாந்த சூத்திரம் நான்கு அத்தியாயங்களும் பதினாறுபாதங்களும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களும் ஐந்நூற்றைம்பத்தைந்து சூத்திரங்களுமுடையது. இதன் 'இரண்டாமத்தியாயத்திலே சாங்கிய முதலிய புறச்சமய விரோத பரிகாரமும்; மூன்றாமத்தியாயத்திலே வித்தியாசாதன நிர்ணயமும்; நான்காமத்தியாயத்திலே ஞான சாதன பலமாகிய வீடுபேறும் பேசப்பட்டிருக்கின்றன.'

வீடு என்பது யாதெனின்,—சடகோபர் சொல்லுகிறார்:

"நன்றாய்ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பா ழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்
அன்றேயப்போதே வீடதுவேவீடுவீடாமே"—திருவாய்மொழி.

பிரம்மவித்தைக்காக மகரிஷிகளியற்றிய சூக்ஷ்ம உபதேச சாஸ்திரங்களாகிய உபநிஷத்துகளின் தொகை பலபடித்தாயிருக்கின்றது. 'இந்திய கலைஞான சரித்திரம்' எழுதிய ஜெர்மானியபண்டிதர் A. Weber என்பவர், மசுலிபட்டணத்து தெலுங்கு பிராமணரிடத்தில் 123 உபநிஷத்துகளிருப்பதை Walter Elliot தன் சோதனையிற்கண்டதாய்ச் சொல்லுவதாயும்; தன் வசமிருக்கும் உபநிஷத் அட்டவணையின் தொகை 147 என்றும்; தஞ்சாவூரில் ஜில்லா ஜட்ஜாகவிருந்த சமஸ்கிருத பண்டிதர் Burnell துரை 170 எனச் சொல்வதாயும்; தனது நேசர் பண்டிதர் Max Muller 149 வரையிற்கொண்டு போவதாயும்; பின்னர்செய்த பரிசோதனையால், தான் 235 வரையிற் கணிப்பதாயும் கூறுகிறார். இப்பெருந்தொகையிலநேகம் பிற்காலத்து சைவ வைணவ அபிமானிகளால் வீணாகச் சேர்க்கப்பட்டுள்ளன வாதலின், அவையொழித்து முக்கியமானவை 108 என்றே கொள்ளப்பட்டிருக்கின்றன. இவற்றுள்ளும் 10 அல்லது 12 தான் பிரதானமெனப் பண்டிதர் சொல்லுகிறார்கள். அவை இவை:

பிரகதாரண்யக, ஈஸ, கட, கேன, சாந்தோக்ய, முண்டக, மாண்டூக்ய, பிரஸ்ந, ஐதரேய, தைத்திரீய, சுவேதாஸ்வதர, கௌஷிதகி.

இவைகளில் கௌஷிதகி என்பதை நீக்கி அதற்குப்பதிலாக ந்ரிஸிம்ஹதாபினி என்னும் உபநிஷத்துக்கு—ஆக பனிரெண்டுக்கும் ஸ்ரீ சங்கராசாரியர் பாஷியஞ்செய்திருக்கிறார். இவ்

தன்றி உபநிஷத்துகளின் தாற்பரியம் தெரியும்படி ஸ்ரீ வேத வியாஸர்செய்த சாரீரக மீமாம்சை அல்லது உத்தரமீமாம்சை சூத்திரங்கட்கும், பகவத்கீதைக்கும் ஸ்ரீசங்கரர் பாஷியஞ்செய் திருக்கிறார். உபநிஷத்துகளின் உட்கருத்துக்கிணங்கவே, நியாய மாகவே, ஸ்ரீசங்கரர் பாஷியங்கள் செய்தனரென்றும், உபநிஷதக் கருத்துகட்கும் சங்கரர் கொள்கைகட்கும் பேதமேயில்லையென் றும், உபநிஷதக் கலைஞானத்தைப் பற்றியெழுதிய ஆங்கிலபண் டிதர் Gough என்பவர் உறுதியாய்க்கூறுகிறார். இம்மூன்றுக்கும் பிரஸ்தான திரயபாஷியம் என்றுபெயர். இவைதாம் முக்கிய சிரேஷ்டகிரந்தங்கள். இவற்றுள் உபநிஷத் பாஷியத்துக்கும் கீதாபாஷியத்துக்கும் ஆனந்தகிரி என்பவரும்; சூத்திரபாஷி யத்துக்கு வாசஸ்பதி என்பவரும் உரை செய்திருக்கிறார்கள். எல்லாத் தத்துவநூல்களும் இவற்றை ஆதாரமாகக் கொண்டே யிருக்கின்றன. இவை அத்வைத சித்தாந்தத்தையே மேற்கொ ண்டிருக்கின்றன. அச்சித்தாந்தமாவது:

ஜீவாத்மாக்கள், கடலில் அலைதோறும் சந்திரபிம்பமானது வேறுவேறாயும் அநேகமாயும் தோன்றுவதுபோல, மாயையி லே பிரதிபலிக்கின்ற பிரம்மத்தின் தோற்றங்களென்பதும்; கானலில் ஜலமும், புஷ்பமாலையிற் பாம்பும், கட்டையிற் கள்ள னும், சிப்பியில் வெள்ளியும் தோற்றுவதுபோல,பஞ்சபூத விகா ரமான பிரபஞ்சத்தோற்றம் மித்தையேயல்லது மெய்யல்லவென் பதும்; இத்தோற்றமும் சொப்பனத்தோற்றம்போல உள்ளே யேயல்லது வெளியே யல்லவென்பதும்; ஞாதா என்னும் அறி பவனும், ஜ்ஞேயம் என்னும் அறியப்படுபொருளும், ஜ்ஞானம் என்னும் அறிவுமாகிய திரிபுடி மூன்றும் ஒன்றேயென்பதும்; மாயை என்பது ரூபம் அரூபம் ரூபாரூபம் எனச்சொல்லக் கூடாத அவாச்சியமெனவும்; அது அநாதியே உள்ளது அல் லது இலது என்பதற்கு வேறாயுள்ளதென்பதும்; பிரம்மம் தவிர மற்றெல்லாம் சொல்மட்டும் யதார்த்தமல்லது உள்ளபடி யல்லவென்பதும்; ஈஸ்வரன் அல்லது ரிஷிகள் நாவினின்றும் வெளியான வேதமும் பொய்யே யாகிலும் கண்ணாடிப் பிரதி பிம்பம்போல உண்மையை யுணர்த்துகின்றன வென்பதும்; இதையறிந்தும் உலகப்பற்று விடாமல் 'வெந்தவஸ்திரம்போற் றொடர்வது பாதிதாநுவர்த்தி' யென்பதும்; வேத மஹாவாக்

கியங்கள் சொல்லும்படி, தானே பிரம்மம் தன்னையன்றிப் பிறிதொன்று மில்லையென ஐயந் திரிபறத்தெளிந்து நிற்பதே மோக்ஷம், ஜீவன்முக்தி யென்பதுமாம். இப்படி யின்னும்பலவுள, அவை, விரிக்கிற் பெருகும்.

அத்வைதிகள் ஸ்ருதி ஸ்மிருதி ஆசாரங்களையன்றி ஆகம ஆசாரங்களை யனுஷ்டிப்பதில்லை. ஸ்மார்த்தர் எனப் பேர்மாத்திரம்பூண்டு சிலர் ராமகிருஷ்ணதியர் படங்களைப் பூஜிக்கிறார்கள். அத்வைதிகள் எனப் பெயர்மாத்திரம் வைத்துக்கொண்டு கண்டகோயில்கள் முன் கூசாமல் கையெடுத்துக் கும்பிடுகிறார்கள். வேதாந்திகள் எனப் பேர்பெற்றவர்தவிர மற்றையர் கர்மானுஷ்டானஞ் செய்வார்கள். அத்வைத சந்நியாசிகளுள் சிலர் குடுமையும் பூணூலையும் நீக்கி, கையிலோர் தண்டம் தரித்திருப்பார்கள்; சிலர் அப்பாரமும் தள்ளி அவதூதர் எனும் நாமம் பெற்றிருப்பார்கள். சங்கரர் மடங்களுள் ஸ்ரிங்கிரி—புஷ்பகிரி, கும்பகோணத்திலுள்ளவை பிரதானமானவை. இவற்றுள் ஸ்ரிங்கிரிமடமே புராதனமானது. இம்மடாதிபதிகளுக்கு ஸ்தானபலனைநோக்கி இவர்கள் பணிந்தாலும், தத்துவோபதேசங்கள்—மத்துவர்போல்—இவரிடமே அல்லது இவர் நேமித்தவரிடமே பெறவேண்டுமென்னும் நிபந்தனையில்லை.

இவ்விந்துதேசத்துள்ள பிராமணரிற் பெரும்பாலார் அத்வைதிகளேயாயினும், இவர்களுள், ஐரோப்பிய அத்வைதிகள்-Bruno, Fichte, Goethe—போன்ற சுத்தாத்வைதிகள் கிடைப்பதரிது.

வேதோபநிஷத்துகளின் நிலைகண்டுணர்ந்து உலகெங்கும் புகழ்பெற்று விளங்கும் மஹா பாஷியங்கள்செய்து, ஜகத்குருவென்னும் அழியாப் பட்டம்பெற்ற சங்கராசாரிய ரென்னும் இப்பரமஹம்ஸப் பெரியோரை, அவரது உன்னத தத்துவநிலையை யுணரப் போதிய நுண்ணறிவின்றியே, போலிச் சைவரும் போலி வைணவரும் மாயாவாதி யென்றும் சூன்யவாதி யென்றும், நாஸ்திகரென்றும் வீணே தூஷித்துவருகிறார்கள்!

---

## விசிஷ்டாத்வைதம்.

விசிஷ்டாத்வைதத்துக்குப் பிரவத்தகர் ஸ்ரீ ராமாநுஜாசாரியர். இவர் ஸ்ரீ பெரும்பூதூரில் சாலிவாகனஸூ௯ங௬-ல், அதா

வது இப்போதைக்கு கூ௦௦ - வருஷங்கட்கு முன் பிறந்தவர். இவர் கேசவாசாரியர் எனும் தந்தைக்கும் காந்திமதி என்னும் தாய்க்கும் உற்பத்தியானவர்.

“இவர் யாதவப்பிரகாசரென்னும் சந்நியாசியிடம் சாஸ்திரங்கள் கற்று வல்லராகி, தங் குருமுன்னே தானே விசிஷ்டாத்வைத மதத்தைச் சாதித்துப் பின்னர் திரிதண்ட சந்யாசியாகி யதிராஜன் என்னும் பெயர்பெற்று, பல ஸ்தலங்களிற்சென்று ஆங்காங்கும் மடங்கள் ஸ்தாபித்து வைஷ்ணவமதத்தை நிலைநாட்டி, அதன் பின்னர் பல விடங்கட்குச் சென்று பரமதங்களைக் கண்டித்து தமது மதநாட்டி, சீஷர் குழாங்களைச்சேகரித்து தம் மதத்தை விர்த்திசெய்தனர். இவர் கீதாபாஷியம், வியாஸ சூத்திரபாஷியம், தர்க்கபாஷியம் முதலிய பல நூல்கள் செய்தார். இவரை வைணவர் பாஷியகாரரென்றும் எம்பெருமானரென்றும் வழங்குவர்”—அபிதானகோசம்.

இவர் மதத்துக்கு ராமாநுஜ மதமென்று பெயர். * இவர் சிஷருக்கு ராமாநுஜீயர் என்றும், சாதாரணமாய் வைஷ்ணவரென்றும் பெயர். இவரது சித்தாந்தமாவது : ஜீவாத்மாக்களும் பரமாத்மாவும் பிரகிருதியும் சுபாவத்தில் வேறே. ஆயினும் ஜீவாத்மாவும் பிரகிருதி (மாயை)யும் பரமாத்மாவுக்குச் சரீரமாகையால், அவற்றோடு பொருந்திய நிலையினல் பரமாத்மா

---

* இவ்விராமாநுஜ மதப்பிரசங்கிகளில் பேர்பெற்ற ஓர் தியவைணவரை யாம் எமது இளம்பருவத்தில் கண்டோம். அவர் யாரெனில், ஸ்ரீமத் பராங்குசதாசராம்! இவர் பம்பாய் ராஜதானியைச்சார்ந்த பெல்காம் நகரத்தில் ஏறக்குறைய 77-வருஷங்கட்குமுன், எமது மாதுலராகிய வளவனூர்-நாதாந்தமுதலியாருக்கு சிலகாலம் ஊழியஞ்செய்துகொண்டிருந்து, அவர் தன் ஊருக்குத் திரும்பிப்போகையில் அவரைவிட்டுப் பிரிந்து சென்னைக் கருகிலிருக்கும் திருவெவ்வுளூரில் சிலகாலந் தங்கியிருந்து,சைவராகிய தன் தாய்தந்தையர் தனக்கிட்ட வைத்தியலிங்கம் எனும் பெயரைமாற்றி, காலத்துக்கேற்ற கோலம்பூணஎண்ணி, பராங்குசதாசர் என்று பேர்பூண்டு, இச்சென்னை நகர்வந்துதான் பரசமயகோளரியெனப் பெரும்புரளி பண்ணிக்கொண்டிருந்தார். சிவதூஷணையே பூஷணமாகக்கொண்ட வித்தாசர், அமாவாசையன்றிரவு சந்திரனைக்காட்டி விஷ்ணுவுக்குப் பரத்வம் ஸ்தாபிக்கிறேனென்று இந்நகரெங்கும் பறைசாற்றி அன்றிரவு தன் தீர்க்க தரிசனம் பொய்க்கவே, யாருமேயறியாமல் திருப்பதிக்குப்போய் அங்கே ஒரு ஜாகையில் தன் பிராணனுக்குத் தானே உலைவைத்துக்கொண்டார்! இவரை இவர் மாண்ட 1862-ம் வருஷத்திலேயே கண்டோம். இவர் தூஷணப்பிரசங்கமும் கேட்டோம்.

ஒன்றேயன்றி வேறொன்றுமில்லை யென்பது. மேலும் சத்வ குணமூர்த்தியாகிய விஷ்ணுவே மேலானதெய்வம், ஆதலால் அவரையே தொழவேண்டும், மற்றத்தெய்வங்களைத் தொழுதல்தகுதியன்று என்பது. அன்றியும் அம்மூர்த்தியின் நித்ய லோகமாகிய வைகுண்டமடைவதே மோக்ஷம் என்பது. அம்மோக்ஷமடைய பக்தியும் சரணாகதியும் உபாயங்கள் என்பது. வைகுண்டத்தின் விபவத்தை (அதைப்போய்ப் பார்த்துவந்த!) ராமானுஜர் 'கத்தியத்திரயம்' என்னும் தனது நூலில் பேசுகிறார். சுருங்கச்சொல்லின்,—ராமானுஜமதமாவது: "பிரமம் வேறு ஆன்மாவேறு. பிரமத்திற்கு ஆன்மாக்கள் சரீரமாகவிருந்து சந்நிதானவிசேஷத்தால் ஞானங் கைகூடப்பெற்று பிரபஞ்சத்தை முற்றத்துறந்து, பிரமத்தின் திருவடிமேல் பற்றுடையராய் வைகுண்டஞ்சென்று [லக்ஷ்மீசமேதனாகிய?] விஷ்ணுவைத் தரிசித்து சாரூபம்பெற்று ஆநந்திருத்தலே முக்தியெனக்கூறுவது."

"சங்கர, ராமானுஜ, மத்துவாசாரியர்களென்னும் மும்மதப் பிரவர்த்தகர்களுக்குள், சங்கராசாரியர் முதல்வராயிருந்ததுமன்றி, வேதத்தில் சிறந்தபாகமாகிய உபநிஷத்துக்களுக்கு பாஷியம் செய்திருக்கிறார். ராமானுஜாசாரியரோவெனில், வேதத்தில் ஒரு எழுத்துக்காவது பாஷியம் செய்யவில்லையென்பது லோகப்பிரஸித்தம். ராமானுஜாசாரியர் செய்ததைவிட பலமடங்கு சிரேஷ்டமானவும் அதிகமானவுமான கிரந்தங்களைச் சங்கராசாரியர் செய்திருக்கிறாரென்று அறியாதவர் வெகு சிலர். ராமானுஜாசாரியர் சூத்திரபாஷியம் கீதாபாஷியம் செய்யவில்லையாவென்று சில வைஷ்ணவர் கேட்கின்றனர். சூத்திரத்துக்கும் கீதைக்குங்கூட சங்கராசாரியர் முதலில் சகல ஸ்ரமமும்பட்டு சாஸ்திரரீதிக்கு பாஷியம்செய்து உருவேற்படுத்தின பிறகு, அவர் அத்வைதபரமாய்ப் பொருள்செய்ததற்கு மாத்திரம் ராமானுஜாசாரியர் வேறுவித அர்த்தங்கூறியிருக்கின்றனர். அப்படி அபிப்பிராய பேதமுள்ளவிடங்களில் ராமானுஜாசாரியர் செய்த பொருளே சரியென்றனைவரும் அநுஷ்டிக்கவில்லை. இவர் கருத்தை அநுஷ்டிப்பவர் சிலரும், சங்கரர்கொண்டபொருளை அநுஷ்டிப்பவர் பலருமாயிருக்கின்றனர். சங்கரர்செய்த பாஷியத்திரயங்கள் இப்பரதகண்ட முழுமையிலுமன்றி, இங்கிலாண்டு, ஜெர்மனி, பிரான்ஸு முதலிய அந்திய நாடுகளிலும் பரவி அரசாண்டுகொண்டிருக்கின்றன. இத்தகைய மேலான கிரந்தங்களும்,

முக்கியமாய் உபநிஷத்து பாஷ்யமும் செய்திருப்பதால் சங்கரா சாரியருக்கு மாத்திரம் ஸ்ரீமத்வேதமூர்த்தி யென்னும் விசேஷ ணத்தை நாம் உபயோகித்ததற்குப் போதுமான காரணம் விளங் குமென நம்புகிறோம்''—தத்துவபோதினி, அக்டோபர்மீ கஅ௬௫.

---

## சிவாத்துவிதம்.

மேற்சொன்ன ஆசிரியர்கள் வியாஸ சூத்திரங்கட்குத் தத் தம் கோட்பாடுகளுக் கேற்கப் பாஷியங்கள்செய்துளார். இவர் களன்றி ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியர் என்பவர் விசிஷ்டாத்வை தக் கொள்கையும் சைவசித்தாந்தக் கொள்கையும் சேர்த்து ஓர் பாஷியம் செய்திருக்கிறார். அதற்கு நீலகண்டபாஷியம் என்று பெயர். அது சிவாத்துவிதபாஷியம். இவர்க்கு ஸ்ரீ கண்டரென வும்பேர்.

''இவர் வேதாகமபுராணேதிகாசங்ளிலே மிக்கவல்லுநர். இவர் கேகரண ஸ்தலத்திற்பிறந்த தெலுங்கர். மாதவாசாரியர்செய்த சங் கரவிஜயத்திலே ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் நீலகண்ட சிவாசாரி யரை வாதத்திலே வென்றனரென்றும்; நீலகண்ட விஜயத்திலே சங் கரர் நீலகண்டர் வினுக்களுக்கு விடைகூறவியலாது திகைத்தன ரென்றும் கூறியிருப்பதால், இருவரும் ஏககாலத்தவரே யென்பது பெறப்படுகின்றது. மதாபிமான விர்த்தாந்தங்கள் மாறுகொள்வனவா யினும், இருவரும் ஒருவரையொருவர் கண்டனரென்ப துண்மையாத வின் ஒரேகாலத்தவரென்பது நன்கு துணியப்படும். இருவிஜயங்களும் கற்பித நூல்களாகுமிடத்து ஏக காலத்தவர்களென்பதும் பொய்மை யின் பாலதாகும். நீலகண்டர் ராமாநுஜரது கொள்கைகளையெடுத்துக் கண்டித்தலாலே, நீலகண்டர் ராமாநுஜருக்குப் பிந்தியவரென்பதும், அவர்காலம் 800-வருஷங்களுக்கு முன்னரென்பதும் சங்கராசாரியர் கால நிருபணஞ்செய்த பாஷியாசாரிய பண்டிதர் கருத்து.''—அபிதான கோசம்.

சங்கரரும் நீலகண்டரும் ஒருகாலத்தவரேயென மேற்சொ ன்ன ஜெர்மானியபண்டிதர் Weber என்பார் கூறுகிறார். வே தாந்திகள் சங்கரரை எத்துணையாகத் தழுவுகின்றனரோ அத் துணையாகவே சைவர்கள் நீலகண்டரைத்தழுவுகிறார்கள். 'சிவ பாஞ்சாதித்த பிரபல ஆசாரியர்கள்—நீலகண்டர் ஹரதத்தர் அப் பையதீக்ஷிதர் என்னு மூவருள் நீலகண்டரே எவ்வகையானும் முதன்மையுற்றவர்.' ஆயினும் நீலகண்டபாஷியம் இந்நாட்டி லேயே செவ்வனே பரவவில்லை. 'சைவசம்பிரதாய பரம்பரை

யிலும் சாதாரணமாய் வழங்கிவருவதில்லை. அதற்கு சுமார் 290-வருஷங்கட்குமுன் காஞ்சிபுரத்திலிருந்த அப்பையதீக்ஷிதர் 'சிவார்க்கமணி தீபிகை' என வொருவியாக்கியானஞ் செய்தனர். அதனாலது அத்துவைதக் கொள்கையுளதுபோல் காட்டப்பட்டது. சோமநாதபட்டர் என்கிற ஆராத்திய பிராமண வித்துவான் அவ்வியாஸ சூத்திரங்கட்கு வீரசைவ சித்தாந்தக் கொள்கைகொண்டு ஒரு பாஷியம்செய்தனர். அதுவும் சம்பிரதாயமாய் வழங்கினதன்று.'—இர்துமதசித்தாந்தம்.

நீலகண்டர் சங்கரர்காலத்தவரேயென மறுக்கமுடியாதபடி கொண்டபின், நாம் பக்ஷபாதம் துரபிமானமின்றித் துணிந்து சொல்வது யாதெனின்,—பிற்காலத்தவரான ராமாநுஜர், நீலகண்டர் சிவபரமாய்ச்செய்துவைத்த விசிஷ்டாத்வைத பாஷியத்தைப்பார்த்து, அதை விஷ்ணுபரமாய்ப் பேரைமாற்றி, நீலகண்டரைப் பின்பற்றி கீர்த்திக்கு ஆஸ்ரயித்து, தானுமோர் பாஷியம் செய்தனரேயன்றி, தன் சொந்தபுத்தியினால் நூதன, அபூர்வத்வமான (original) பாஷியம் செய்தாரேயன்று என்பதே.

இவ்வாசாரியர் நால்வரும் இக்காலத்து மதோத்தாரகராயினும், இவர்க்கு முன்னேயே பிரவர்த்தகரிருந்ததாகவும்; முற்காலத்தில் ஒருவகைப்பட்ட சித்தாந்த மிருந்திருக்குமேயல்லது ஒன்றுக்கொன்று முரணாக சண்டைக்கு ஆஸ்பதம் பண்ணும் பல சித்தாந்தங்களிருந்திரா வென்பதும், ஆராய்ச்சியுள்ள சில அறிவாளிகள் அபிப்பிராயம்.

சைவமாயினும் வைணவமாயினும் கடவுளுக்குக் களத்திரம் கற்பிப்பது துவைதம். அக்கற்பனையைக் கனவிலும் பற்றாதது அத்வைதம்:—ஆதலின் அத்துவிதமே மேலானதெனக் கொள்க.

---

## வேதாந்தபேதம்.

நம்மவரிற் பெரும்பாலார் வேதாந்தம் என்பது இதுவென்றும், அவற்றின் பேதங்களிவையென்றும், அவற்றுள்உத்தரிக்கப்படும் விஷயங்களிவையென்றும், அவற்றை ஆக்கியோர் இன்னாரென்றும், அவர்கருத்து இதுவென்றும், அவற்றின் சரித்திரமிதுவென்று முய்த்துணராமலே வேதாந்தம் ஒன்றேயென்றும் அவற்றின் மார்க்கமு மொன்றேயென்றும் உத்தேச ஞானங்

கொண்டே ஒழுகிவருகிறார்கள். ஆதலால், அவற்றின் பேதாபே தங்களைச் சொல்வது அதியாவசியகமென ஈங்கு ஒருவாறு சுருக் கிச்சொல்வோம் :

### பாற்கரியம்.

இம்மதஸ்தர் சுரர் நரர் விலங்கு முதலிய ஜட சித்துக்களெல் லாம் பிரம்மத்தின் பரிணாமங்களென்றும்; இப்பிரம்மம் சச்சிதா னந்தமாய் நித்தமாய், வியாபகமாயிருத்தலின் இதுவே ஈஸ்வர னென்றும்; பரிணமித்து விகாரப்பட்டதை அறியாமையினாற் பந்தமாயிற்று என்றும்; பாரமார்த்திகத்தில் பொருள் ஒன்றே யென்றும்; வேதாந்தஞானத்தால் சரீரத்திற்கு வேறாயுள்ள ஆத்மரூபம் விளங்குமென்றும்; அவ்வாத்மாவே பரப்பிரம்ம மென்றுணர்ந்து அதன்கண் லயித்தலே முக்தியெனக்கூறுவர்.

### மாயாவாதம்.

இம்மதஸ்தர் மேற்சொன்ன பிரம்மமே பாரமார்த்திகத்தில் மெய்ப்பொருளென்றும்; அது நீங்கக்காணும் பொருள் யாவும இப்பியில் வெள்ளிபோலப் பொய்ப்பொருளென்றும்; ஜகத் திற்கு உபாதானம் மாயையென்றும்; அம்மாயை பிரம்மம் போல் மெய்ப்பொருளுமன்று, முயற்கோடுபோலப் பொய்ப் பொருளுமன்று என்றும்; மாயைக்கு வேறாகப் பிரமசொரூ பம் 'நான்' என்றும்; அந்த நானே வேதாந்த ஞானத்தாலறிவதே முக்தியென்றும் கூறுவர்

### சத்தப் பிரம்மவாதம்.

இம்மதஸ்தர் யாவற்றிற்கும் காரணமான பரப்பிரம்மம் பிர ளயகாலத்தில் சத்தவடிவா யிருக்குமென்றும்; ஜடசித்துக்க ளாய்த் தோன்றியழியும் எப்பொருள்களும் சத்தத்தின் விகாரங் களே யென்றும்; சத்தரூபமே முழுதுமென்றறிவதே முக்தி யென்றும் கூறுவர்.

### கிரீடாப்பிரம்மவாதம்.

இம்மதஸ்தர் முன்கூறப்பட்ட பிரம்மமே 'நான்' என்றும்; நான் ஒருபடித்தன்றி பலவகைபாய் நானாவிதமான விகாரப் பொருள்களோடுகூடி விளையாடுகிறேனென்றும்; இவ்வாறு அறிதலே முக்தியென்றும் கூறுவர்.

"இவற்றிற்கு நூல்செய்தார் வேதவியாஸரேயெனச் சொல்லு கிறார்கள். சிலர் அவர் கருத்தின்னதெனவுணராமலோ; உணர்ந்தும் தங் கல்வித்திறமும் பேரும் விளங்கவேண்டு மென்னின்ற பேரவாவினா

லோ ; அல்லது தத்தமக்குள்ள பிராந்தத்தினுலோ, மற்று யாதுகாரணத்தாலோ, தம் மனம்போன போக்காய் பாஷியங்களைச்செய்து மதங்களைப் பெருக்கினுர்கள்.''—தத்துவவிசாரிணி, டிசம்பர் 15—1878.

மேற்சொன்ன பேதங்களன்றிச் சில சில்லறைப் பேதங்களுமுள. அவை : (1) பின்னவாதம்—இது உலகமொன்றேயுளது, அது அழியாதது. அது காரியமாயினும் காரணமாகிய பரிபூரண பரவஸ்துவினின்றும் உதித்தது என்பது. (2) பரிணுமவாதம்—உலகமே பொருள். அதற்குக் காரணம் பரவஸ்துவன்றியில்லை. பால் தயிராவதுபோல் உலகம் பல்வேறுனதோற்றங்கள், மாறுதல்களுடைத்தாயிருக்கிறது என்பது. (3) காரணகாரியவாதம்—எது ஒருவஸ்துவுக்குக் காரணமோ அதுவே மற்ருென்றிற்குக் காரியம். கடம் மண்ணின்காரியம் ; மண்ணே பரவஸ்துவின் காரியம். உலகம் விகாரமுளதாயினும் விகாரமின்றிய பரவஸ்துவினின்றும் காரியமென்பது. (4) பிம்பப்பிரதிபிம்பவாதம்—சூரியனும் அவனது பிரதிபிம்பம்போலும், பிரமமும் பிரபஞ்சமும், விகாரமின்றியே பிரதி பிம்பிக்கின்றன என்பது.

---

## புனர் ஜன்மம்.

சர்வத்துக்கும் காரணமாயும் ஆதாரமாயுமுள்ள பிரம்மத்தினின்றும் தான்வேறு, பிரம்மம்வேறு என்னும் த்வைதபுத்தியினுல் மனிதன் பிரம்ம சக்கரத்திற்சுழலுகிருன். பிரத்யகாத்மாவாகிய ஜீவனும் பிரம்மமும் தத்துவத்தில் ஏகமேயென்று அறிந்தபின், ஜீவன் அமிர்தத்துவத்தை அடைகிருன். தானும் பிரமமும் அபேதமே யென்றறிய அவன் முக்தியடைகிருன். தத்துவசாஸ்திரங்களில் ஜீவாத்மா பிரம்ம ஸ்வரூபமெனவே சொல்லப்பட்டிருக்கின்றது. மனிதன் பழையவஸ்திரங்களை நீக்கிவிட்டு புதியவஸ்திரங்களை யெப்படித் தரிக்கின்ருனே, அவ்வண்ணமே ஜீவாத்மா பழையசரீரங்களை விட்டுவிட்டுப் புதிய சரீரங்களைக் கொள்ளுகிருனெனப் பகவத்கீதையிற் கூறப்பட்டிருக்கின்றது. இது உண்மையாவென விசாரித்தறிதல் நமது கடமையாகும்.

“ கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்புகா
உடைந்துபோன சங்கினேசை யுயிர்களு முடற்புகா
விரிந்தபூ வுதிர்ந்தகாயு மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை யில்லையில்லை யில்லையே”

என்பது சிவவாக்கியம். இப்படிக்கூறும் சிவவாக்கியர் வாக்கை மனிதனுக்குப் புனர் ஜனனமேயில்லை யெனற்கு அத்தாக்ஷியா கக் கொளலாமாவெனின், இது சாஸ்திரீயமெனக் கொள்ளல் தவறாகும்.

"ஜீவாத்மா அஞ்ஞானத்தினின்று நீங்கி ஞானமடைதலும்; அசக் தனுயிருந்து பூர்ண சக்தியையடைதலும் ஸ்ருதியில் வியக்தமாய்ச் சொல்லியிருக்கிறது. மனிதன்வாழ்வு ஒருநாளோ டற்றதன்று...அநாதித் தன்மையும் மரணராகித்தியமு முள்ளவன் தன் யதார்த்த சுபாவமும் நடையும் காலக்கிரமத்திலறிகிறுன். பரமஞானமும் பரமசக்தியும் அவனிடத்தே குப்தமாயிருக்கின்றன. அவைகள் விகாசத்தை யினியடைய வேண்டுவது. பிறப்பும் இறப்பும் இதற்காகத்தான். மனிதவியல்பு இத் தன்மைத்தென உணர்ந்தோமாகில், ஜீவநிலையின் பெருமை, வலிமை, மஹிமைதுலங்கும். இஃதே எக்காலங்களிலுமுள்ள ஞானிகளின்கொள்கையாம்"—சநாதநதர்மம்—ரு-ம் பிரிவு. ப. கoகு.

இச்சித்தாந்தம் மேற்கண்டத்தாருள் பிருதிவியாதி சாஸ்திரங்களிற் றேர்ச்சியடைந்து, புகழ்பெற்ற விற்பனர்களின் அங்கீகாரம் பெற்றுளதோவெனின், இக்காலத்து சகள் சாஸ்திரப் பண்டிதராய Lord Kelvin, Sir O. Lodge, என்பவரும்; பௌதிகவாத சாஸ்திரி Sir W. Crookes என்பவரும்; ஜீவதர்ம குண சாஸ்திரம் அல்லது புலனறிவு சாஸ்திரத்திற் பேர்பெற்று விளங்கிய Huxley என்பவரும்; தாபர சாஸ்திரமும் நன்குணர்ந்த Sir A. R. Wallace என்பவரும்;ஜீவாத்மாவுக்கு ஜன்மாந்தரமிருக்கக்கூடுமென அபிப்பிராயப்படுகிறுர்கள். இவ்வதி துல்ய வித்வ சூடாமணிகளில் Huxley என்பார், பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மையான அபிப்பிராயங்கள் போன்று, இப்புனர் ஜனனக்கொள்கையும் உபமானப்பிரமாண ஆதாரத்தாற் சாதிக்கக் கூடுமென்று சொல்லுகிறுர். அன்றியும், தமக்குள் (ஐரோப்பியருக்குள்) இக்காலத்துப் பரவியிருக்கும் இக்கொள்கை, இந்து தேசத்தில் 2,000 வருடங்கட்கு முன்னரே பரவியிருந்ததென்றும் சொல்லுகிறுர். * ஆனாலும், இச்சித்தாந்தத்திற் சற்றேனு நம்பிக்கையின்றியுள்ள ஐரோப்பிய சாஸ்திரிகள்—Buchner, Haeckel போன்று பலருமிருக்கிறுர்கள்.

---

* Evolution and Ethics.

## ஆரோபம்—அபவாதம்.

ஒருவஸ்துவை வேறோர் வஸ்துவாகக்காணல் ஆரோபம். அவ்வஸ்துவை உள்ளபடியேகாணல் அபவாதம். பஞ்சபூதத் தோற்றமாகிய பிரபஞ்சத்தை மெய்யெனக்கொள்ளல் ஆரோபம்; தத்துவவிசாரத்தாலும் அநுபவத்தாலும், அது பொய்யெனத்தள்ளி, அதற்கதிஷ்டானமான பிரம்மம் ஒன்றே மெய்யெனக்கொள்ளல் அபவாதம். கயிற்றைப் பாம்பெனக்காணல் ஆரோபம்; பாம்புபோற்றோற்றிய கயிற்றை கயிறாகவே காணல் அபவாதம். இவ்வண்ணமே நாமரூபங்களின்றி எங்கும் எப்போதும் ஓரேதன்மைத்தாய் துவிதமாகிய காரணகாரிய பாகுபாடின்றி ஏக சொரூபமாயும் அகண்டஞானப் பிழம்பாயுமுள்ளது எப்பிரம்மமோ அப்பிரம்மத்திடத்து மெய்போற்றோற்றும் பஞ்சபூத விகாரமாகிய சகல சராசரங்களும் கற்பிதமேயன்றி வேறல்லவென வறிதல்வேண்டும். கயிறு பாம்பாகத்தோற்றிய போது அதனிடத்து பாம்பென்னும் நாமரூபங்களெப்படியிலவோ, அதுபோலவே பிரம்மம் ஜகஜீவபரங்களாகத் தோற்றிய போதும் அப்பிரம்மத்திடத்து நாமரூபவிகாரங்களில்லை. கயிறு பாம்பாகத்தோற்றியபோதும் பாம்பல்ல; பாம்பென்னும் பிராந்தி நீங்கியபோதும் பாம்பல்ல. அவ்வாறே விசாரணைக்குமுன் பிரம்மம் ஜகஜீவபரங்களாய்த் தோற்றியபோதும்; விசாரணையின்பின் அவைகளல்லவெனத் தெளிந்தபோதும்; பிரம்மம் மாறுதல்கொள்ளாமலே விகாரமின்றியுள்ளது. ஞானமயமாய் இரண்டற்றிருக்கும் பிரம்மம் ஜக ஜீவபரங்களாய்த் தோற்றலே ஆரோபம். அத்தோற்றம் பொய்யெனத்தெளிதலே அபவாதம். அகண்டமாய், பரிபூரணமாய், சச்சிதானந்தசொரூபமாய் விளங்கும் பிரம்மத்தினிடத்து சிப்பியில் வெள்ளி தோன்றுவதுபோல ஓர் ஞெப்திகிளம்பியது: அதற்கு மூலப்பிரகிருதி யென்று பெயர். அஞ்ஞெப்தியெனும் மூலப்பிரகிருதி ஜக ஜீவபரங்களென்னும் மூன்று வஸ்துக்களையும் உள்ளடக்கிக்கொண்டு நிற்கும் அவசரத்தை மகதத்துவமென்று வேதாந்திகள் சொல்லுகிறார்கள். நிலத்திலிட்ட விதை உப்பி முதலில் ஒரு முளை விடுவதுபோல, இம்மகதத்துவத்தினின்று அகங்காரம் ஜனித்ததெனவும்; அவ்விதையினின்று முண்டான அம்முளை மூன்றாகவிரியுமாறு, அகங்காரத்தினின்றும் சத்வ, ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களுண்டாயின வெனவும்; சத்வகுணமே மாயையெ

னவும், அதனின்றும் பிரதிபலித்த பிரம்மசைதன்யத்திற்கு ஈஸ்வரனென்று பெயரெனவும் கீதை முதலிய சாஸ்திரங்கள் கூறுகின்றன. ரஜோகுணம் ஒன்றுக்கொன்று தாரதம்மியமுள்ள பலரூபங்களாய் இருக்கும் : அவைகட்கு அவித்தையெனப் பெயராம். அவ்வவித்தையிடத்து 'மலின சலப்பிரதி பிம்பம்போல' பிரமசைதன்யம் பிரதி பிம்பிக்கின்றதெனவும், அப் பிரதிபிம்பங்கட்கு ஜீவர்களெனப் பெயரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. தமோகுணம், ஆவரணம் விக்ஷேபமென்னும் இருகுணங்களுடையதாம். ஆவரணமெனின் மறைப்பு. இதுதான் பஞ்சகோசமெனவும் சொல்லுகிறார்கள். இவ்வாவரண சக்தி, தேகம் ஜீவபரங்களின் பேதமறியவொட்டாமல் ஜீவர்களை மறைத்துநிற்கும். ஆயின், இச்சக்தி மாயாரஹிதனான ஈஸ்வரனையும், தன்னையுணர்ந்த ஜீவன் முக்தர்களையும் அணுகாமல், தேகமே தானென்றும், லோகபோகங்களே நித்தியாநுபவமென்றும், அஞ்ஞானவசப்பட்டலையு மாந்தர்களையே மறைத்துநிற்கும். இவ்வாவரண சக்தியாலேயே சம்சாரப்பற்று அதிகரித்து முக்திக்குத் தடையாகிறது. விக்ஷேப சக்தியோ முக்திக்கு ஹேதுவாம். ஒன்று மற்றொன்றாகத் தோன்றுதல் ஆவரணம். ஒன்றை மற்றொன்றாக உணர்தல் விக்ஷேபம். விக்ஷேபத்தால் துக்கநிவர்த்தியுண்டாம்: துக்கநிவர்த்தியே கௌதமபுத்தர் சொன்னபடி முக்தியாம். அதுதான் நிர்வாணம். ஆகவே ஆவரணத்தை அறியாமை எனவும்; விக்ஷேபத்தை அறிவெனவுங் கொள்ளல்வேண்டும். இவ் விக்ஷேப சக்தியாலே சப்த ஸ்பரிச ரச ரூப கந்தங்களெனும் பஞ்சதன் மாத்திரைகளும் ; பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பஞ்ச பூதங்களும் ; அந்தக்கரணமும் ; கர்மேந்திரிய ஞானேந்திரியங்களும் ; பிராணாதி தசவாயுக்களும் ;—தத்துவங்கள் தொண்ணூற்றாறும்; பற்பல பேதங்களும் பல்வேறான சரீரங்களுமுண்டாயின.

ஆரோபம்—அபவாதம்.

அத்தியா ரோபமென்று மபவாத மென்றுஞ்சொல்லும்
யுத்தியாற் பந்தம் வீடென்றுரைக்கும் வேதாந்தமெல்லாம்
மித்தையா மாரோபத்தாற் பந்தமா மபவாதத்தால்
முத்தியா மிவ்விரண்டின் முந்தியா ரோபங்கேளாய்.

ஆரோபவியல்பு.

ஆரோப மத்தியாசங் கற்பனையாவ வெல்லாம்
ஓரோர்வஸ்து வினைவேறே யோரோர்வஸ்து வெனவோர்தல்

நாரூடு பணியர்த்தோன்ற னரனுகத் தறியிற்றேன்றல்
நீரூடு கானற்றேன்ற னிரந்தரம் வெளியிற்றேன்றல்.

அபவாதவியல்பு.

அரவன்று கயிறென்றுற்போ லாளன்று தறியென்றுற்போல்
குரவன்ற னுபதேசத்தாற் கூறுநூ லொளியைக்கொண்டு
புரமன்று புவனமன்று பூதங்க ளன்றஞானத்
திரமென்றும் பிரமமென்றுந் தெளிவதே யபவாதங்காண்.

ஆவரணத்திமை.

தோற்றமாஞ் சத்திதானே துன்பமாம் பவமானாலும்
ஆற்றலான் முத்திசேர்வார்க் கனுகூல மாகுங்காணீ
ஊற்றமாம் பகற்காலம்போ லுபகார நிசியினுண்டோ
மாற்றமென் னுரைப்பேன்மைந்தா மறைப்பது மிகப்பொல்லாதே.

சுழுத்தியிற் பிரளயத்திற் றேற்றமாஞ் சகங்கண்மாண்டும்
அழுத்திய பவம்போய்முத்தி யடைந்தபே ரொருவருண்டோ
முழுத்த விக்ஷேபமெல்லா முத்தியிற் கூட்டுகிற்கும்
கொழுத்தவா வரணமுத்தி கூடாமற் கெடுத்தகேடே.

விக்ஷேபநன்மை.

சுத்தியில் வெள்ளிபோலத் தோன்றிய தோற்றமான
சத்தியும் பொய்யேயென்றுற் சத்திசா தனமாவந்த
முத்தியும் பொய்யாமென்னின் மோசுநித் திரைவிலங்கால்
நித்திரை தெளியுமாபோ னிர்வாண நிலைமெய்யாமே.

[கைவல்யநவநீதம்.

---

## ஸ்தூலசூக்ஷ்ம காரணதேகங்கள்.

மேற்குறித்த மாண்டூக்யோப நிஷத்தில் ஜீவாத்மாவுக்கு அவஸ்தைகள் நான்குளவெனச் சொல்லியிருக்கிறது. அவை: ஜீவன் விழித்துக்கொண்டிருக்கும் காலம் ஜாக்கிராவஸ்தை; கனவுகாணும் காலம் சொப்பனவஸ்தை; நல்ல நித்திரையிலிருக்கும் காலம் சுஷுப்தியவஸ்தையாம். முதலாமவஸ்தையில் ஜீவனுக்கு வைசுவானரன் என்றுபெயர்; இரண்டாமவஸ்தையில் தைஜஸன் என்றுபெயர்; மூன்றுமவஸ்தையில் பிராக்ஞனென்றுபெயர்; நான்காவதான துரியாவஸ்தையில் ஜீவனுக்குப் பிரம்மம் என்றுபெயராம். அதனுற்றான் பிரத்தியகாத்மாவாகிய ஜீவனும் பரமாத்மாவாகிய பிரம்மமும் யதார்த்தத்தில் ஏகமேயென உபநிஷத்துகள் மொழிகின்றன. இத்துரியாவஸ்தையிலுள்ள ஜீவனுக்குத்தான், மற்றெல்லோர்க்கும் பிரத்யக்ஷ

மாகக்காணும் பிரபஞ்சம், மித்தையாகத் தோன்றும் என்பது ஸ்ரீ சங்கராசாரியர் உட்கருத்து. இந்த ஜீவாத்மா உபாதிகளாக முக்கியமான சரீரங்கள் நான்குள. அவை: (1) ஸ்தூலசரீரம்— இந்திரியங்கட்குப் புலப்படுவது: இது ஜாக்கிராவஸ்தையி லுள்ள ஆத்மாவின் உபாதி. (2) சூக்ஷ்மசரீரம் அல்லது நுட்ப மாகியதேகம்: இது சொப்பனாவஸ்தையிலிருக்கும் ஆத்மாவின் உபாதி. (3) காரணசரீரம்: இது முழுநித்திரையிலுள்ள ஆத்மா வின் உபாதியாம்.

"ஆத்மா ஸ்தூலோபாதியில் விஸ்வனென்றும்; சூக்ஷ்ம உபாதியில் தைஜஸனென்றும்; காரண உபாதியில் பிராக்ஞனென்றும் பெயருடை யவனாகிறான். ஆகையால், ஆத்மா முப்பான்மையுடையவனாகச் சொல் லப்படுகிறான்."

பிரம்மத்தின் முக்குணங்களான சத்தியம், ஞானம், அநந் தம், பிரதிபிம்பித்த பிராகிருதியில் மேற்கூறிய மூன்று உபா திகளாக வெளியாகின்றனவெனக் கொள்ளவேண்டும். ஸ்தூல சரீரம் அநந்த ஸ்வரூபத்தின் உபாதி. சூக்ஷ்மசரீரம் ஞானஸ்வ ரூபத்தின் உபாதி. காரணசரீரம் சத்திய ஸ்வரூபத்தின் உபாதி யாம். ஜீவாத்மாவுக்கு ஐவகைக்கோசங்க ளமைக்கப்பட்டுள் ளனவென்பது ஞானசாஸ்திரக்கொள்கை. அவைகள்,—அன்ன மயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமயகோசம் என்பன.

"பிருதிவி தத்துவம் ஆறுவிதமாய்ப் பரிணமித்திருக்கிறது. அவ் விதமாவது:பிருதிவி—ஸ்தூலத்தன்மை (Solid);ஆப—திரவபதார்த்தத் தன்மை (Liquid); வாயு—ஆவித்தன்மை (Gaseous); அக்கினி—பி ரகாசமான பதார்த்தத்தன்மை (Radiant matter); ஆகாசத்தன்மை (Etheric); பர ஆகாச (அதாவது) பரம அணு சூக்ஷ்மத்தன்மை (super-etheric and atomic). இப்பிரகிருதி பரிணாமங்களின் சேர்க்கைகளில், அஃதாவது அணுத்திரள்களில், பிருதிவி தத்துவம் பிரதான்னியமாக விளங்குகின்றது."—சநாதநதர்மம்.

ஜீவாத்மாவாகிய மனிதனில் பிரக்ஞாவஸ்தையாயுளது பிரா ணன். அப்பிராணன் ஆத்மாவினின்றும் பிறந்ததென பிரஸ் நோப நிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட கோசங்களில் அன்னத்தால், அதாவது ஆகா ரத்தாலாயது; முதலான அன்னமயகோசம். இஃதே ஸ்தூலாம் சம், திரவாம்சம், ஆவியம்சங்களா லமைந்திருக்கிறது. இதில்

பிருதிவி தத்வம் பிரதானம். கர்மேந்திரியங்கட்கு மூலங்களான வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம்—இவைகட்கு இருப்பிட மிதுவேயாம்.

'இக்கோசத்தில் மூளையை நடுநாயகமாக உடைத்தான நாடி ஸமூகமிருக்கின்றது. அதன் சாதனத்துவாரா, ஜாக்கிராவஸ்தை அபிமானியான வைசுவானரன் பூலோகவிஷயங்களில் சம்பந்தித்து நடைபெறுகிறான்.'

மற்றுப் பிராணமய, மனோமய, விக்ஞானமய கோசங்களால் சூக்ஷ்ம சரீரம் உண்டாகிறதெனச் சித்தாந்தம்.

ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிராணன்கள் ஐந்து,—விக்ஞான சேர்க்கையாகிய இவைகள் சூக்ஷ்ம சரீரமாம். இச்சரீரம் பிராணமயகோசமூலமாய் பூலோகத்தில் சம்பந்தித்து, அது சம்பந்தமான நுண்ணிய ஆகாச அணுத்திரள்களால் அமைக்கப் பெற்றுள்ளதெனவும்; ஸ்தூல சரீரக்கிருஷிகளை நடத்தும் பிராணன்கள் ஆகாசத்தில் சஞ்சரிக்கின்றனவெனவும் 'சநாதநதர்மம்' கூறுகின்றது. ஆகவே பிராணன் வெளியாகத் தேகம் மரணமடைகிறதென நாம் கொள்ளவேண்டும்.

'தற்காலத்துப் புலனறிவு (Physiology) சாஸ்திரத்து முடிவான அபிப்பிராய மென்னவெனில், மேற்குறித்த சக்திகளில் விகசிப்பதெல்லாம் நுண்ணிய ஆகாச அணுத்திரள்களில் ஏகமாமென்பதும்; இவ்வாகாசமே மேற்குறித்த பிராணமயகோசத்தின் அமைப்புப் பொருளென்பதுமாம்.'—சநாதநதர்மம்.

காரணசரீரம் என்பது வேதாந்திகள் சொல்லும் ஆனந்தமய கோசமாம். ஜாக்கிராவஸ்தையில் அன்னமய, பிராணமய, மனோமயகோசங்கள் சுறு சுறுப்பா யிருக்கின்றன வென்றும், அவ்வவஸ்தையில் தீவிர புத்தியுள்ள ஞானிகள் விக்ஞானமய கோசத்தைக் கருவியாகக் கொள்கிறார்களென்றும்; சாதாரண மனிதர்கள் மனோமயகோசத்தைத் தாண்டிப்போகிறது சாத்தியமல்லவென்றும் மேற்காட்டிய நூலில் கூறப்பட்டுள்ளது.

மரணகாலத்தில் பிராணமயகோசம் அன்னமயகோசத்தினின்றும் பிரிகிறது என்பதும், தேகத்தில் பிராணனுள்ளவரையில் ஜீவனிருக்கிறது என்பதும் உபநிஷத தாற்பரியங்களாம். ஜாக்கிராவஸ்தை சம்பந்தமான எல்லாச் சக்திகளும் பிராணனில் அடக்கமெனவும்; பிராணன் பிரியும்காலத்து இச்சக்திகள்

மாகக்காணும் பிரபஞ்சம், மித்தையாகத் தோன்றும் என்பது ஸ்ரீ சங்கராசாரியர் உட்கருத்து. இந்த ஜீவாத்மா உபாதிகளாக முக்கியமான சரீரங்கள் நான்குள. அவை: (1) ஸ்தூலசரீரம்—இந்திரியங்கட்குப் புலப்படுவது: இது ஜாக்கிராவஸ்தையி லுள்ள ஆத்மாவின் உபாதி. (2) சூக்ஷ்மசரீரம் அல்லது நுட்ப மாகியதேகம்: இது சொப்பனவஸ்தையிலிருக்கும் ஆத்மாவின் உபாதி. (3) காரணசரீரம்: இது முழுநித்திரையிலுள்ள ஆத்மா வின் உபாதியாம்.

"ஆத்மா ஸ்தூலோபாதியில் விஸ்வனென்றும்; சூக்ஷ்ம உபாதியில் தைஜஸனென்றும்; காரண உபாதியில் பிராக்ஞனென்றும் பெயருடை யவனாகிறான். ஆகையால், ஆத்மா முப்பான்மையுடையவனாகச் சொல் லப்படுகிறான்."

பிரம்மத்தின் முக்குணங்களான சத்தியம், ஞானம், அநந் தம், பிரதிபிம்பித்து பிராகிருதியில் மேற்கூறிய மூன்று உபா திகளாக வெளியாகின்றனவெனக் கொள்ளவேண்டும். ஸ்தூல சரீரம் அநந்த ஸ்வரூபத்தின் உபாதி. சூக்ஷ்மசரீரம் ஞானஸ்வ ரூபத்தின் உபாதி. காரணசரீரம் சத்திய ஸ்வரூபத்தின் உபாதி யாம். ஜீவாத்மாவுக்கு ஐவகைக்கோசங்க ளமைக்கப்பட்டுள் ளனவென்பது ஞானசாஸ்திரக்கொள்கை. அவைகள்,—அன்ன மயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமயகோசம் என்பன.

"பிருதிவி தத்துவம் ஆறுவிதமாய்ப் பரிணமித்திருக்கிறது. அவ் விதமாவது: பிருதிவி—ஸ்தூலத்தன்மை (Solid); அப—திரவபதார்த்தத் தன்மை (Liquid); வாயு—ஆவித்தன்மை (Gaseous); அக்கினி—பிர காசமான பதார்த்தத்தன்மை (Radiant matter); ஆகாசத்தன்மை (Etheric); பர ஆகாச (அதாவது) பரம அணு சூக்ஷ்மத்தன்மை (super-etheric and atomic). இப்பிரகிருதி பரிணாமங்களின் சேர்க்கைகளில், அஃதாவது அணுத்திரள்களில், பிருதிவி தத்துவம் பிரதான்னியமாக விளங்குகின்றது."—சனாதநதர்மம்.

ஜீவாத்மாவாகிய மனிதனில் பிரக்ஞாவஸ்தையாயுளது பிரா ணன். அப்பிராணன் ஆத்மாவினின்றும் பிறந்ததென பிரஸ் னோபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட கோசங்களில் அன்னத்தால், அதாவது ஆகா ரத்தாலாயது, முதலான அன்னமயகோசம். இஃதே ஸ்தூலாம் சம், திரவாம்சம், ஆவியம்சங்களா லமைந்திருக்கிறது. இதில்

பிருதிவி தத்வம் பிரதானம். கர்மேந்திரியங்கட்கு மூலங்களான வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம்—இவைகட்குஇருப் பிட மிதுவேயாம்.

'இக்கோசத்தில் மூளையை நடுநாயகமாக உடைத்தான நாடி ஸமூகமிருக்கின்றது. அதன் சாதனத்துவாரா, ஜாக்கிராவஸ்தை அபி மாணியான வைசுவானரன் பூலோகவிஷயங்களில் சம்பந்தித்து நடை பெறுகிறுன்.'

மற்றுப் பிராணமய, மனோமய, விக்ஞானமய கோசங்க ளால் சூக்ஷ்ம சரீரம் உண்டாகிறதெனச் சித்தாந்தம்.

ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிரா ணன்கள் ஐந்து,—விக்ஞான சேர்க்கையாகிய இவைகள் சூக்ஷ்ம சரீரமாம். இச்சரீரம் பிராணமயகோசமூலமாய் பூலோகத்தில் சம்பந்தித்து, அது சம்பந்தமான நுண்ணிய ஆகாச அணுத்தி ரள்களால் அமைக்கப் பெற்றுள்ளதெனவும்; ஸ்தூல சரீரக்கிரு ஷிகளை நடத்தும் பிராணன்கள் ஆகாசத்தில் சஞ்சரிக்கின்றன வெனவும் 'சநாதநதர்மம்' கூறுகின்றது. ஆகவே பிராணன் வெளியாகத் தேகம் மரணமடைகிறதென நாம் கொள்ளவேண் டும்.

'தற்காலத்துப் புலனறிவு (Physiology) சாஸ்திரத்து முடிவான அபிப்பிராய மென்னவெனில், மேற்குறித்த சக்திகளில் விகசிப்பதெல் லாம் நுண்ணிய ஆகாச அணுத்திரள்களில் ஏகமாமென்பதும்; இவ் வாகாசமே மேற்குறித்த பிராணமயகோசத்தின் அமைப்புப் பொரு ளென்பதுமாம்.'—சநாதநதர்மம்.

காரணசரீரம் என்பது வேதாந்திகள் சொல்லும் ஆனந்த மய கோசமாம். ஜாக்கிராவஸ்தையில் அன்னமய, பிராணமய, மனோமயகோசங்கள் சுறு சுறுப்பா யிருக்கின்றன வென்றும், அவ்வவஸ்தையில் தீவிர புத்தியுள்ள ஞானிகள் விக்ஞானமய கோசத்தைக் கருவியாகக் கொள்கிறுர்களென்றும்; சாதாரண மனிதர்கள் மனோமயகோசத்தைத் தாண்டிப்போகிறது சாத் தியமல்லவென்றும் மேற்காட்டிய நூலில் கூறப்பட்டுள்ளது.

மரணகாலத்தில் பிராணமயகோசம் அன்னமயகோசத்தி னின்றும் பிரிகிறது என்பதும், தேகத்தில் பிராணனுள்ளவரை யில் ஜீவனிருக்கிறது என்பதும் உபநிஷத தாற்பரியங்களாம். ஜாக்கிராவஸ்தை சம்பந்தமான எல்லாச் சக்திகளும் பிராண னில் அடக்கமெனவும்; பிராணன் பிரியும்காலத்து இச்சக்திகள்

யாவும் கூடவே செல்லுகின்றனவெனவும்; ஜீவன் வெளியேறுங்கால் எல்லாச்சக்திகளும் அவனோடே வெளியேறுகின்றனவெனவும்; அப்போது மரணமான மனிதன் சூக்ஷ்மசரீரங்களிலிருக்கின்றனெனவும், இறந்துபோகும் மனிதனைப்பற்றி கௌஷீதகி உபநிஷத்து கூறுகின்றது.

"உயர்ந்தமெய்ஞ்ஞான நிட்டையாலனைத்தும் உணர்ந்த மேலோர்க்குளமகிழ வியர்திடலாவி பொருளையும் சமர்ப்பித்திணையிலாப் பிரமவானந்தம், தயங்கினேருடலபிமானத்தைநீக்கித் தனத்தின்மேற் பற்றுதலின்றிச், சுயம்பிரகாசச் சிவமலதொன்றைச் சுட்டிடா ரவர்பதந்திதிப்பாம்."—பிரமகீதை.

---

## சங்கரர்ஜனனம்.

மேற்கண்டமென்னும் ஐரோப்பாகண்டத்தில் Greece தேசத்துத் தலைப்பட்டணமாகிய Athens நகரத்திலும், மற்றிடங்களிலும்; Italy தேசத்து ராஜதானியாகிய ரோமபுரியிலும் பிறவிடங்களிலும், கிறிஸ்துபிறவாமுன் (அதாவது சுமார் 20 0 வருடங்கட்குமுன்) பேர்பெற்று விளங்கியிருந்த கணிதசாஸ்திரிகள், பிராகிருத சாஸ்திரிகள், வானசாஸ்திரிகள், பிருதிவிசாஸ்திரிகள், அங்காதிபாத சாஸ்திரிகள், இந்திரியதத்துவசாஸ்திரிகள், விலங்கியல் நூலார், தாபரசாஸ்திரிகள், தார்க்கிகர்கள், தத்துவநூலார், சரித்திரக்காரர், ரஸவாதநூலார், ஆயுள்வேதியர், அலங்காரசாஸ்திரிகள், அரும்பெருங்கவிகள், நீதிநூலார், ராஜதந்திரசாஸ்திரிகள், மெய்த்தெய்வபக்தர், நாஸ்திகவாதிகள் முதலானோர் ஜீவித்திருந்தகாலமும் அவரது ஜீவசரித்திரங்களும் சங்கையற வரையப்பட்டிருக்கின்றன. நமது பரதகண்டத்திலோ, அத்வைத மதோத்தாரகராய் ஞானசூரியனைப் விளங்கிய ஸ்ரீ ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகள் உதித்தகாலம் இன்றுவரையில் குழப்பமாயும் சந்தேகமாயும், ஆக்ஷேபனைக் கிடனுயுமே யிருக்கின்றது. இத்தேசத்துக்கு ஈதென்ன பெருங்குறை! என்ன பெருந்தோஷம்! நம்மவர்க்கு ரிஷபசேவை, கருடசேவை, வானரசேவை, வைரமுடிசேவை,—இச்சேவைகளிலும் இவைபோன்ற ஆபாசக்காரியங்களிலும் மிக்க ஸ்ரத்தையும் ஆவலும் பெரும்பாலுமுளதேயன்றி, இம்மகாநுபாவரது ஜீவகாலத்தை மனப்பற்றுடனே போதிய ஊக்கங்கொண்டாராய்ந்து நிச்சயித்து, உலகத்தாருக்குத் தெரிவிப்பது ஓர் கடனாகக்காண

வில்லை! சாஸ்திரிகள் ஏராளமாயுள்ர். அத்வைதிகளோ அனந்தமாயுளர். யாது பயனுக்கு?*

இப்புத்தகத்து கoரு, கoசு-ம் பக்கங்களில் இவரது ஜீவ தசையைப்பற்றி இரு பண்டிதர்கள்கொண்ட கூற்றுகளைக்காட்டினேம். இவைநிற்க, 'ஆரிய கிரந்தகர்த்தாக்கள் சரித்திரம்'என்னும் நூல்செய்த ஸ்ரீ ஜனர்த்தன ராமசந்திரர் என்பவர், ஸ்ரீ சங்கராசாரியார் உருoo-வருஷங்களுக்கு முன்னிருந்தவரென்றே தமது நூலிற் கூறுவதாக 'அபிதானகோசம்' குறிக்கின்றது. இவ்விஷயம் பெரியோரைப்பற்றியதும் அதி முக்கியமானதுமாதலின், வடநூற்கடலை ஆராய்ந்துணர்ந்த ஐரோப்பிய பண்டிதரது அபிப்பிராயங்களை இனி சுருக்கமாய்க்காட்டுவோம்.

முதலாவது மாதவாசாரியரியற்றிய சங்கரவிஜயத்தைப் பின்பற்றி (க) மேற்சொன்ன Weber என்பவர், பிரமசூத்திர கர்த்தாவான வியாஸர் கி. பி. நாலாவது, அல்லது ஐந்தாவது நூற்றுண்டுக் கிடையிலிருந்ததாகவும்; அவரது சீஷர்களிலொருவர் கௌடபாதரெனவும், அவர் சீஷர் சங்கரர் குரு கோவிந்தநாதரெனவும்; வியாஸர்காலம் சங்கரர் காலத்துக்குமுன் 2 அல்லது 3 நூற்றுண்டுகட்கு முன்னென உத்தேசம் பண்ணலாமென்றும்; தனது நூலில் பிறிதோரிடத்தில் சங்கரர் கி. பி. 8-வது நூற்றுண்டுக்குச் சமீபமாயிருந்ததாகக் கொள்ளலாமெனவும்; ஆனலும் அவர்காலத்தை நிச்சயமாகக்கூற வியலாதெனவும்; சங்கரர் பௌத்தமதஸ்தரின் வைராக்கிய—விரோதியாயிருத்தலின் அவர் சைவரெனச் சொல்லப்படுகிருரெனவும்; அவரது நூல்களில் பிரமத்தின் நிஜமான அவதாரம் வாசுதேவன் எனக்கூறு

---

* சந்தர்ப்பம் வாய்த்துழிப் பேசாதிருத்தல் தகுதியன்றென, சென்னை-ஆநந்தாஸ்ரம சாது மஹாசங்கத்தைநோக்கி ஈங்கு சில வார்த்தைகள் வரைவது நம் கடமையாகவிருக்கின்றது: இச்சங்கம் அத்வைத சாஸ்திரவிசாரணைசெய்த பலவிவேகிகளும், மற்றுப் பக்திஸ்ரத்தையுள்ள பலரும் கூடியுள்ளது. இது, ஒன்பதுவருஷமாக, வருஷ மஹோற்சவம் கொண்டாடும் காலத்தும், ஸ்ரீ சங்கரஜயந்தி கொண்டாடு நாள்களிலும், பிரதிவருஷம் சித்திராபௌர்ணமி தினத்தும், கற்றுணர்ந்த பலரால் பிரசங்கங்கள் நடாத்திவருவதுடன், அச்சமயங்களில் விஜயஞ்செய்யும் சாதுக்களுக்கும் நேசர்கட்கும், நூற்றுக்கணக்கான ஏழைப் பிரஜைகட்கும் (குறைகூறற் கிடந்தராது) ஜாதிசமய வேற்றுமையின்றியே அன்னமளித்துப் புண்ணியம் சேகரித்துவருவது எல்லோரும் நன்கு மதிக்கத்தக்க காரியமேயாம்.

யாவும் கூடவே செல்லுகின்றனவெனவும்; ஜீவன் வெளியேறுங் கால் எல்லாச்சக்திகளும் அவனோடே வெளியேறுகின்றனவெ னவும்; அப்போது மரணமான மனிதன் சூக்ஷ்மசரீரங்களி லிருக்கிறானெனவும், இறந்துபோகும் மனிதனைப்பற்றி கௌஷீதகி உபநிஷத்து கூறுகின்றது.

"உயர்ந்தமெய்ஞ்ஞான நிட்டையாலனைத்தும் உணர்ந்த மேலோர்க் குளமகிழ வியர்துடலாவி பொருளையும் சமர்ப்பித்திணையிலாப் பிரம வானந்தம், தயங்கிநேருடலபி மானத்தைநீக்கித் தனத்தின்மேற் பற் றுதலின்றிச், சுயம்பிரகாசச் சிவமலதொன்றைச் சுட்டிடா ரவர்பதந் துதிப்பாம்."—பிரமகீதை.

---

## சங்கரர்ஜனனம்.

மேற்கண்டமென்னும் ஐரோப்பாகண்டத்தில் Greece தே சத்துத் தலைப்பட்டணமாகிய Athens நகரத்திலும், மற்றிடங் களிலும்; Italy தேசத்து ராஜதானியாகிய ரோமபுரியிலும் பிறவிடங்களிலும், கிறிஸ்துபிறவாமுன் (அதாவது சுமார் 2000 வருடங்கட்குமுன்) பேர்பெற்று விளங்கியிருந்த கணிதசாஸ்திரி கள், பிராகிருத சாஸ்திரிகள், வானசாஸ்திரிகள், பிருதிவிசாஸ் திரிகள், அங்காதிபாத சாஸ்திரிகள், இந்திரியதத்துவசாஸ்திரி கள், விலங்கியல் நூலார், தாபரசாஸ்திரிகள், தார்க்கிகர்கள், தத் துவநூலார், சரித்திரக்காரர், ரஸவாதநூலார், ஆயுள்வேதியர், அலங்காரசாஸ்திரிகள், அரும்பெருங்கவிகள், நீதிநூலார், ராஜ தந்திரசாஸ்திரிகள், மெய்த்தெய்வபக்தர், நாஸ்திகவாதிகள் முத லானோர் ஜீவித்திருந்தகாலமும் அவரது ஜீவதசை சரித்திரங் களும் சங்கையற வரையப்பட்டிருக்கின்றன. நமது பரதகண் டத்திலோ, அத்வைத மதோத்தாரகராய் ஞானசூரியனாய் விள ங்கிய ஸ்ரீ ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகள் உதித்தகாலம் இன்று வரையில் குழப்பமாயும் சந்தேகமாயும், ஆக்ஷேபணைக் கிடனாயு மேயிருக்கின்றது. இத்தேசத்துக்கு ஈதென்ன பெருங்குறை! என்ன பெருந்தோஷம்! நம்மவர்க்கு ரிஷபசேவை, கருடசே வை, வானரசேவை, வைரமுடிசேவை,—இச்சேவைகளிலும் இவைபோன்ற ஆபாசக்காரியங்களிலும் மிக்க ஸ்ரத்தையும் ஆவலும் பெரும்பாலுமுளதேயன்றி, இம்மகானுபாவரது ஜீவ காலத்தை மனப்பற்றுடனே போதிய ஊக்கங்கொண்டாய்ந்து நிச்சயித்து, உலகத்தாருக்குத் தெரிவிப்பது ஓர் கடனாகக்காண

வில்லை! சாஸ்திரிகள் ஏராளமாயுள்ர். அத்வைதிகளோ அனந்தமாயுளர். யாது பயனுக்கு?*

இப்புத்தகத்து கoடு, கoசுட-ம் பக்கங்களில் இவரது ஜீவதசையைப்பற்றி இரு பண்டிதர்கள்கொண்ட கூற்றுகளைக்காட்டினேம். இவைநிற்க, 'ஆரிய கிரந்தகர்த்தாக்கள் சரித்திரம்'என்னும் நூல்செய்த ஸ்ரீ ஜனார்த்தன ராமசந்திரர் என்பவர், ஸ்ரீ சங்கராசாரியார் உடுoo-வருஷங்களுக்கு முன்னிருந்தவரென்றே தமது நூலிற் கூறுவதாக 'அபிதானகோசம்' குறிக்கின்றது. இவ்விஷயம் பெரியோரைப்பற்றியதும் அதி முக்கியமானதுமாதலின், வடநூற்கடலை ஆராய்ந்துணர்ந்த ஐரோப்பிய பண்டிதரது அபிப்பிராயங்களை இனி சுருக்கமாய்க்காட்டுவோம்.

முதலாவது மாதவாசாரியரியற்றிய சங்கரவிஜயத்தைப் பின்பற்றி (க) மேற்சொன்ன Weber என்பவர், பிரமசூத்திர கர்த்தாவான வியாஸர் கி. பி. நாலாவது, அல்லது ஐந்தாவது நூற்றுண்டுக் கிடையிலிருந்ததாகவும்; அவரது சிஷர்களிலொருவர் கௌடபாதரெனவும், அவர் சிஷர் சங்கரர் குரு கோவிந்தநாதரெனவும்; வியாஸர்காலம் சங்கரர் காலத்துக்குமுன் 2 அல்லது 3 நூற்றுண்டுகட்கு முன்னென உத்தேசம் பண்ணலாமென்றும்; தனது நூலில் பிறிதோரிடத்தில் சங்கரர் கி. பி. 8-வது நூற்றுண்டுக்குச் சமீபமாயிருந்ததாகக் கொள்ளலாமெனவும்; ஆனாலும் அவர்காலத்தை நிச்சயமாகக்கூற வியலாதெனவும்; சங்கரர் பௌத்தமதஸ்தரின் வைராக்கிய—விரோதியாயிருத்தலின் அவர் சைவரெனச் சொல்லப்படுகிறுரெனவும்; அவரது நூல்களில் பிரமத்தின் நிஜமான அவதாரம் வாசுதேவன் எனக்கூறு

* சந்தர்ப்பம் வாய்த்துழிப் பேசாதிருத்தல் தகுதியன்றென, சென்னை-ஆநந்தாஸ்ரம சாது மஹாசங்கத்தைநோக்கி ஈங்கு சில வார்த்தைகள் வரைவது நம் கடமையாகவிருக்கின்றது: இச்சங்கம் அத்வைத சாஸ்திரவிசாரணைசெய்த பலவிவேகிகளும், மற்றுப் பக்திஸ்ரத்தையுள்ள பலரும் கூடியுள்ளது. இது, ஒன்பதுவருஷமாக, வருஷமஹோற்சவம் கொண்டாடும் காலத்தும், ஸ்ரீ சங்கரஜயந்தி கொண்டாடு நாள்களிலும், பிரதிவருஷம் சித்திராபௌர்ணமி தினத்தும், கற்றுணர்ந்த பலரால் பிரசங்கங்கள் நடாத்திவருவதுடன், அச்சமயங்களில் விஜயஞ்செய்யும் சாதுக்களுக்கும் தேசர்கட்கும், நூற்றுக்கணக்கான ஏழைப் பிரஜைகட்கும் (குறைகூறற் கிடந்தராது) ஜாதிசமய வேற்றுமையின்றியே அன்னமளித்துப் புண்ணியம் சேகரித்துவருவது எல்லோரும் நன்கு மதிக்கத்தக்க காரியமேயாம்.

வதால் அவரை விஷ்ணுபக்தரெனக் கொள்ளலாமென்றுஞ் சொல்லுகிறார். இஃதென்ன அத்வைதம்? சொல்லுவதொன்றும் நடப்பதுவேறுமா?

"சொல்லுதல்யார்க்கு மெளியவரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்"

என்றார் தெய்வப்புலவர் திருவள்ளுவனார். (உ) Max Muller, Wilson முதலானோர், சங்கரர் உதித்தகாலம் கி. பி. 788ம் ௵ என்றும், அவர் பரிபூரண தசையடைந்தகாலம் கி. பி. 828ம் ௵ என்றும் கூறுகிறார்கள். புத்தமத நூல்கள் முற்றிலுமுணர்ந்து அதைப்பற்றிய சில முக்கியமான புத்தகங்களெழுதிய பண்டிதர் Rhys Davids என்பவர், (ஏறக்குறைய கி. பி. 760—820) இவ்வருஷங்களுக்கிடையிலே ஸ்ரீசங்கரர் காலமாயிருக்கலாமென உத்தேசிக்கிறார். (௩) இது நம்பக்கூடியதாகக் கொள்ளலாமென்று, சங்கரர் ஜீவதசையைப்பற்றியும், அவரது தத்துவஞானத்தைப்பற்றியும் ஓர் சிறுநூல் எழுதிய C. N. கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்பவர் சொல்லுகிறார். (௪) Gough என்பவர், சங்கரர் கி. பி. 8-வது நூற்றாண்டுக்குக் கிட்ட, ஓங்கி மஹாகீர்த்தியுடன் விளங்கினதாகக் கொள்ளுகிறார். (௫) சம்ஸ்கிருத பண்டிதராயும் பம்பாய் நகரத்து ஹைகோர்ட்டு ஜட்ஜாகவுமிருந்த Telaug என்பவர், தனது சோதனையின்படி சங்கரர் கி. பி. 6-வது நூற்றாண்டின் பிற்பாகத்திலிருந்ததாகக் கொள்ளவேண்டுமென வற்புறுத்திக்கூறுகிறார். பேர்பெற்ற Dr Bhandarkar அபிப்பிராயமு மிதுவேயாம். (௬) இவைநிற்க, கொச்சிசமஸ்தான ஜோதிஷர் C. V. பிச்சு ஐயரென்பவர், 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் (24 - May, 1910) 'ஸ்ரீசங்கர பகவத் பாதாசார்ய சுவாமிகளின் அவதாரகால நிர்ணயம்' என்னு மகுடஞ் சூட்டி யெழுதிய நீண்ட கடிதத்தில் ஓர் ஜாதக சக்கரம்போட்டு அது சங்கரரதே யென்றும், அதை வாதித்து அதன்படி, தான் மிகு பிரயாசைப்பட்டுக் கணித்ததில், இவ்வாசாரிய ஸ்வாமிகள் இற்றைக்கு ஏறக்குறைய 1093-வருஷங்கட்குமுன் வெகு பிரபலத்துடனிருந்ததாகவுங்கூறுகிறார். இவ்வரிய ஞாபகப்பத்திரம் 'ஹிந்து' பத்திரிகையிலும் (21-June, 1910) இங்கிலீஷில் மொழிபெயர்க்கப்பட்டு பிரசுரமாயிற்று. (௭) சங்கரரியற்றிய கிரந்தங்கள் யாவும் 20-புத்தகங்களாக ஸ்ரீரங்கத்தில் அச்சிட்ட T.K. பாலசுப்ரமண்யம் என்பவர், அப்புஸ்தகவரலாற்று விளம்பரத்தில்,

சங்கரர் 2000-வருடங்கட்கு முன்னரே யிருந்தவரெனக்கூறுகிருர். (அ) வடக்கே ஆரிய சமாஜஸ்தாபகரான ஸ்வாமி தயானந்தர், தனது 'சத்யார்த்ததீபிகை' எனு நூலில், சங்கரர் 2235-வருடங்கட்கு முன்னமேயிருந்தவரெனவும்; அவர் வேதோபநிஷத்துக்களின் அதிகாரம்பெற்ற அத்வைதமதத்தைத் திக்கெங்கும் ஸ்தாபித்தபின்,—இரண்டு ஜைனர்கள் அகத்தேஜைனரேயாயினும்வேதாபிமானிகளெனவேஷம்போட்டு கரவடத்துடன் சங்கரரையடுத்து அவரது தயையும் கிருபையும் பெற்றும், பெருந்துரோகிகளாய் அவர்க்கு விஷமிட்டதாயும்; அதனுல் சங்கரர் பசியற்று, ரணபாதைபட்டு ஆறுமாதம் கழிந்தபின் பூரணதசையடைந்ததாயும் சொல்லுகிருர். இவ்விருத்தாந்தம் மெய்யேயாயின்,—தன்னை யுணர்ந்த மஹா ஞானியான சங்கரர் அச்சைனப்பாவிகள் மாயத்தை யுணராமலேயிருந்ததுபற்றி எமக்குப் பெரும் விந்தையும்; அவர் தனக்கு இத்துர்மரணம் நேரிடுமெனவறியாதேயிருந்தது பற்றி மிகப் பரிதாபமுமுண்டாகின்றன! உண்மை யிவ்வாறிருக்க, 'அறிவுடையொருவனை அரசனும் விரும்பும்' என்றபடி, சங்கரரது அபாரமான மனோசக்தியாலும், மேம்பட்ட பிரசங்க சாமர்த்தியத்தாலும், வெல்லமுடியாத வாதவன்மையாலும், அவர் திக்குவிஜயம்செய்ய, அதுபற்றி, இப்பரதகண்ட முழுமையும் குரு பக்தியுடன் வணங்கிநிற்பதைக்கண்ட ஜைனர்கள், அவர்மேற் பொருமைகொண்டு அவர்க்குத் தீங்கிழைத்ததாக நாம் கொள்ளவேண்டியிருக்கிறதேயன்றி, சங்கரர் ஜைனர்க்காவது புத்தருக்காவது யாதொரு துன்பமும் செய்தவராகக் காணவில்லை; அதற்குத் தக்க சரித்திர ஆதாரங்களுமில்லையென மேற்சொன்ன கிருஷ்ணசுவாமி ஐயருங்கூறுகிருர். (கூ) திருஞானசம்பந்தர் காலமறிய பலவிடங்களிலுள்ள சிலாசாஸனங்களைப் பிரயாசையுடன் சோதித்த—காலஞ்சென்ற திருவனந்தபுரத்து தர்க்க - தத்துவசாஸ்திர பண்டிதர் - சுந்தரம்பிள்ளை கூற்றின்படி, சங்கரர் சம்பந்தருக்குப் பிந்தியவரெனவும், அதாவது இற்றைக்கு 1300 அல்லது 1400 வருடங்கட்கு முன்னிருந்தவரெனவும் நாம் கொள்ளவேண்டும். (க0) 'நியூ இந்தியா' பத்திரிகையில் (23 - December, 1916) T. S. நாராயணசாஸ்திரி என்பவர் சங்கரர் காலத்தைப்பற்றி எழுதியிருக்கிருர். அதிலே அவர், மேற்சொன்ன கொச்சிசமஸ்தான ஜோதிஷர் பிச்சுவையர் காட்டிய ஜன்மபத்திரம், காஞ்சிபுரம் காமகோடிபீடத்தை வகித்திருந்த சிதம்பரம் - அபிநவசங்கரர் என்னும் பெயருள்ள ௬௮-வது சங்கராசாரியருடையதெனவும்; ஆதிசங்கரருடையதல்லவே யல்லவெனவும்; ஆதிசங்கரர் உதித்தகாலம் கி. மு. 509-ம் வருஷமெனவும்; அவர் பூரணதசையடைந்தது கி. மு. 477-ம் வருஷமெனவும் சொல்லுகிருர். (கக) சங்கரர் காலம், மேற்சொன்ன ஜைனநூலிற் செப்பியதே

சரியெனற்கு கும்பகோண மடத்துப்பட்டத்தொகை ஆதார மாக நிற்கிறதென 'அபிதானகோசம்' கூறுகின்றது. (கஉ) 'ஹிந்து' பத்திரிகையில் (Feb. 4—1918) ஓர் ஆயுர்வேதபண் டிதர் K. G. நடேசசாஸ்திரி என்பவர், கி. பி. 8-வது நூற்றாண் டில் சங்கரர் காலமென ஐரோப்பியபண்டிதர்கள் சொல்வது நிஸ்கரிக்கப்பட்ட பொய்யென்றும்; [சீன புத்ததூதர்] Hieunt Sang காலமாகிய 7-வது நூற்றாண்டிலேயே, புத்தமதம் க்ஷீண தசையிலிருந்த ஞாயம் ஒன்றே போதுமென்றும்; புத்தமதம் வலித்து செழித்து எங்கும் பரவியிருந்தகாலம் சங்கரர் காலமா தலின், கி. மு. ஐந்தாவது நூற்றாண்டே அவரது நம்பக்கூடிய காலமென குரு சம்பிரதாயமும் குறிப்பிக்கிறதென்றும், மிகு ஆவேசத்துடனெழுதியிருக்கிறார்.

☞ [பிழைதிருத்தம்.—இப்புத்தகத்து கoஎ-வது பக்கத்தடியில்,— 'இவைகளில் கௌஷிதகி என்பதை நீக்கி அதற்குப்பதிலாக ந்ரிஸிம் ஹதாபினி என்னும் உபநிஷத்துக்கு, ஆக பனிரெண்டுக்கும் ஸ்ரீசங்கரா சாரியர் பாஷியஞ்செய்திருக்கிறார்' என்று ஞாபகப்பிசகாயெழுதியதை, இவ்வுபநிஷத்து கட்கும்,ந்ரிஸிம்ஹதாபினி என்னும் உபநிஷத்துக்கும், வேதாந்தசார்புள்ள எல்லா உபநிஷத்துக்களுமே ஸ்ரீ சங்கரர் பாஷியஞ் செய்திருக்கிறார் என்று வாசிக்கவேண்டுகோள்.]

---

## மாயை.

அத்வைதத்தின் முக்கியகொள்கை யாதெனின்,—"தத் துவமசி" நீ அதுவாகிறாய்—என்னு மஹாவாக்கியத்தின் முடி வாம். பிரம்மம் ஒன்றே நித்திய, நிர்க்குணவஸ்து; மற்றெல் லாம் மித்தையே. ஜீவாத்மா பரமாத்மா இரண்டும் அபேதமே. பேத எண்ணத்துக்கு ஹேது அஞ்ஞானமே. அஞ்ஞான நீங்க, ஜீவாத்மா தன் நிலைமையையுணர்ந்து பந்தநிவிர்த்தி, அதாவது மோக்ஷமடைகிறான், பிர்ம்மத்தில் லயமாகிறான் என்பது தான் அத்வைதம். அவ்வஞ்ஞானம் அல்லது அறியாமை, எப்படி ஜனித்ததெனின், அது மாயையின்காரியமாம். சிரசினின்று சிகை உதிப்பதுபோல, பிரம்மத்தினின்றும் பிரபஞ்சம் உதித்த தெனவும், அது மாயாகாரியமெனவும் அவ்வேதாந்தம் கூறு கின்றது. ஆசாரிய ஸ்வாமிகளது வியாக்கியான பாக்கியம்பெற்ற உபநிஷதங்களி லொன்றாகிய முண்டகோபநிஷத்தில்,

"சிலந்திப்பூச்சி [அல்லது—பட்டுப்பூச்சி] நூலைத் தன்னிடமிருந் தே உற்பத்திபண்ணி பின்பு எவ்வாறு கிரஹிக்கின்றதோ; எப்படிப் பூமியில் விருக்ஷம் செடி முதலியவைகளுண்டாகின்றனவோ; ஜீவித் திருக்கும் மனிதனிடமிருந்து தலைமயிர்க ளெப்படியுண்டாகின்றன வோ, அப்படியே அழியாப் பரமாத்மாவினின்றும் இப்பிரபஞ்ச முண் டாகின்றது.'!

எனச் சொல்லப்பட்டிருக்கிறது. கபிலராலுண்டான சாங்கிய மதத்தில் அவிவேகம் என்பதும்; கௌதமர் உண்டாக்கிய நியாயமதத்தில் மித்தியாஞானம் என்பதும், வேதாந்தத்தில் அவித்தையெனப்படுகிறது. இம்மதங்களின் முடிவானகருத்து ஒன்றேதான்,—அதாவது அஞ்ஞான நிவிர்த்தியாம். அவித்தை நிவிர்த்திதான் ஆநந்தப் பிராப்தியென்பதும், அவ்வானந்தம் ஆத்ம தரிசனத்தாலுண்டாவதென்பதும், அதுவே மோக்ஷம்; முக்தி, அல்லது மோக்ஷமென்பதும் தான் வேதாந்தம்.

"ஈஸ்வரனுடைய ஓஜஸ்ஸாகிய சக்தியை (பிரபஞ்சத்தை) வியஷ்டிப்படுத்தும் தேஜஸ்ஸை, மாயையென்று ஸ்மிருதிசொல்லுகிறது; மாயை ஈஸ்வரனின்று அபின்னமானது. அவ்விரண்டின் சம்பந்தமானது, சங்கரனும் அதன் கிரணங்களும் எப்படி அபின்னமோ; அக்கினியும் அதன் தகனசக்தியும் எப்படி அபின்னமோ, அப்படியேயுள்ளது"—சநாதநதர்மம்.

இம்மாயை மூலப்பிரகிருதியெனவும், பிரகிருதியெனவும் சாதாரணமாய் ஞானநூல்களில் வழங்கிவருகின்றது

சங்கரர் தனது தைத்திரீய உபநிஷத வியாக்கியானத்தில் பிரம்ம லக்ஷணங்கள் கூறிவருவதில், அக்குணங்கள் தோற்றப் பிரபஞ்சத்திலுள்ள வஸ்துக்களின் குணங்களுக்கு சற்று வேறான வையென்றும்; ஆயின், பிரம்மம் இத்தன்மைத்தெனச் சொல்ல முடியாதென்றும்; அப்பிரம்மமொன்றே, நித்தியமாய், தன்னுடைச்சோதியாய், பகுக்கப்படாததாயுள்ளதென்றும்; ஆனந்த மயமானதென்றும் கூறுகிறார். பாரமார்த்திகத்தில் உலகம் பொய்யெனல் சங்கரர் கொள்கையென முன்னமேசொன்னோம். ஆனால் விவகாரத்திலோ, இந்திரியத்தோற்றமான வஸ்துக்களும் மனிதர் முதலான அநித்ய ஆத்மாக்களும் இல்லாதன வல்லவென்பதும்; ஒருபக்ஷத்தில் பிரம்மம் எவ்வளவு நித்தியமோ அவ்வளவுக்கு உலகம் நித்தியமென்பதும்; யதார்த்த தத்துவத்தில் பிரபஞ்சமும் பிரஹ்மமும் ஏகமேயாதலின், இவ்விரண்டும் பகுக்கப்படாதவையாகவே கொள்ளவேண்டியதென்பதும் அவர் கொள்கை.

பிரம்மத்துக்கு வேறாக எண்ணப்படும் உலகம் பொய்யென்பதும்; அப்படி வேறென்னும் மனோபாவனை யதார்த்த ஞானமுதித்தவுடனே மறைந்துபோகின்றதென்பதும் சங்கரர் அபிப்பிராயம். உள்ளபடி சர்வமும் பிரஹ்மமயமே எனும் சாந்தோக்ய உபநிஷதக்கருத்தும், சங்கரர் கருத்தும் ஏகமேயாம்.

இங்கு மாயைக்குத் திரும்பிவருவோம்:

பிரபஞ்சம் மாயையினின்றுமே உண்டானதெனின், பிரபஞ்சத்திலுள்ள அளவிலாப் பேதங்கட்கும் மூலமான இம்மாயை எங்கிருந்து, எவ்வாறு ஜனித்தது? சங்கரர் பிரம்மம் ஞானமயமெனக் கூறி, மாயையும் பிரம்மத்துக் குரியதெனவே

கூறுகிறார். ஞானமயமாயேயுள்ள பிரம்மத்தினின்றும் அஞ்ஞானம் எப்படியுண்டாகும்? பிரம்மம் (நிஷ்கிரியா) செயலற்றவரெனவும் சங்கரர் சொல்லுகிறார். செயலற்றவரினின்றும் செயலெப்படி யுண்டாயிற்று? என்ன முரண்! இயற்கையறிவிலேயேயுதிக்கு மிஞ்ஞாயங்களுக்கு, சங்கரர் நூல்களில் தக்க திருப்திகரமான சமாதானங்கள் காண்கிலம்! அவித்தை அநிர்வசனமானதென்றும்; அது பிரம்மத்தோடுகூடியது, அல்லது கூடாதேயிருப்பது எனச் சொல்லமுடியாதென்றும் கூறுகிறார். ஜீவாத்மா தன் நிஜவடிவமறியாதிருப்பதே அஞ்ஞானமென்பதும்; அவ்வஞ்ஞானம் மெய்ஞ்ஞான முதயமானதே அழியுமென்பதும் சங்கரர் மொத்த அபிப்பிராயம். மாயாகாரியங்கள் மட்டும் வருவனவாயும் போவனவாயு மிருந்தாலும், மாயை எப்போது முளதெனவும், நாசமற்றதெனவும் சங்கரர்கூறுகிறார். ஆனாலும், மாயை அநித்திய தோற்றங்களை ஜனிப்பிக்கும் சக்தியாயிருப்பினும், அதற்கு நிராதீனத்துவம் (absolute existence) கிடையாதென்கிறார். அநாதியாயும், நித்தியமாயுமுள்ள வஸ்து ஒன்றே யல்லது இரண்டல்ல. ஆதலின், பிரஹ்மமும் நித்தியம் மாயையும் நித்தியமெனச் சங்கரர் சொல்வது தர்க்கசாஸ்திர விருத்தமெனவே கொள்ளவேண்டும். மேலும், ஜெர்மனி தேசத்து (Philosopher) தத்துவஞானி Kant என்பார், சில அம்சங்களில் சங்கரரை ஒத்தவராயினும், மாயை என்னும் ஓர் வஸ்துவுளதென எங்குமே பிரஸ்தாபிக்கவில்லை. அவ்வாறே, இங்கிலண்டுதேசத்துப் பெருந்தத்துவஞானி Herbert Spencer என்பவரும், மாயை என்பதைப்பற்றி தமது பாரித்தநூல்களில் எங்குமே சொல்லவில்லை. ஐரோப்பாகண்டத்து மற்றத் தத்துவ ஞானிகளுமிவ்வண்ணமே யெனக்கொள்க.

"பேதமுறுபுந்தியே மாயையாகும் பெரிதுவருந்தியுமிதனைப் பேர்த்தல்வேண்டும், போதமுறும்பேற்றினு லன்றிமாயைப் பொருநதியின் கரைதோன்று பொருந்தத்தோன்றில், எதமறுமப்பதமே யிறவாவீடாமிம்மாயை பிறப்பிடமே தென்னவேண்டாஞ், சேதமுறக்கொல்வழியே தென்றுதேர்வாய் சிதைவுற்றுலதனியல்பு தெரியுமன்றே."—ஞானவாசிட்டம்.

"எப்பொருளுமாயையினு லெனச்சிலவரியம்புவர்காண்
மெய்ப்பரமன்றனையொழிய வேறெருமாயையுமில்லை
ஒப்பரியபரனுழிய வொருமாயையுண்டாகில்
அப்பெரியபரன்பெருமைக் கதுநேரேயழிவன்றே."—பிரமகீதை.

---

## ஆத்மா.

நாகரிகநிறைந்த நமது ஆரியதேசத்திலும் பிறதேசங்களிலும், பௌத்தர் தவிர மற்றெல்லா மதஸ்தரிலும், ஆத்மா என்னுமோர்வஸ்துவிப் பிரபஞ்சத்திலுண்டெனு நம்பிக்கை பரவியுளதெனச் சொல்லலாகும். இவ்வாத்மா, ஜீவாத்மா பரமாத்மா

வென இருவகைப்பட்டதெனவும்; ஜீவாத்மா, ஜீவன், மனுஷ னெனவும்; பரமாத்மா, ஈஸ்வரன் கடவுள், பிரஹ்மமென வும் சித்தாந்த வேதாந்த கிரந்தங்கள் கூறுகின்றன. ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு என்பது துவைதம். ஜீவாத்மா வேறு எனும் பாவம் முதலிலும், பின்புஅது பரமாத்மாவின் அம்சமாய் ஏகமாம் என்பது விசிஷ்டாத்வைதம். ஜீவாத்மாவும் பரமாத் மாவும் எக்காலமுமொன்றே யென்பதும்; ஜீவன் அவித்தை யினுல் மறைக்கப்பட்டுப் பரமாத்மாவையறியவில்லையென்பதும் அத்வைதம். இவ்வாறு கூறப்பட்ட ஆத்மா மனிததேகத்தில் எங்கேயுளது; எங்கே ஒதுக்குக்குடியிருப்பது; எங்கே பதுங்கி யிருப்பது; எவ்வுருவமுளது; எத்தன்மையது; திரிஸ்யப் படுவதா அல்லாததா; அது அப்புருவமா; தேயு உருவமா; வாயு உருவமா; எனு மிக்கேள்விகட்கும் இவைபோன்றவை கட்கும் சரியான, நிஷ்கிரிஷையான விடை எஞ்ஞானனும் அளிக்கவேயில்லை. மொத்தமாய் ஆத்மா மனோவாக்குக் கெட் டாததெனவும்; சொல்லுக்கடங்கா வஸ்துவெனவும்; அதைத் தரிசித்தவர்க்குமட்டுமே தெரியுமெனவும் சொல்லப்பட்டிருக் கின்றது.

ஆத்மா இன்னதெனவறிய நம்மதத்துக்குரிய சகலகலை ஞா னங்கட்கும் பிறப்பிடமாகிய உபநிடதங்களில் விபரங்கிடைக்கக் கூடுமென வெண்ணினுலோ, அங்குங்கிடையாது. ஒரு உபநிஷ த்தில் கூறியிருப்பது மற்றோர் உபநிஷத்திலில்லை. ஒன்றுக்கொ ன்று முரண்பட்டும் பேதப்பட்டுமேயிருக்கிறது.

சாந்தோக்ய உபநிஷத்தில் (1)

"இப்பிரம்மபுரமாயுள்ள சரீரத்தில் ஒரு சிறிய தாமரைமொட்டுப் போன்ற குகையிருக்கின்றது. அதன் கண் அந்தராகாசமிருக்கிறது. இதில் ஆத்மாவசிக்கிறுன்"—எனச் சொல்லப்பட்டிருக்கிறது.

(2) பிராணனுள்ள தேகத்தில், அதன் சாதாரணஸ்திதியில் ஆத்மா இருதயக்குழியில்வசிக்கிறது--[பிரகதாரண்யக]; ஆயின், ஆத்மாவுக்காக இருதயத்திலே வெற்றிடமிருக்கிறதா என்பது சொல்லப்படவில்லை. (3) பூர்வ மூலவாக்கியங்களில் [பிரகதா ரண்யக] ஆத்மா அரிசி அல்லது வால் கோதுமையளவென்றும்; (4) பிந்திய வாக்கியங்களில் [கதா] அங்குஷ்டப் பிரமாணமென் றும்; அக்காரணம்பற்றியே அது குள்ளன் என அழைக்கப்படு கிறதென்றும்; (5) உருவத்தில் [ஷ்ததரிய] மனுஷன்போன்ற

தென்றும்; மஞ்சள் நிலையங்கிபோற் றோற்றுவதென்றும்; (6) அது [பிரகதா.] மின்னலின் பளபளப்புபோன்றதென்றும்; (7) புகையின்றிய [கதா] ஒளிபோன்றதென்றும்; (8) அது [பிரகதா.] தன்னுணர்ச்சி, பிராணவாயு, கண் காது உடைய தென்றும்: பிரிதிவு, அப்பு, வாயு, ஆகாசம் அதனுள்ளடங்கி யிருக்கின்றனவென்றும்: ஊஷ்ணமுள்ளது மில்லதுமாயும்; இச்சையுள்ளது மில்லதுமாயும்: கோபமுற்றது மற்றதுமாயும்; விதிக்கடங்கியது மடங்காததுமாயும் அஃதிருக்கின்றதெனவும் சொல்லப்பட்டிருக்கின்றது. (9) இதரவாக்கியங்களில் [பிரகதா.] அது மனமாத்திரமே, அல்லது தன்னுணர்ச்சி (consciousness) மட்டுமேயுடையதென்றும்; (10) பிறிதோர் புராதன விநோத வாசகத்தில், [தைதரிய] மனிதனுக்கு நான் காத்மாக்கள் உளவென்றும், அவை ஒவ்வொன்றும் மனிதன் போன்றதே யென்றும் சொல்லியிருக்கிறது.

பழைய உபநிஷதங்களில் கிழலிட்டதுபோற் காணப்படும் இக்கோட்பாடு, பிந்திய வேதாந்தசிந்தனைகளில், பஞ்சகோசக் கொள்கையெனும் பெயருடன் அபின்னபாகமாகச் சேர்க்கப் பட்டுள்ளதென,மேற்சொன்ன பண்டிதர் Rhys Davids என்பார் கூறுகிறார். அதாவது, முந்திய வேதாந்தகிரந்தங்களில் இக் கொள்கை இப்பொருளுடனில்லை யென்பது கருத்து.

ஸ்வப்னத்தில் ஆத்மா தேகத்தினின்றும் விலகியிருப்ப தால், ஒருமனிதன் நித்திரையிலிருக்கையில் அவனைத் திடீரென் றெழுப்பக் கூடாதென்றும்; அப்படிச் செய்யின் (ஆத்மா அவன் தேகத்தில் மறுபடிப் பிரவேசியாவிடின்) அவனைக் குணப்படுத் தல் கூடாததாகுமென்றும் பிரகதாரண்யகோபநிஷத்து மொழி கின்றது. அன்றியும், ஆத்மாவானது சில வியாதிகளில் நீங்கியி ருப்பதுபோல, சுஷுப்தியவஸ்தையிலும் நீங்கியிருக்கிறதாகச் சொல்லியிருக்கிறது [ஐதரிய-ஆரண்யக]. மேலும், ஸ்வப்னவஸ் தையில் விலகியுள்ள ஆத்மா தன்னிஷ்டம்போலத் திரிந்துகொ ண்டு; வல்லூறானது அலைந்து உழன்று தன்னிறகுகளை யடித் துக்கொண்டு தன் கூடுபோய்ச்சேருமாறு, ஆழ்ந்த நித்திரையில் யாதொன்றும் விரும்பாத, யாதொன்றும் மனோகற்பனை பண் ணாத நிலையெதுவோ அந்நிலைக்குத் திரும்பிப்போகின்றதென பிரகதாரண்யக உபநிஷத்து கூறுகின்றது! ஆத்மா சரீரத்திற் றங்கியுள்ளபோது அநுபவித்த விஷயங்களின் ஞாபகமே கன

வாதலின், கனவு பொய்யெனவும்; காலம், இடம், காரணத்து வம்—இம்மூன்றும் கடந்ததெனவும்; ஆனலது நற்பாக்கியம் அல்லது துர்ப்பாக்கியத்துக்கு முன்னெச்சரிக்கையாயிருக்குங் கால் மெய்யெனவும் கொள்ளப்பட்டிருக்கின்றது. இன்னும் சொல்லவேண்டின், கனவற்ற முழுநித்திரையில் 72000-நரம்புகள் மூலமாய் ஆத்மா தேகாத்தியம், மயிர்களிலும் நகங்களிலும் கூடப் பரவுகிறதென்றும், அப்போதுதான், தான் ஓய்வு எடுத்துக்கொள்கிறதென்றும் சொல்லியிருக்கிறது.

புராதன உபநிஷத்துகளுக்குப் பிந்தியதும், மிகச்சிறியதுமான மாண்டூக்யோபநிஷத்தில், ஜாக்கிரம், ஸ்வப்னம், சுஷுப்தியென்னு மூன்று அவஸ்தைகளுடன் துரியாவஸ்தையென்பதொன்று சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வவஸ்தையிலுள்ள புருஷன்தான், தன் ஆத்மாவும் பரப்பிரஹ்மமும், ஏகமேயென்றறிகிறுனென்பது உபநிடத முக்கியவாக்கியம். தன் ஆத்மதத்வமுணரவே பரமாத்மாவின் உணர்ச்சியுண்டாம். “பொன்னை மறைத்தது பொன்னணிபூஷணம்” எனத் திருமந்திரம் கூறியபடி, இதுவே வேதாந்தநூல்களின் துணிபு. இதுதான் முக்தியடைந்தவன் நிலையாம். ஜீவன் முக்தத்வம் இதுவேயாம்!

மேற்காட்டியபடி பலவாறுய் ஆத்மாவைப்பற்றி முரண்படக்கூறிய உபநிடதங்கள்,—வரையறையாய், தெளிவாய், தீர்க்கமாய், ஆத்மாவென்பது கருத்தரிக்கும் க்ஷணத்திலா; அல்லது சிசுவானது துரிதமாய்க் கர்ப்பாசயத்திற்செல்லும்போதா; அல்லது பிரஸவமாகுநிமிஷத்திலா சரீரத்திற் பிரவேசிப்பது, என்னும் அதி முக்கியமான விஷயத்தைக் கூறவேயில்லை! இவ்விஷயத்தைச் சார்ந்த உத்தேசங்கள் யாவும், இப்போது மேற்கண்டத்தில் பனி மூடியதுபோல் மந்தாரமாயெப்படியுளவோ, அப்படியே இந்துதேசத்தில் அக்காலத்துமிருந்தனவென்று பண்டிதர் R. Davids அபிப்பிராயங்கொள்கிறுர். இவ்வபிப்பிராயம் தவறேயாம். ஏனெனில், அக்காலம்போல் இக்காலத்தும் நமது தேசம் இவ்விஷயத்தில் யாதோர் தெளிவும் அடையாதேயுள்ளது! அக்காலும் எக்காலும் கதி ஒன்றேதான்!

மனிதன் பூமியிற்பிறந்ததும், சிசுவுக்கு ஜன்மசக்கிரம்போட்டு, தக்க ஜோதிஷரைக்கொண்டு ஆயுள்நிர்ணயம்செய்வது நமது நாட்டுவழக்கம். ஜாதகம் சரியாயுணர்ந்து கணிப்புஞ்சரியாயின்,

ஜாதகம் பெரும்பாலும் பொய்க்கிறதேயில்லை. இது நம்மநுபவ மேயாம். இப்படியிருக்க, சாந்தோக்கியோபநிஷத்தில் மனிதன் ஆயுள் நிர்ணயத்தைப் பேசியிருப்பதை மேல்நாட்டார் பரிகசிக் கிறார்கள். மேற்கண்டத்தார் பெரும்பாலார் ஜோதிஷவித்தை, ரஸவாதவித்தை, (alchemy) பிரமவித்தை முதலானவைகளைப் பழிக்கிறார்கள். அப்பழிப்புக்குக் காரணம், அறியாமையும் அநு பவமின்மையுமேயாம்.

ஆத்மாவானது ஓர் ஜீவன் பூமியில் உதிக்காமுன் வேறோர் தேகத்திற் றங்கியிருந்ததாயும் [பிரகதா.]; மண்டையெலும்புப் பொருத்து வழியாய், உற்பத்தியாகும் தக்ஷணமே இடையிற் சேர்க்கப்படுகிறதாயும் [தைதரீய]; கால்விரல்களின் நுனிகள் மூலமாய், வயிற்றின்வழியாய் மேல்நோக்க சிரசில் பாய்ச்சப் படுவதாயும்[ஐதரீய]; இப்படிப் பலவாறாய்ச் சொல்லப்பட்டிருக் கிறது. மனிதனுக்குப் பிராணன்போகையில் ஆத்மா தேகத் தைவிட்டு நீங்கிவிடுகிறதென்பது நமது சாஸ்திரக்கொள்கை. ஆனால் அது இன்னபடி நீங்குகின்றதென்பதாவது, அதன் போ க்கிட மின்னதென்றாவது தெரியவேயில்லை. பிரகதாரண்ய கோபநிஷத்தில் ஓரிடத்தில், பிராணன் நீங்குங்கால் ஆத்மா ஆகாயத்திற் செல்லுகின்றதெனவும்; மனிதனிடமிருந்து அவன் கர்மம் தவிர வேறொன்றும் மிச்சமாய் விடப்படவில்லை யென வும் சொல்லியிருக்கிறது. இக்கொள்கைதான் பின்தோன்றிய சாக்கிய புத்தர் மதத்துக்கு கடைகாலாய் நின்றதெனத் துணி பாய்ச்சொல்லலாம்.

> "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
> உடம்போ டுயிரிடை நட்பு"—குறள்.

மேலே யிறுதியிற்சொன்ன ஆத்மசம்பந்தக் கோட்பாடு ஒரு பெரு ரகசியப்பொருளாயும், பகிரங்கத்திற் றர்க்கிக்கத்தக்க விஷயமல்லதாயும், குருமூலமாய்த் தெளிய வேண்டியதாயும் சொல்லியிருப்பதால், இவ்வரும் பெரும் விஷயத்தை ஈங்கு வாதிக்காது விடுத்தாம்.

"அவ்வறிவு சங்கற்பத்தாற் கட்டுண்ணு மதுவிடில் வீடாமந்த வறிவுதன்னைச், செவ்விதினி யறிந்தனையாற் போகத்திச்சைச் செகக் காட்சி யனைத்தினையுந் தீர்தியானாய், எவ்வமறநிறைமனத்தா லடையற் பால யாவுமடைந்தாய் காட்சிக் கெட்டாதொன்றிற், கவ்வையறவண்ட சென்றும் மூர்ச்சனுமாய்ச் சுருத்திவுறு மயச்சமெனும் லவிலீர்வாய்."

"படர்சித்துருவாய்ப் பிரிவிலனும் பரம்பாரம் பத்திவனுய்த்
திடமுற்றனது கனவடிவைவிண்ணை சங்கற்பஞ் சேராதே
டணுவுயிர் கொல்லுறுபகைவன் கருத்தில் வஞ்சமிலாகட்பிற்
றொடர்பானவனே யெனக்காணு மவனேகண்டோன் ஆய்தாக."—
[ஞானவாசிட்டம்.

பகைவனின் உறவாளி அல்லது நண்பனாக உண்மையிலே களங்கமறக் காண்பவனெவனோ, அவனே ஆத்மதரிசனஞ்செய் தோனென்பது இப்பாடலின் கருத்து. இத்தகைய புண்ணியனை யிவ்வுலகிற்காணல் அரிதினு மரிதேயாகும்! மஹா துர்லபமாம்!

---

## சங்கரவிஜயம்.

சங்கரர் அத்வைத மதஸ்தாபனத்துக்காக திக்கெங்கும் வாத விஜயங்கள் செய்துவருங்கால், அவற்றுள் ஓர் விஜயம் அரும்பெரும் விஜயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது: அவர் ப்ரயாக்கைவிட்டு மஹிஷ்மதியெனும் ஊருக்குச் சென்ற போது, அங்கே மந்தனமிஸ்ரர் எனும் பெயரோடு மிகு சம்பத் துடன் வசித்திருந்த ஓர் பிரதான சமஸ்தானபண்டிதரை வாதத் தில் வென்றதாயும்; அதன்பின், அக்காலத்து விரிந்த கல்வியும் பெருஞ் சாதுர்யமும் பெற்றிருந்த அவர் மனைவி பாரதியென் பார், சங்கரரைத் தன்னுடன் வாதிக்கக்கேட்டுக்கொண்டதாயும்; அதற்கவர் ஸ்திரீயுடன் வாதிக்கத் தனக்குச் சம்மதமில்லையென் று முன்னர் சொன்னதாயும்; அதற்கம்மாது ஓர் மேற்கோள் காட்டியதன்மேல் அவர் சம்மதித்து (முன்னம் அவர் கணவனு டன் வாதித்ததுபோல) பதினேழுநாள் வாதித்ததாயும்; அவ் வாதத்தில் பாரதியென்பார் சாஸ்திரங்களை ஒன்றன்பின்னொன்றாக வெடுத் தாண்டுவந்தும், சங்கரரை எவ்விதத்திலும் வெல்லமுடியா தபடி திகைத்து, (அவர் சந்நியாசியாதலின்) அவரைக் காம நூலிற் பரிக்ஷிக்கத் தீர்மானித்து அவரை அந்நூலைப் பற்றி வினவ அம்மாது ஆரம்பிக்க, அதுகண்டு சங்கரர் அந்நூல் தான் கல்லாத நூலாயும், அதன்விஷயம் தன்னநுபவமின்றிய தாயு மிருந்ததுபற்றி, தனது கீர்த்திக்கு ஹானி வருமெனவஞ்சி, அம்மாதை யொருமாதத் தவணைதரும்படி கேட்டுக்கொண்ட தாயும்; அது பெற்றபின் அவர் நர்மதா நதிக்கரைக்குப்போய்,

அங்கே யோர் காட்டிலிருந்த வோர் மரத்துவாரத்தில் தன் தேகத்தை யொளித்துவைத்து(அதன் ஆத்மா அதைவிட்டு நீங்கி யிருந்ததால்) அதைச் சாக்கிரதையுடன் காக்கும்படி தன் சிஷர் களுக் காக்ஞாபித்து; ஆங்கே தகனஞ்செய்யச் சமயமாயிருந்த அமருகன் என்னு மோரரசன் பிரேதத்துள் அவர் தன் யோக சக்தியால் பிரவேசித்ததாயும்; தக்ஷணம் அவ்வரசன் உயிர்த் தெழவே அவ்வூர்முழுதும் களித்ததாயும்; அதன்பின்னர் சிறி துகாலத்தில் அவ்வரசன் மந்திரிகளும் மனைவியரும், அவ்வதி சயத்துக்குக் காரணம் யாதாமோர் மஹாத்மாவின் ஆத்மா தம் மரசன் பிரேதத்துட் புகுந்திருக்க வேண்டுமென்று நிதானித்து, தம்மரசன் நீண்டகாலம் ஜீவித்திருக்கவேண்டுமென வாசைகொ ண்டு; அவ்விடத் தெங்கேயாவது தனித்த காட்டிலோ அல்லது குகையிலோ மறைக்கப்பட்ட மானிடதேகமுண்டே லதைத் தேடும்படிக்கும், அப்படிக் காணின் அதை யுடனே கொளுத்தி விடற்கும் ரகஸ்யமாய்த் தூதரனுப்பப்பட்டதாயும், சொல்லப் பட்டிருக்கிறது.

இப்படியிருக்க விச்சமயத்திடையிலே, அம்மன்னன் சரீரத் தை மேற்கொண்டிருந்த சங்கரர், அவ்விராணிகளைக்கூடித் தான் கண்ட சுகாநுபவங்களைப் பின்னர் வெளிவந்த 'அமருக சாதகா' என்னும் பெயருள்ள நூலில் வரைந்தனரென்றும் சொல்லப்பட் டிருக்கிறது.

மேற்சொன்ன விராணிகளின் இதவசனங்கட்கும், சரச சல்லா பங்கட்கும் உட்பட்டிருந்த சங்கரர், தன் சீடர்களுக்குத் தான் பின்பு அவர்களிடம்போய்ச் சேருவதாயளித்த வாக்கை மறந் தனராம்; பாரதி அவர்க்குத் தந்த மாசத்தவணையுஞ் சடுதியில் கழிந்துவிட்டதாம். சிஷர்கள் என்னசெய்வார்கள்! அவர்கள் பயந்து நடுங்கி தங் குருவைத்தேடத் தொடங்குகையில், மரித்த அமருக னென்னு மரசன் ஓரற்புதச்செயலா லுயிர்த்தனனெ னுஞ் சேதிகேட்டு, அவ்வூர்க்குச்சென்று அவன் சேவைகண்டு, சில தத்துவப்பாடல்கள் பாடினராம்; பாடவே, சிற்றின்ப மய க்கத்திலழுந்தி ஒளிமழுங்கிக்கிடந்த சங்கரர் ஞாபகம் அக்ஷண மே கிளம்பியதாம். அச்சிடர்கள், தங்குருவின் ஆத்மா அவ்வர சன் தேகத்திலுளதென வுணர்ந்ததும், அவர் தேகம் ஒளித்து வைத்திருக்கு மிடத்துக்குத் துரிதமாய்ச் செல்லவே, அவ்வூா

வை அவ்வரசன் தூதர்கள் கண்டுபிடித்து ஆங்குசென்று அத் தேகத்தைச்சுட வாரம்பிக்க, அத்தருவாயில் சங்கரர் சரீரத்தினின்றும் பிரிந்திருந்த அவராத்மா, அவரது சரீரத்திலேயே இவ்வாபத்தான ஸ்திதியிற் பிரவேசித்துவிட்டதாம்! அத்தருணம் சங்கரர் விஷ்ணுவை நரசிம்மமூர்த்தமாகத் தியானிக்கவே, அவரச்சமயம் மழை பெய்வித்து அக்னிச் சுவாலைகளை யவித்தனராம்! சங்கரநும் பழையபடியே தன் தேகத்திற்றங்கினராம்!!

இவ்வண்ணம் சங்கர ரமர்ந்த பின்னர், மந்தன ரில்லஞ் சென்று முன்விட்ட வாதத்தை மறுபடிதொடங்கி பாரதி வினவிய வினுக்கட்கெல்லாம் தக்க விடைபகர்ந்து தனது சர்வஞானத்தை நிலைநிறுத்தினராம். பின்னர் சங்கரர் ஸ்ரிங்கிரி மடத்தை ஸ்தாபித்து, தன் சிஷர் யாவரிலும் கல்வியில் மேம்பட்டவராயிருந்த மந்தனருக்கு, சுரேஸ்வர ஆசாரியர் என்னும் பட்டமளித்து, அவரை அம்மடத்துக் கதிபதியாக்கினராம். இப்படியாகவே, மாது சிரோமணியாய பாரதியென்பார், தன் கணவனுந் தன்னைவிட்டுப் பிரிந்திருக்க, தனக்கு வேறு மார்க்கமின்றி தானும் சங்கரர்க்குச் சிடத்துவம் பூண்டொழுகி தன் காலத்தைப் புகழுடனும் யாவருமதிக்கத் தக்கபடியுங் கழித்துவந்தனராம். சங்கரர் ஜீவகாலத்தைப்பற்றி ஓர் சிறு புத்தகமெழுதிய மேற்சொன்ன (M. A. பட்டம்பெற்ற) புத்திமானுகிய கிருஷ்ணஸ்வாமி ஐயர், யோகசாதனப் பலன்கள் அசாத்தியமெனவாவது, யோகக்கலைஞானம் (yoga philosophy) தவறென்றாவது கூறத்துணியாவிடினும், சங்கரரது கிரந்தங்களை போதிய வற்புதங்கள் காட்டுவனவாயிருக்க [நீதிமார்க்கத்தை யோசிக்குங்கால்] சந்யாசம்பூண்ட பெரியாராகிய சங்கரர் மேற்சொன்ன அற்புதம் நடாத்த கொண்ட நோக்கம் அழகியதல்லவென்றும்; அவரது பிற்காலத்து ஆவேசங்கொண்ட அபிமானிகளால் இவ்விஷயம், ஓர் கிளைக்கதை அல்லது உபாக்கியானமாக அவர் ஜீவசரித்திரத்திற் சேர்த்திருக்கக் கூடுமென்றும் உத்தேசிக்கிறார். அன்றியும் இவ்விஷயத்தை தற்போதைய (Science) சாஸ்திரமும், (psychology) ஆத்ம தத்துவநூலும் ஆதரியாததுபற்றி, தீர்மானம் நிறுத்திவைப்பது உசிதமெனக்கூறுகிறார். இது சரியேயாம்.

இடையிலே ஓர் முக்கியவிஷயத்தைக் குறிப்போம். அதாவது: சங்கரர் மஹா வல்லபத்துடனும் தீரத்துடனும் திக்குவிஜயம் செய்துவருங்கால், எங்கெங்கே தெய்வத்துக்கெனப் பேரிட்டு துஷ்கிர்த்தியங்கள் நடந்துவந்தனவோ அங்கங்கே அவைகளைத் தன் நியாயவாளினல் வெட்டியும்; அவர்காலத்து காஞ்சிபுரத்தில் சாக்தேயம் வலிவுற்றிருந்தமையால் அதன் துர்ப்பழக்கங்கள் யாவும் ஒழித்தும்; காணுபத்யம், காபாலிகம் பைரவம் முதலிய மதங்களின் கொடுமைகளையழித்தும்; நாம் முன்னேகாட்டிய அநாகரிகச் சடங்காகிய சமாஸம் என்பதைக் கண்டித்தும், இன்னும் பல்வேறுன சீர்திருத்தங்களையும் செய்து வந்தனர் எனச் சொல்லப்பட்டிருக்கின்றது. இவைகள் ஆக்ஷேபமின்றி உத்தம காரியங்களெனவே கொள்ளவேண்டும்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்."—குறள்.

நமது புராதன ஆரியமதத்தின் குழவியேயாகும் புத்தமதத்தின் மானதசாஸ்திர-நீதிசாஸ்திரக் கொள்கைகள், சாக்கிய கௌதம புத்தர் காலத்துக்கு (நீண்டகால) முந்தியே, நமது ஹிந்து நூல்களில் அடங்கியவையாயும் ஆளப்பட்டன வாயுமிருப்பினும், மனிதனுக்குப் பிராணன் தவிர ஆத்மா வெனுமோர் வஸ்துவுளதெனுங் கோட்பாட்டை அம்மதம் அங்கீகரியாதேயுள்ளது. அன்றியும், 'நார்' அல்லது ஆத்மா என்பதிலுள்ள நம்பிக்கையை வசைபடவுங் கூறுகின்றது. மேலும், இவ்வாத்ம-நம்பிக்கை யில்லாதேயிருந்தும், புத்தர் பாவத்தினின்றும் ஜன்மாந்தர பந்தத்தினின்றும் நீங்கி, நிர்வாணம் அல்லது புத்த முத்தியடைந்தனரெனக் கூறப்பட்டிருக்கிறது. ஆராயின், மேற்கண்டத்தில் சாஸ்திரங்கள் (Sciences) உணர்ந்த பெருங்கல்விமான்களில் ஆத்மா நம்பிக்கையிலாதார் அநேகருளர்; உள்ளவரிலு மநேகருளர். இப்பெரும் விஷயத்தைவாதிக்கும் நூல்கள் ஐரோப்பிய பாஷைகளில் ஏராளமாயுள. அறிய விரும்புவோர், பெரும்பேர்பெற்ற ஜெர்மானியபண்டிதர் Dr. Buchner என்பவரியற்றிய 'Force and Matter' எனும் முக்கியமான கிரந்தத்தைப்பார்க்க. இது Annie Besant அம்மையால் ஆங்கிலபாஷையில் [1884] செவ்வனே மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

"அத்தமியாதசோதி யருக்கனு யளவிலாதாய்
மெத்தியபிணியிலாதாய் மேவரும்பிறப்பிலாதாய்
எத்தலங்களிலுமென்று மியாவுமாயாவுஞ்செய்து
முத்தியுமாகியோங்கு முதற்பரம்பொருளொன்றுண்டு"—
ஞானவாசிட்டம்.

"வேண்டல்வேண்டாமையின்றி மிகைசெலாப்புலன்களாலே
மாண்டபோகங்கடெய்ப்பான் மனங்கலக்குறுன்மற்றதால்
ஈண்டியதெளிவுண்டாமாற் றெளியவேயெல்லையின்றிப்
பூண்டகோங்கிக்குகிக்கப் புலனலாப்பொருளுந்தோன்றும்."—
பகவத்கீதை.

---

## நூன் முடிபு.

வேதாந்தபோதினி அல்லது சமரஸஞானபோதினி எனும் நாமம்பெற்ற விந்நூலுக்கு ஓர் முடிபு எழுதல் ஒழுங்கும் ஆவசியகமுமாதலின், அஃதை யொருவாறுகச் சுருக்கியெழுதுவாம். யாமிதுகாறுமெடுத்துக் கண்டித்துப்பேசிய பன்மதங்களிலும், பொதுவாக உலகத்துள்ள எல்லாமதங்களிலுமே மொத்தஅபிப்பிராய மொன்றுண்டு. அதாவது, இப்பரந்த பிரபஞ்சத்துக்குக் காரணமாய் இரண்டற்ற வோர் பரம்பொருளுண்டென்பதாம். பௌத்தமதத்திற்குப் பிறப்பிடமாய், நிரீஸ்வர மதமெனச்சொலப்படும் சாங்கியமதத்திலும் ஈஸ்வரனில்லையெனுங் கொள்கையில்லை. விவிலியநூல் (Bible) கடவுளில்லையென்பவன் மூடன், பேயன், எனக் கூறுகின்றது. நாம் முன்னே இப்புத்தகத்திற் சொல்லியிருக்கும் ஷண்மதங்கள் அல்லது ஆறு தரிசனங்களின் முக்கிய கருத்தைப்பற்றி, பண்டிதசிரேஷ்டர் Max Muller,

"யதார்த்தத்தில் இவ்வண்ணம் பல தர்சனங்களைக்கூறுகின்ற முனிவரெல்லாரும் இரண்டற்ற ஒரு பரமபுருஷன் உண்டென்று ஸ்தாபிக்கிற விஷயத்தில் ஏகதாத்பரியமாயிருக்கிறார்கள்"—(சநாதநதர்மம்)—

எனவரைந்திருக்கிறார். இங்கிலண்டு தேசத்தில் நாஸ்திகமதச் சங்கத்தலைவராய், பெருநாவலராய், பரமபுருஷராய், சத்திய காமியாய் விளங்கிய Bradlaugh என்பாரும் எக்காலத்தும், எவ்விடத்தும் கடவுளில்லையெனக் கூறவேயில்லை. அவர் காலமுழுதும் சத்திய சந்தேகியாகவேயிருந்தனர். பரம்பொருளை மறுக்கவேயில்லை. அப்பொருள் எது, எத்தன்மைத்து, என நாம் வினவின்,

"அதுவென்று லெதுவென வொன்றுமெக்குஞ் சிக்கை
ஆதலினு லதுவென்று மறவே விட்டு

*மதவுண்ட வண்டெனவுஞ் சனகனாதி*
*மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்று"*

நமது ஞானசிரியர் தாயுமானவர் அன்றகின்றார். அவ்வஸ்து ஒன்றே, இரண்டல்லவென்று சாந்தோக்யோபநிஷத்து கூறுகின்றது. அது எப்பொருளும் காணேனயாயிருத்தலால். அஃதின்னதெனச் சொல்லமுடியாதென்றும்; அசத்தும் அதிலுண்டாவதால் அது சத்துத்தான் எனச் சொல்லமுடியாதென்றும் ஸ்ருதி சொல்லுகின்றது.

"எதை வேதங்கள் சொல்லுகின்றனவோ, எதை தபஸுகள் முறையிடுகின்றனவோ... அப்பதத்தைச் சுருங்கச் சொல்லுகிறேன். அதுதான் ஓம்; அப்பதமே பிரஹ்மம்; அதுவே பரம்."

என்பது கடோபநிஷத்து. அத்வைதமதத்தின் விசேஷணமென்னவெனில், ஜீவாத்மா பரமாத்மாவின் அம்சமேயாதலின் ஜீவன் பிரஹ்மத்தில் லயமாக ஆஸ்ரயிக்கிறன் என்பதாம். மேற்சொன்ன பரவஸ்து ஒன்று என்பதை எல்லாச் சமயங்களும் ஒப்புக்கொள்ளினும், அதன் தன்மையைப்பற்றி எம்மதமும் சிக்கறச்சொல்லவேயில்லை. அஃதே எல்லாமென்றும், பூர்ணமும் சூன்யமும் அதுவேயென்றும், சுருதிகள் சொல்லுகின்றன. எதைச்சொல்லினும், எதைச்சுட்டினும் இதல்ல, இதல்ல எனுஞ் சித்தாந்தமே பொருந்துமென உபநிஷத்துகள் கூறுகின்றன. பிரபஞ்சம் கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்டதெனும் துவைதமும்; சர்வமும் பிரம்மமெனும் அத்வைதமும்; ஒருவராலும் சிருஷ்டிக்கப்படாது, அல்லது ஒன்றினின்றுந் தோன்றாது, தானேதோன்றி சாஸ்வதமாயுளது பிரபஞ்சமெனும் நாஸ்திகமும் (நம்பத்தக்க தன்மை நீங்கலாக) நியாயவிலக்காயிருத்தலின் சிந்திக்கக்கூடிய தன்மையின்றியவையென அவைகளைத் தள்ளி; மூக மூகமான கடவுள் (Personal God) உளனெனவாதல், இலனெனவாதல் ஒன்றுந் துணிந்துசொல்லாது நடுநிலை வகித்திருந்தது பற்றி உலகத்தோரால் Agnostic எனப் பேர் சூட்டப்பட்டு, மிகுமாட்சிமையுடன்விளங்கிய தத்துவஞானி Spencer என்பவரும், சர்வத்துக்கும் வித்தாய், காரணமாய், சர்வமும் தன் வயமாக்கிக்கொள்வதாய், எண்ணக்கூடாததாய், அறியப்படாததாய், எல்லையற்றதாய், நிராதினமாய், ஆதியந்தமற்றதாயுள்ள பரம்பொருளொன்றுண்டென்பதை மறுத்தவரேயன்று! நமக்கெவ்விதத்திலும் புலப்படாததாய், நம்மாலின் ஆதினை வுணரப்

படாததாய், மனோவாக்குக் ககோசரமாயுள்ள அவ்வஸ்துவை எவ்வகையிலாவது உணர முயலுதல் பலனற்றதாரியமென்பது பிரான்சுதேசத்துத் தத்துவஞானி (philosopher) Comte என்பவர் கொள்கை. இது விசாரணையே கூடாதெனமறுத்தலின், நன்றென நாம் கொள்ளத்தக்கதன்று. மேற்கண்டத்தார் அறியப்படாததென்று சொல்லப்படும்வஸ்து, அறியப்படுவதேயென்று அறைவது நமது கீழ்க்கண்டத்து சித்தாந்தம். மேற்கண்டத்தாரிலும் Plato, Swedenborg முதலானோர் கடவுளைக் காணக்கூடுமென்ற நம்பிக்கையேயுடைத்தாயிருந்தார்கள். கடவுளை எப்படித்தான் காணலாமெனின், நிஜமான பக்தியாலாவது, மெய்ஞ்ஞானத்தாலாவது காணலாமென்பது நமது பெரியோர்களின் துணிபு. இங்கேதான் நமது ஆரியமதத்தின் மேன்மை விளங்குகின்றது. சாமனியருக்கும், தத்துவவிசாரணை யில்லருக்கும் பக்தியே நன்மார்க்கமென ஸ்ரீசங்கரர் மதுர பாஷிதத்துடன் கூறினும், ஞானமார்க்கமே சிறந்ததென்பது அவர்கூற்று. மேற்சொன்ன அணிமாதி சித்திகளால் பிரஹ்மத்தையறியலாமோவெனின், அச்சித்திகள் அசாத்தியமாயும் வியக்கத்தக்கனவாயுமிருப்பினும், சமாதியடைவதற்கு விக்கினங்களாயிருத்தலின், அவைகளை யபேட்சிப்பதே தகுதியன்றென வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அச்சித்திகளைப் பற்றி வேதாந்தங்கள் இவ்வாறு விளம்பினும், அவைகள் கைகூடிய மஹாபுருஷரின் வல்லமையைப் பற்றிப்பேச யார்தரமாகும்? இப்பரதகண்டத்தில் சித்தர் எனப் பேர்பெற்றோர்—திருமூலர் ராமதேவர் அகஸ்தியர் இடைக்காடர் மச்சமுனி தன்மந்திரி கமலமுனி வான்மீகி போகர் நந்திமாமுனி சட்டைமுனி கொங்கணர் கருவூரார் சுந்தரானந்தர் கோரக்கர் சத்தியநாதர் புலிப்பாணி காலாங்கிநாதர்—இப்பதினெண்மரெனச் சொல்லப்படுகிறார்கள். * இவர்களன்றி வேறு சிலருமுண்டென்பது பாரம்பரியவாக்கியம். இச்சித்தர்கள் செய்துள்ள அபாரமான நூல்களை வாசிக்குங்கால், இவர்கள் நமது

* இமயமலைக்கும் விந்தியமலைக்கும் இடையிலுள்ள தேசத்து வசித்திருந்து வேதவிதிகளைத் தவறாது கைக்கொண்டொழுகினவர்களாயிருந்த ஆரியர், திராவிடநாட்டிற் குடியேறுமுன்னரே சித்தர்காலமெனவும்; அச்சித்தராது சாக்தேய மதத்தையே அக்காலத்தவர் தழுவியிருந்தன ரெனவும் ஆராய்ச்சியுள்ள சில அறிவாளிகள் சொல்லுகிறார்கள்.

தேசத்துக்குரிய வைத்தியம், வாதம், ஜோதிஷ முதலிய சகல வித்தைகளும் பூரணமா யுணர்ந்தவர்களாகவும், மாந்திரிக முதலான ரசஸ்யக் கலைகள் நிரம்பிய அநுபவிகளாகவுங் காணப்படுகிறார்கள். ஆயின், இம்மஹாநுபாவர்கள் உலகுய்யும்படி யியற்றிய நூல்களோ பெரும்பாலும் பரிபாஷையும் புதைபொருளுங் கொண்டவையாயிருத்தலின், அம்மறைபொருளைக் கபடின்றி விளங்கச்சொல்வார் கிடைப்பது இக்காலத்து மிகவும் அருமை! மேலும் இத்தென்இந்தியாவில் மோசக்காரப் போலிச்சித்தர்கள் அநேகர் கிளம்பி புராதனநூல்களைப் பலவாறுய்க்கெடுத்துப் புரட்டுநூல்க ளியற்றியிருப்பதால், மேற்சொன்ன மெய்ச்சித்தர்கள் நூல்களின் புராதன மூலவாக்கியங்களும் சுத்தபாடங்களுங் கிடைத்தல் அரிதினுமரிதாயுள்ளது. இதுவும் காலக்கேடுதானே! மேற்கண்ட வைத்திய ஜோதிஷ சாஸ்திரங்கள் முதலியவையும் வேதங்கள் நான்கும் கல்விக்குப் பிரதானமானவையாயினும், இவைகள் அபரவித்தைகளேயென்றும், நாசரஹிதமாகிய பரம்பொருளையறியும் மார்க்கமொன்றே பரவித்தையென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இது நிற்க: அண்டபிண்டங்களின் தத்துவங்களை அநுபவமாகவுணர்ந்து லோகோபகாரமாக வெளியிட்ட மஹா ஞானிகளுள்ளே தலைமைபெற்றவராய திருமூலர், வேதாந்த சாஸ்திரங்களின் நியமனப்படி பஞ்சேந்திரியங்களை யடக்குதல் கூடாதென்றும்; அடக்கில் அறிவற்ற ஜடத்தின் தன்மையடையுமென்றும்; அவை யடங்கு முபாயமறிவதே அறிவென்றும் சாதிக்கிறார்:

"அஞ்சுமடக்கடக் கென்பரறிவிலார்
அஞ்சுமடக்கு மமரரிங்கில்லை
அஞ்சுமடக்கி லசேதனமாமென்றிட்
டஞ்சுமடக்கா வறிவறிந்தேனே"—திருமந்திரம்.

மேற்சொன்ன பரம்பொருள் யாது?

"தத்பதார்த்தமான வஸ்து உண்மையில் நமக்கு மகாசமீபத்திலும், நம்மோடு மிக நெருங்கியுமிருத்தலால், அதைச் சொல்லால் நிர்ணயிக்க முடியாதென்றும்; அது நம்மையன்றிவேறன்றாதலின், அது அதிதூரத்திலுள்ளது, அலது அதிசமீபத்திலுளது எனக் கூறுவதுந் தவறென்றும்; அதை மிக்கதெளிவாய் விவரிக்கும் வாசகம் பரமாத்மா என்னுஞ் சொல்லொன்றே யென்றும்"—'சநாதநதர்மம்' கூறுகின்றது. இவ்வாத்மா பிரஹ்மம் என்பது மாண்டூக்யோபநிஷத்து.

"ஐம்பெரும்பூதமாகி யவற்றுறுகுணங்களாகி
ஐம்பொறியாகியந்தக் கரணமாயறிவுமாகி
ஐம்பெருங்கருமமாகி யனைத்தினுந்தோய்ந்துந்தோயா
ஐம்பெருங்கடவுளாகு மாதிநின்னடிகள்போற்றி"—காசிகாண்டம்.

பிறப்பற்றவனாகவும், ஜரையற்றவனாகவும், மரணரஹிதனாகவும், அமிர்தனாகவும், பயமற்றவனாகவுமிருப்பவனே பிரம்மம் என்பது பிரகதாரண்யகம். இப்பரவஸ்துவை எப்படித்தானறியலாமெனின், பரிசுத்தமனத்தாலும், நிஜபக்தியாலும், மெய்ஞ்ஞானத்தாலும் அறியலாமென்பது உபநிடததாற்பரியம். பாவத்தினின்றும் விலகாதவனும், இந்திரிய சல்லியத்தினின்றும் நீங்காதவனும், பல விவகாரங்களிலலையு மனமுள்ளவனும், சமாதான சித்தமற்றவனும், ஆத்மஞானமடையானென்றும், பிரக்ஞான மொன்றினாலேயே அடைவானென்றும் கடோபநிஷத்து அறைகின்றது.

"மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்."—குறள்.

"சடையினைப் பரித்துந் தலையினைப் பறித்துஞ் சிவரந் தாதுநற்கலிங்கம், உடையெனப் புனைந்து முடைகளைத் தவிர்ந்து மூனுறக்கங்களைத் துறந்தும், படியுநற் சருகும் வாயுவு மயின்றும் பாரொரேல்லிடைத் துயின்றும், இடையதற் றுழலு மிவையருட் சொருபன் மெய்யருட் பெறுதவர்க் கியல்பே."—போதரத்நாகரம்.

மேற்சொன்னவை போலிஞானிகட் கிரியைகளாயிருக்க, மெய்ஞ்ஞானிகட் சின்னங்கள்தான் எவையெனில்—'கந்தரலங்காரம்' கூறும்படி "இராப்பகலற்ற வெளிக்கேயிருக்கை" யெனவும்; நனவிற் சுழுப்திகொண்டிருக்கை யெனவும் அத்வைத வேதாந்தங்கூறுகின்றது.

"அலையுமனத்தை யகத்தடக்கு மவனே சரியை கடந்தோனும்
அலையுமனத்தை யகத்தடக்கு மவனே கிரியை முடிந்தோனும்
அலையுமனத்தை யகத்தடக்கு மவனே யோக தற்பரனும்
அலையுமனத்தை யகத்தடக்கு மவனே ஞானி யதிசூரன்."—
[சிவ்டானுபூதி.

பாஷாவன்மையும், கல்விப்பெருக்கும், பிரசங்கசாமர்த்தியமும் Annie Besant அம்மையைப்போலுடையார் யாவரேயாயினும், அவரவர்பேர்ற் கல்விச்செருக்கும், ஒழுக்கமின்மையும், தாம் சக்கரநெறிபிறழ்ந்தவழி தம்மை நியாயகண்டனஞ்செய்வாரைத் தாமசமிகுந்து இகழ்வதும், நிந்திப்பதும்; தம்மைப் புகழ்

வோரன்றி ஏனையோர்பால் அன்பும் தயையும் பாராட்டுந்தன்மையும் உடையவரேயாயின், அவர் ஒருக்காலும் பிரஹ்ம-நிர்வாணத்தை யடையார்களென்பது திண்ணம்! திண்ணம்!

" ஐயறிவறிந்தவை யடங்கினர்களேனும்
மெய்யறிவிலாதவர்கள் வீடதுபெருரே "—சசிவர்ணபோதம்.

" ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையாரில் "—குறள்.

பிரஹ்மம் "புலனறிவுக்கு அதீதமான ஞானத்தா லறியத்தக்கதென்றும், சூக்ஷ்மமானதென்றும், அவ்வியக்தமானதென்றும், புராதனமும் சர்வபூதமயமுமாயுள்ளதென்றும், நித்தியமானதென்றும்" மநு ஸ்மிருதிகூறுகின்றது. பிரஹ்மம் ஸகுணமூர்த்தியென்றும், சத்தென்றும் சித்தென்றும் (அக்ஷரர்) நாசரஹிதரென்றும், ஆனந்தமயமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வண்ணம் அமிர்தத்வமுடையராய், அந்தர்யாமியாய், சர்வ புவனங்களிலும், சகல பூதங்களிலும் நீக்கமற்று எங்கும் வியாபித்து, நியந்தாவாயுள்ள பிரஹ்மத்தைப்பற்றி பிரகதாரண்யகோபநிஷத்து, இவ்வாறு மாட்சிமையுடன்மொழிகின்றது:

"பார்க்கப்படாமல் பார்க்கிறுன்; கேட்கப்படாமல் கேட்கிறுன்; நினைக்கப்படாமல் நினைக்கிறுன்; அறியப்படாமல் அறிகிறுன். அவனன்றிப் பார்ப்பவன் வேறொருவனுமில்லை; அவனன்றிக் கேட்பவன் வேறொருவனுமில்லை; அவனன்றி நினைப்பவன் வேறொருவனுமில்லை. அவனன்றி அறிபவனும் வேறொருவனுமில்லை. அவனே ஆத்மா; அவனே அந்தர்யாமி; அவனே அமிர்தஸ்வரூபி; அவனைவிட மற்றதென்பது அழியும்"—சநாதநதர்மம்.

இப்பிரமபதத்தைக் கிட்டியவர்கள் யாவரெனின், பரிசுத்த ஞானிகளாம். அவர்களைத்தன்மையரெனின், 'பரமார்த்த தரிசனம்' கூறுகின்றது:

" காரணமிறந்தொன்றிற்குங் காட்சியிற்படாதவொன்றைச்
சேர்பவர்வருத்தம்வேறு செப்பிடலாவதன்றால்
ஓர்வரிதித்தான்வாழு முயிர்களாலாவதன்றே
ஆரவர்பெருமைதன்னை யளவறுப்பவர்களையா."

" இங்குஞ்சின் மாத்திரப்பொருளா மோங்காரத்தை யுண்ணினைந்து
தூங்குந்தியான பரனுகித்தொடர் சங்கற்ப மெல்லாம்போய்
வாங்குந்தொழி லிடணையய்ய மனன்ஞான் ஞேயயிவை
தாங்குனுதாவினைத்து மறத்தனிச் சித்திரம்போ னெடிதிருந்தான்."
—ஞானவாசிஷ்டம்.

அஞ்ஞானிகள் மனேலயஞ் செய்வாராதலின் வாக்கும் காயமு மனசுமற அடங்குதலே நியமமாகக் கொண்டவரென்பது பெற்றும் :

"ஓடியுழன் றிந்தவுடம்பை யொருதேசீ
பாடிமிடற்றைப் புண்படுத்தாதே —கேடுபிறர்க்
கும்மால்விளையாதே யொன்றுடனும் தாக்காதே
சும்மாவே காணுஞ் சுகம்."

"ஓடாதே தேடாதே யுன்னாதே யோஸ்சையெழப்
பாடாதே சாத்திரங்கள் பன்னாதே—கேடுபிறர்க்
கும்மாலே செய்யாதே யொன்றாதே யொன்றுமறச்
சும்மா விருக்கை சுகம்."—சிவானந்தமாலை.

நிஜநிஷ்டைகள் கைகூடி பிரமானந்தம்பெற்றுள்ள ஞானிகளின் செயல்தானென்வாறுளதெனின், 'அஞ்ஞைவதைப்பரணி' கூறுகின்றது:

"தெளியு மூளத்தார் சிலவர் தெளிப்பார்
சிலவர் களிப்பார் சிலவர் திகைப்பார்
அளியு மூளத்தோ டழுது சிரிப்பார்
அவர்கள் செயற்பா டறிய வொணாதே."

கட்டுக்கதைகளைக் கைவிடுத்து, அசாஸ்திரீயமான(unscientific) ஆபாசநம்பிக்கைகளையறவே யொழித்திருப்பது நன்மதம். அது சுத்தாத்விதமெனவே கூறலாகும். இதுவே எந்நாட்டிலும், எத்தேசத்திலும் பேரறிவாளர் தாழவியிருக்கும் மதமாம். இவ்வத்துவிதமதத்திற்கு நாட்டமாயுள்ள பரம்பொருளை நமது தென்னாட்டில் பரமஞானியாய் விளங்கியிருந்த தாயுமானவர் அடியில்வருமாறு துதிக்கிறார் :

"நித்தியமாய் நின்மலமாய நிட்களமாய் நிராமயமாய் நிறைவாய் நீங்காச், சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை சுடராயெல்லாம், வைத்திருந்த தாரகமா யானந்தமயமாகி மனவாக் கெட்டாச், சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தைசெய்வாம்."

"ஆறுசம யங்கடொறும் வேறுவே றாகிவிளை
யாடுமொரு யாவரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்தமான பரமே."

" துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்
துரியனே துரியமுங் காணுவ தீதனே
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணைவடிவே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்தமான பரமே."

" தானனதன்மயமே யல்லாலொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட்டாங்கே
போனதுங்கர்ப்பூர தீபம்போலப்
போயொளிப்பதல்லாது புலம்வேறின்றும்
ஞானகாரத்தினெறி ஞேயமற்ற
ஞாதருவு கழுவாம னமுவிசிற்கும்
ஆனவமிதன்பெருமை யெவர்க்கார்சொல்வார்
அதுவான லதுவாவ ரதுவேசொல்லும்."

" கற்றுமென்பலன் கற்றிடுமுன்முறை
சொற்றசொற்கள் சுகாரம்பமோநெறி
நிற்றல்வேண்டு நிருவிகற்பச்சுகம்
பெற்றபேர்பெற்ற பேசாப்பெருமையே."

சற்குருகடாக்ஷ முன்னிற்க.

" அறிவுடையாரெல்லா முடையாரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்."—இது திருக்குறள்வாக்கியம்.

அறிவிற்பெரியா ராதிசங்கரர்
கருணையின்மிக்கார் கௌதமபுத்தர்
ஆதலினவரை யாமென்று மறவோமே.

# வேதாந்தபோதினி

அல்லது

## சமரஸஞான போதினி

முற்றிற்று.

---



ஓம்

சற்குருவேநமஃ

# வேதாந்தபோதினி

அல்லது

## சமரஸஞானபோதினி




இஃது

PHILOSOPHIC INQUIRER—பத்திராதிபராயிருந்த

தத்துவவிசாரிணி

**புதுவை—முருகேச முதலியாரால்**

எழுதி

சீலசம்பன்னராயும் வித்யாபிமானியாயும் விளங்கிய

**கொண்ணூர்—லோகநாத முதலியாரது**

ஞாபகச்சின்னமாகச் சமர்ப்பித்து

கோ - செல்வரங்கம் அன்டு கோ

அவர்களால்

சென்னை

மநோன்மணி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

காளயுக்தி௵ வைகாசி௴—May 1918.

COPY-RIGHT REGISTERED.

இதன் விலை அணா-8.

## ரெஜிஸ்டர் அறிவிப்பு.

இதனல் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்: வேதாந்த போதினி அல்லது சமரஸஞான போதினி என்னு மிந்நூல் எங்களால் பதிப்பித்து பிரசுரம் செய்து, காபிரைட் ரெஜிஸ்டரும் செய்யப்பட்டுள்ளது. இப்புஸ்தகத்தை யாவராயினும் எங்களது அல்லது எங்களுத்தரவு பெற்றவரது அநுமதியின்றி அச்சிடுவாராயின், 1867ஸூத்திய 25-வது ஆக்ட்டு, 20-வது பிரிவு, 6-வது உட்பிரிவின்படி, நாங்கள் கோரும் நஷ்டத்திற்கும் இந்தியன் பீனல் கோடு சட்டப்படி குற்றத்திற்கும் உள்ளாவார்கள் என்பதைக் கவனிக்கக் கோருகிறோம்.

இப்படிக்கு,

கோ. சேல்வரங்கம் அன்டு கோ.,

மநோன்மணி விலாச அச்சுக்கூடம்,

29-நெ. வைத்தியநாத முதலியார் வீதி,

சென்னை.

# பொருளடக்கம்.



# நூன்முகம்



கடல் சூழ்ந்த இப்பூவுலகத்துள்ளே மதங்கள் பலவுள. அவைகளுள் அதிப் புராதனவேதங்கள், உபநிடதங்கள், ஸ்மிருதிகள்—இவைகளின் மஹிமையும், சித்தாந்த வேதாந்த சாஸ்திரங்களின் பெருக்கமும் உடையது நமது ஆரியமதமே யென்பது பன்மதமாய்ந்துணர்ந்தோர் துணிபாம். இப்பரந்த பூமியிலெழுதப்பட்டதாயுள்ள மதநூல்க ளெல்லாவற்றிலும் ரிக்வேதமே அதிப்பழமையானது, அதி முதன்மையானது என்பது பெரும் புகழ்பெற்ற பண்டிகர் மாக்ஸ் முல்லர் (Max Muller) கொண்ட அபிப்பிராயம். இதனாலே எல்லாத் தேசங்களிலும் நாகரிகப் பழமைபெற்றது நம்தேசமே யென்பது நன்குவிளங்கும். எந்நாட்டிலும் மதங்களும் மதக்கோட்பாடுகளும் பல் வேறனவையாயினும், மதநம்பிக்கைமட்டுமே யுடையார் பெரும்பாலராயும், மத ஆராய்ச்சியுடையோர் சிறுபான்மையராயுமே யிருக்கிறார்கள். இத்தகையோரிலும் தத்துவவிசாரமுடையார் மிகச் சிலரேயாம். ஆதலின், பூர்வ மத விவரங்களும் வரலாறுகளும், நமது நாட்டிற்கேயுரிய வேதாந்த சாஸ்திரக்கொள்கைகளும், ஓரவாரமின்றி யாராய்ந்துணர்தல் அறிவுடையோர் கடனாகும். "எல்லாம் சோதி, நன்மை திடமாய்ப்பிடி" என்பது ஸெயின்ட் பால் (St. Paul) வாக்கியம்.

முன்னோராலும் பின்னோராலும் இக்காலத்தாராலும் வேதாந்த மதங்களைப்பற்றிய நூல்கள் தனித்தனியாக பல செயப்பட்டுளவாயினும், பிரதானமான வேதாந்தங்களின் கருத்துகளை யொருங்கு திரட்டி, பக்ஷபாதம் தூரபிமானமின்றி, நியாய கண்டனத்துடன் விளக்கச்செய்யும் தமிழ்நூல் யானிதுகாறுங் கண்டதில்லை. இஞ்ஞாயத்தால் 'வேதாந்தபோதினி' அல்லது 'சமரஸஞானபோதினி' என்னு மிச்சிறுநூல் நூதன நூலென்றே கூறத்தகும். இப்புஸ்தகத்தில் எழுபதுக்குக்கிட்ட அரிய, அதிமுக்கியமான விஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூலெழுதுவதில், யான் சித்தாந்த வேதாந்தங்களைப்பற்றிப் பேசுஞ் சில பிரதானமான நூல்களை யாராய்ந்து, சில விடங்களில் அவற்றுளுள்ளபடியேயாகவும், சில விடங்களில் சூசனமாகவும், வேறு சிலவிடங்களில் எனது ஊகமுங்கூட்டி விரிவாகவுமெழுதினேனன்றி, எல்லா மபூர்வத்துவமாகச் செய்தேனன்று.

# நூன்முகம்

மதகண்டனங்கள் செய்த விடங்களில் உள்ளதை வெளிகாட்டி ஞாயகண்டனஞ் செய்தேனல்லது, இல்லதைக்கொண்டு தோஷாரோபணஞ் செய்திலன். ஆதலின், அந்நியாயவாதங்களைத் தூஷணங்களாகக்கொள்ளாமை அறிவுளோர்கடனும். தர்க்கித்த அவ்வவ்விடங்களிலெல்லாம் தவறாது தக்க பிரமாணங்களும், பெரியோர் மொழிகளாய மேற்கோள்களும் காட்டியுள்ளேன். உலகத்துள்ள பல மதஸ்தரும் தத்தம் மதங்கள் கடவுளாலேயே யளிக்கப்பட்டனவென்னும் நம்பிக்கையுடையராயிருக்கிறார்கள். இது சுத்தத் தப்பானவெண்ணமேயாம். கடவுளாலேற்பட்ட மதமொன்றுமேயில்லை. எம்மதமும் பெருமதியுள்ள மனிதனலாக்கப்பட்டதேயாம். கடவுள் தம்மைத் துதித்துத் தொழும்படி தாமேயறிவிப்பாரா? ஒரு மதத்தைத் தழுவவும்,பிறிதொருமதத்தையிகழவும்போதிப்பாரா? தோஷமிலா மதமேயில்லை. குற்றமிலாக் கோட்பாடில்லை. தவறிலாத் தத்துவநூலில்லை. ஸர்வஸம்மதமான மதமுமில்லை நிரீசிரமிய புத்தமதம் பிரமத்தில் லயிப்பதே முக்தியெனக்கூறாது, அலையுமனதிற்கோராறுதலுஞ் செய்யாது, அறுதியே கோரி அதுவே முக்தியெனவறைதலால் அதனை, ஆழ்ந்த கருத்துள்ளவோர் ஐரோப்பிய பண்டிதர்—‘எலும்பிலா - எலும்புக்கூடு’ (boneless - skeleton) எனவழைத்தார்! இப்புஸ்தகமெழுதவெனது வர்த்தனைசொற்பமே. கைம்மாறோ கிடையாது. இந்நூலை யெப்படியாவது முடிக்கப் பன்முறையென்னை யூக்கிவிட்டவெனது பழையநண்பர் சிலரெண்ணப்படி யிதனை யின்னும் விரிவாக வெழுதாமைக்குக் காரணம், இக்காலத்து அச்சிடற்குத் தேவையான காகிதமுதலிய உபகரணங்களின் மிதமிஞ்சிய விலையேற்றமேயாம்.

இத்தகைய நூலை யெழுதி பிழைபார்ப்போர்(proof-readers) இல்லாத அச்சுச்சாலையில் ஒருவருதவியுமின்றி யச்சிடமேற்கொண்டால் அச்சுப்பிழைகளிராமலிரா. ஆதலின் பிழைகாணின் பொறுத்தல் நல்லோர்க்கழகாகும். பணிவுள்ள விந்நூலையியற்ற யான்கொண்ட சோதனைபிரயாசத்தை விவேகிகள் நன்கு மதிப்பராயின், அதுவே யெனக்குப்போதிய கைம்மாறாகக் கணிப்பேன்.

சென்னை
காளயுக்திஹூ
வைகாசிமீ ௧௬உ
29th May 1918.

முக்தர்பிரியன்
ப.கமிலி
புதுவை-முருகேசன்.

